

21/2



# ப்ரஹ்ம ஸூத்ரம்

சங்கர பாஷ்யம்

மூன்றாவது அத்யாயம்



தமிழ் உரைஆசிரியர்
ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்
வேதாந்த ஆச்சாரியாள்,
தலைவர்,
ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்
அவனியாபுரஞ்சாலை, தெற்குவாசல்,
மதுரை-1.







# ப்ரஹ்ம ஸூத்ரம்

## சங்கர பாஷ்யம்

### மூன்றாவது அத்யாயம்






தமிழ் உரைஆசிரியர்

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

வேதாந்த ஆச்சாரியாள்,

தலைவர்,

ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

அவனியாபுரஞ்சாலை, தெற்குவாசல்,

மதுரை-1.

---



1984

விலை ரூ. 15—00

ௐ

# குரு மங்களை ஸ்துதி

---

ஓம் நமோ ப்[3]ரஹ்மாதி[3]ப்[4]யோ

ப்[3]ரஹ்ம வித்[3]யா ஸம்ப்[4]ரதாய கர்த்ருப்[4]யோ

வம்ச ரிஷிப்[4]யோ மஹத்[3]ப்[4]யோ நமோ

கு[3]ருப்[4]ய :

## பொருள்:-

பிரஹ்ம வித்தை எனப்படும் உபநிஷத் ஞானத்தை இவ்வுலகில் பரப்பிய பிரஹ்மா முதலான (வசிஷ்டர், வியாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்தபாதர், சங்கரர்) அனைவரையும், வழிவழியாக வந்த ரிஷிமஹான் களான குருவரர்களையும் வணங்குகிறோம்.

21/2

## பகவான் சங்கரர்

## சங்கர ஸ்துதி

3        3        3
குருபுங்கவ ! புங்கவ கேதன ! தே
ஸமதாமயதாம் நஹி கோபி ஸுதீ
     3                    4
சரணாகத வத்ஸல ! தத்வ நிதே !
4        3
பவ சங்கர ! தேசிக ! மே சரணம்

பொருள் :-

குரு சிரேஷ்டரே ! உயர் குருநாதரே !
உமக்கு சமமான ஞானிகள் எவருமிலர்.
சரணடைந்தோர்க்கு அருள்பவரே !
தத்வஞானக் களஞ்சியமே !
ஹே சங்கர ! ஹே தேசிக ! எனக்கு
சரணமளிப்பீராக.

பவ சங்கரதேசிகமே சரணம்

# இந்நூல் உரையாச்சாரியாள்



ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

யோக வேதாந்த ஆச்சாரியாள்.

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்.

அவனியாபுரஞ்சாலை,

தெற்கு வாசல்,

மதுரை.



# பவசங்கர தேசிகமே சரணம்

## மூன்ருவது அத்யாயத்தின் முன்னுரை

எறும்பும் ஒரு ஜீவன் இரண்ய கர்ப்பனும் ஒரு ஜீவன். இதற்குள் ஏனைய ஜீவராசிகள் அடங்கும். எதற்கு உயிரிருக்கிறதோ அது சேதனம், எதற்கு உயிரில்லையோ அது ஜடம். உயிரில் பொருளில் துரும்பு முதல் மாயை யீருகவுள்ள பொருள் முழுதுமடங்கும். இவைகளில் ஜடப் பொருளை நீக்கிவிட்டு உயிரினங்களனைத்தும் விரும்புவது சுகமொன்றே.

இதை நாம் கண் கூடாகக் காண்கிருேம். எறும்பு இனிப்பை விரும்புகிறது கசப்பை விரும்புகிறதில்லை. இம்முறைதான் எவ்வுயிருக்கும். யான் விரும்புவது இன்பமே விரும்பாதது துன்பமே என்றபடி. ''சுகமே பூயாத் துக்கமா பூத்'' என்பது வேதவாக்கு. எனக்கு இன்பமுண்டாகட்டும். துன்பமுண்டாகாமல் இருக்கட்டும் மென்பது இதன் பொருள்.

உவகையைத் தருகின்ற விருத்தி விசேஷம் இன்பம். கவலையைத் தருகின்ற விருத்தி விசேஷம் துன்பம். இவையிரண்டும் இரண்டிடத்தில் இருக்கின்றன. ஒன்று பிரஹ்மத்தின் கண்ணும் மற்றொன்று உலகத்தின் கண்ணுமிருக்கின்றன. பிரஹ்மத்தை யறிந்தவனுக்குப் பேரின்பமும் பெருதவனுக்குப் பெருந்துன்பமும் என்று பெரும் மறை பேசுகின்றது.

பிரஹ்மத்தை விளக்கும் நூல்கள் பல. அவற்றுள் பிரஹ்ம சூத்திரம் தலையாய நூல். இந்நூலையருளியவர் முனிகளில் சிறந்த வியாச முனிவர். சுருக்கமான எழுத்துக்களால் பெருக்கமான பிரஹ்மத்தை விளக்குவதால் இந்நூல் பிரஹ்ம சூத்திரமெனப்பட்டது.

பிரஹ்ம சூத்திரம் நான்கு அத்யாயத்தோடு கூடியது. இதற்கு முந்திய இரண்டு அத்தியாயம் குருபரன் திருவருளால் வெளி வந்திருக்கிறது. இம்மூன்ருவது அத்யாயம் இப்பொழுது வெளிவருகிறது.

இவ்வத்யாயத்திற்குச் சாதன அத்யாயமென்று பெயர். இதில் பிரஹ்மத்தைப் பெறுவதற்குரிய சாதன முழுதையும் வியாசர் பேசியிருக்கின்ருர். ஜைமினி மொழிந்த கருமங்களனைத்தும் அகத் தூய்மைக்கும், ஞானம் முக்திக்கும் ஏதுவாகின்றன. கருமம் பகிரங்க சாதனமெனவும் ஞானம் சாக்ஷாத் சாதன மெனவும் சாற்றப்படும். இவையிரண்டையும் இவ்வத்யாயத்தில் பகவான் வியாசர் இனிமையாய் இயம்பியிருக்கின்ருர். இதனல் இஃது சாதனுத்யாய மெனப்படுகின்றது.

இந்நூலே தமிழாக்கஞ் செய்து தந்தால் தமிழ் மக்கள் பெரும் பயனடைவார்கள் என்று கூறி ஆக்கத்தையும் ஊக்கத்தையும் அளித்தப் பெண்ணரசி, புண்ணிய சாலினீ, ஸ்ரீமதி தங்கமணியம்மையாருக்கும் அன்னூர் கிளேஞருக்கும் எமது குல தெய்வமாகிய பகவான் சங்கரன் அருளேயும், பொருளேயும், ஆயுள் முழுதையும், அள்ளிக் கொடுத்து அருள் புரிவானுக.

இந்நூலே யச்சுக் கூடத்தில் ஏற்றிப் புத்தக வடிவமாக ஆக்கித் தந்த மீனும்பிகை அச்சகத் தலைவரும் திரு ஞானசம்பந்தமென்ற அப்பாவு பிள்ளேயவர்களும் அன்னூர் குடும்பத்தினரும் என்றும் இன்புற்று வாழ இறைவனே யிறைஞ்சுகின்றேன்.

இந்நூலின் உரையாச்சாரியாள்

**ஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள் வேதாந்த ஆச்சாரியாள்.**
*மதுரை பிரம்மானந்த சுவாமிகள் மடத்தின் தலைவர்.*
தெற்குவாசல். **பிள்ளேயார் பாளேயம் சாலே.**
**மதுரை** - 1.



# பவசங்கர தேசிகமே சரணம்

## பிரஹ்ம சூத்திரத்தின் மூன்ருவது அத்தியாயம்

இவ்வத்தியாயத்திலும் முந்திய அத்யாயத்தைப் போல நான்கு பாதங்கள் உள. இந்த அத்யாயத்திற்குச் சாதன அத்யாயமென்று பெயர். இதன் முதற்பாதத்தில் ஜீவனுக்குப் போக்கு வரவு (உத்க்ராந்தி) உடலைவிட்டு ஒருவுதல், வைராக்கிய முதலிய சாதனங்களைப் பற்றிச் சிந்திக்கப் படுவதால் சாதனுத்யாயம் என்பது சாலப் பொருத்தம்.

இரண்டாவது அத்யாயத்தில் உபநிஷத்துக்களால் உரைக்கப் பெற்ற பிரஹ்ம ஞானத்தில் ஸ்மிருதி நியாயங்களால் வந்த விருத்தத்தைப் பகவான் வியாசர் விலக்கினுர். வாயைப் படைத்தவர்கள் வல்லதைச் சொல்வார்கள். அதை நாம் ஆராயக்கூடாது. ஜீவனுக்கு வேருகவும், ஜீவனுக்கு உபகரணங்களாகவும் உள்ள கருவி கரணங்கள் பிரஹ்மத்திலிருந்து உண்டாயின என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த அத்யாயத்தில் ஜீவன் சூட்சும பூதங்களோடு சுவர்க்க முதலிய உலகங்களில் எவ்வாறு உலாவுகிருன் என்று ஆராயப்படுகிறது.

### 1 தத[3]ந்தர பிரதிபத்தியதி[4] கரணம் சூ. 1—7

சூ.தத[3]ந்தர பிரதிபத்தௌ ரம்ஹதி சம்பரிஷ்வக்த: பிரஸ்ந நி ரூபணுப்[4]யாம் 3-1-1

தத[3]ந்தர, பிரதிபத்தௌ, ரம்ஹதி, சம்பரிஷ்வக்த:, பிரஸ்ந, நிரூபணுப்[4]யாம் என்று பிரிக்கவும்.

அ.3-பா.1

ப. உ. ததந்தர பிரதி பத்தௌ = (ஜீவன்) வேறு உடலை யெடுக்கும் பொழுது. சம்பரிஷ்வக்த : = உடலுக் குரித்தாய சூட்சும பூதங்களோடு, தூமாதி மார்க்கமாக, சுவர்க்க முதலிய உலகங்களில், ரம்ஹதி – செல்கின்றான். பிரஸ்ந நிரூபணாப்யாம் = வினா விடைகளால், (என்பது கருத்து) தூமம்-புகை.

வி. உ. ஜீவன் இவ்வுலகை விட்டு மேல் உலகங்களில் எவ்வாறு உலாவுகிறான். இதனால் இவனுக்கு எவ்வளவு துன்பம் உண்டாகிறது என்பதைப் பற்றி நன்கு ஆராயப்
3 3
படுகிறது. ''தஸ்மாத் ஜுகுப்ஸேத்'' இதனால் வைராக்யத் தையடைய வேண்டும் என்பது கருத்து. மேலுலக முதலிய போகங்களில் வெறுப்பு வரவேண்டும் என்று சுருதி கூறு கின்றது. அதனால் தான் ஜீவனுடைய போக்கு வரவைப் பற்றி இங்கு பேசப்படுகிறது.

பஞ்சாக்னிவித்தை - ஐந்து பொருள்களில் அக்னி புத்தியை வைத்து வழிபடுவது. வித்தை - உபாசனை. பஞ்சம் - ஐந்து. அவை வருமாறு - துவிலோகம், பர்ஜன்யம், பூமி, பெண், ஆண்; இவை ஐந்தும் ஐந்து அக்னியாகும். இவைகளுக்கு ஐந்து ஆகுதிப் பொருள்கள். அவை வருமாறு-சிரத்தை, சோமம், மழை, அன்னம், வீரியம். இவை ஐந்தையும் மேலே சொன்ன அக்னியில் முறையாக ஆகுதிகொடுக்க வேண்டும் என்று கூறும் வித்தை பஞ்சாக்னி வித்தையெனப்படும்.

ஜீவன் அரசனென்றால் ஐந்து பிராணன்களும் அமைச்சர்களாகும். ஜீவன் எங்கே சென்றாலும், இவன் பின்னால் இந்திரியங்கள், பிராணங்கள், மனம், (அவித்தை) அக்ஞானம், கருமம், (பூர்வ பிரக்ஞா) வாசனை செல்லும்.
2 4
''அதைனம் ஏதே பிராணா அபிசமாயந்தி'' பிரு-உ (4-4-1-)

அத = மரணகாலத்தில், ஏனம் = இந்த ஜீவனே, ஏதே பிராணு: = கரணங்கள். அபிசமாயந்தி = (இதயத்தில்) அணுகி நிற்கின்றன என்பது சுருதிப் பொருள். மேலும் ''அன்யன் அவதரம் கல்யாணதரம்ரூபம் குருதே'' பிரு. உ. (4-4-1) அன்யன் அவதரம் = முந்திய உடலே விட்டு. கல்யாண தரம் ரூபம் குருதே = புதிதாகவும், அழகாகவும், உள்ள உடலேச் செய்கின்ருன் என்பது பிந்திய சுருதியின் பொருள்.

இதனுல் நல்வினே தீவினே விளேவான இன்பதுன்ப மான போகங்கள் ஜீவனேப் பற்றும் என்பது துணிபு. அவ்வாருன ஜீவன், காயத்திற்கு வித்தான சூட்சும பூதங்களோடு செல்கின்ருனு அல்லது அவைகளே விட்டுத் தனியாகச் செல்கின்ருனு என்று இங்குச் சிந்திக்கப்படுகிறது.

பூத சூட்சுமங்களோடு செல்லவில்லே. அசம்பரிஷ்வக்த :, எங்ஙனந் தெரிகிறதெனின்? கரணங்களேப் போலப்
3
பூதங்களேக் கூருததால். ''ச ஏதா தேஜோமாத்ரா: சமப்ய
3 3
ஆததான:'' பி. உ. (4-4-1) என்றது மறைமொழி. தேஜோமாத்ரா: = பிராண முதலிய கருவிகள். இவைகளே ச = ஜீவன்
4 3 3
சமப்ய ஆததான : = நன்ருக எடுத்துச் சென்று (இதயத்தில்) உலாவித் திரிகிருன் என்பது சுருதிப் பொருள்.

இதனுல் மறைகள் கரணங்களே உரைக்கின்றதே ஒழிய பூதங்களேயல்ல. இஃதல்லாமலும் வாக்கியத்தின் முடிவில் கண்முதலிய கரணங்களேக் கூறியிருக்கின்றன. இங்கு பூதங்களேக் குறிப்பிடவில்லே. மேலும் பூதங்கள் எவ்விடத்தும் எளிய முறையில் கிடைக்கும். யாண்டு யாண்டு அடுத்த உடல் எடுக்க வேண்டுமோ ஆண்டு ஆண்டு அப்பூதங்கள் கிடைக்கும். யாண்டு-எங்கு. ஆண்டு-அங்கு எனவே பூதங்களேயெடுத்துச் செல்வது பயனற்றதாகும். ஆகையால் 'அசம்பரிஷ்வக்த:, பூதங்களோடு புணராமலே ஜீவன் செல்கின்ருன்

என்பதுபிரதி வாதி மதம். பிரதிவாதி-பூர்வபட்சி. புணர்தல் பொருந்துதல். புணராமல்-பொருந்தாமல்.

சித்தாந்தி - நீ மொழிவது முறையன்று. எதனுலோ வெனின்? 'சம்பரிஷ்வக்த:' இதனுல் என்ன தெரிகிறதென் பாயாகில், பூதசுட்சுமங்களோடு செல்கின்ருன் என்பது தெரிகின்றது. மேலும் எங்ஙனந் தெரிகிறதென்பாயாகில், 'பிரஸ்ன நிரூபணுப்யாம், விஞவிடைகளாலும் நன்குபுலனும். பிரவாகணன் என்னும் மன்னன் சுவேதகேதுவினிடம் ஏ சுவேதகேதோ! பஞ்சாக்னி வித்தையில் ஐந்தாவது ஆப: (தண்ணீர்) புருஷவடிவம் எப்படி ஆகிறது என்று வினவி, மீண்டும் அவனே விடையளித்தனன். அவன் என்பது மன்னனை.

ஆப:, என்றசொல்லால் ஜீவனேடு சூட்சும பூதங்கள் செல்கின்றன என்பது புலனுகின்றது. அட்டையெங்ஙனம் ஒன்றைப் பற்ருமல் ஒன்றை விடாதோ, அது போல இந்த ஜீவனும் புதிய உடலைப் பற்ருமல் முதிய உடலை விடுவதில்லை என்று சில ஆரணம் அருளுகின்றன. ஆரணம்-வேதம். இருப் பினும், அட்டை அதுவும் நீரோடு பொருந்தி அடுத்ததைப் பற்றிய பின் அண்டியதை விடும். இதற்குப் பொருள் என்னை யெனின்! புழுநீண்டது என்பது கருத்து. இதனுல் குற்றம் ஒன்றுமில்லை. இம்மாதிரி அடுத்தஉடல் எடுக்கும் விஷயத் தில் மக்கள் மனதில் பல கற்பனையுதிக்கின்றன. ஆத்மா, பொறிகள் முதலியவைகளுக்கு இயல்பாக வியாபகம் உண்டு என்று எண்ணங்கள் உதிக்கும். அவர்கள் கூறும் வியாபகம், ஆன்மாவைச் சாருமேயன்றிப் பொறிகளைச் சாராது. இன் னும் சிலர்-கிளியொரு மரத்திலிருந்து இன்னெரு மரத்திற்குத் தவ்வி அந்த மரத்தை எவ்வாறு பற்றுகிறதோ அதுபோல இந்த ஜீவனும் ஒரு உடலை விட்டு இன்னெரு உடலை அடை கிருன் என்பர். இவர் கற்பனை சூன்யத்தில் சுழல்வதால் இதை எள்ளித் தள்ளவேண்டும். சூட்சும பூதங்களோடு விரும்பிய உலகத்திற்கு ஜீவன் செல்கின்ருனென்பது கருத்து. சூ:1

*அவதாரிகை*

ஆனல் முந்திய சூத்திர மூலமாகத் தண்ணீர் என்ற ஒரு பூதத்தோடு ஜீவன் செல்கின்ருன் என்று தெரிகிறது. அங்ஙனம் இருக்க எல்லா பூதங்களும் இவனோடு செல் கின்றன என்பது எங்ஙனம் பொருந்தும் என்ற கேள்விக்குப் பதில் வருமாறு :-

4

## ஸூ. த்ரயாத் மகத்வாத்து பூயஸ்த்வாத் 3—1—2

த்ரயாத்மகத்வாத், து, பூயஸ்த்வாத் என்று பிரிக்கவும்.

ப.உ. து, சப்தம் பிரதிவாதி முரணை முறியடிப்பதற்கு. த்ரயாத்மகத்வாத் = மூன்று பூதமும் கலந்திருப்பதால். பூயஸ்த்வாத் = நெருப்பு, நிலம் இவையிரண்டையும் விட, உடலில் நீர் மிகுதியாயிருப்பதால் என்பது பொருள். இதுமூலமாகவும் நீரோடு ஏனைய இரண்டு பூதமும் செல் கின்றன என்பது தெளிவு.

வி.உ. திரிவிருத்கரண சுருதியினல் நீர் மூன்றின் வடிவம். நிலமும் நெருப்பும் கலந்தவை யென்பது கருத்து. உடலை யுண்டுபண்ணுவதற்கு நீர் காரண மென்ருல் ஏனைய இரண்டும் காரணம் என்பது சொல்லாமலே தெரிகிறது. உடலும் மூன்று பூதத்தின் வடிவமாகும். அதில் நிலம், நீர், நெருப்பு காணப்படுகின்றன. வேறு விதத்திலும் தேகம் மூன்று காரியத்தின் வடிவம் – வாதம், பித்தம், ஸ்லேஸ்மம். இவை மூன்றும் மூன்று தாதுக்கள். வேறு இரண்டையும் விட்டு விட்டு நீரொன்றினல் உடலை யுண்டுபண்ண இயலாது. எனவே நீர், புருஷ வடிவமாகிறது என்று மொழிந்தது நீரை மட்டும் குறிப்படுவதல்ல, பின்னே? நீரின் மிகுதியைக் குறிப் பிடுகிறது.

உடலில் எல்லா அம்சங்களைப் பார்க்கினும் ஜலாம் சந்தான் அதிகமாயிருக்கிறது. சுக்ர சுரோணித வடிவந்தான் காயம். இவையிரண்டிலும் சுக்ரம் மிகுதியாகும். உடலுக்கு நிமித்தம் கருமம். அது ஓம வடிவமாயிருக்கிறது. ஓம திரவியங்களில் இளகிய பொருள்தான் மிகுதி. இங்கு உரைக்கப் பெற்ற நீர் சிரத்தை யென்று சொல்லப்படுகிறது. சிரத்தை—நம்பிக்கை. ஆக நீர் என்ற சொல்லால் மற்றைய இரண்டையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். சூ. 2.

*அவதாரிகை*

வேறுவிதமாகவும் சூக்கும பூதங்களோடு ஜீவன் செல்கிருன் என்பதை வலியுறுத்தும் பொருட்டு சூத்திரம் :-

## சூ. ப்ராணகதேஶ்ச 3—1—3

(3 ப்ராண, 1 கதேஶ்ச)

பிராண கதே :, ச என்று பிரிக்கவும்.[1]

ப.உ. ச = மேலும். ''தம் உத்க்ராமந்தம் பிராணே அநுத்க்ராமதி'' இந்த சுருதியினுல் ஜீவனோடு இந்திரியங்களும், பிராணனும் செல்வதாகச் செப்பியிருக்கிறது. செப்புதல்-சொல்லுதல். இதனுலும் ஜீவன், சூக்கும பூதங்களோடு செல்கின்றனன் என்று தெரிகிறது.

வி.உ. ஜீவன் இன்னொரு உடலையடையும் பொழுது பிராணனும் கூடப் போவதாகத் தெரிகிறது. இங்கு பிராணன் என்றது முக்யப்ராணனையும் பொறிகளையும் என்றறியவும்.

''தம் உத்க்ராமந்தம் ப்ராணே அநூத்க்ராமதி ப்ராணம் அநூத்க்ராமந்தம் சர்வேப்ராண : அநூத்க்ராமந்தி'' பிரு.உ.(4-4-2) தம் உத்க்ராமந்தம் = ஜீவன் வெளியேறின

தும், பிராணோ அநூத்க்ராமதி = பிராணனும் வெளியேறு கின்றது. பிராணம் அநூத்க்ராமந்தம் = பிராணன் வெளியே றினதும். சர்வே பிராணு அநூத்க்ராமந்தி = எல்லாப்பொறி களும் வெளியேறுகின்றன என்பது மறையின் பொருள்.

இதனுல் பிராணங்கள் செல்கின்ற பொழுது அவை கள் எதைப்பற்றியிருக்குமோ அப்பூதங்களும் செல்கின்றன என்பது பொருள். பூதங்கள், மற்றைய பூதங்களையுண்டு பண்ணச் செல்கின்றன என்பது கருத்து. பிராணங்கள் தனது இருப்பிடமாகிய பூதங்களை விட்டு ஏகமுடியாது, இருக்கவும் முடியாதென்பது பொருள். இதனுலும் பூதங்களோடு ஜீவன் ஏகுகின்ருனென்பது இனிது புலனும். சூ3.

*அவதாரிகை*

இங்கு வேறுவிதமான சங்கையைக் கிளப்பி அதற்கு சமாதானமளிக்கும் பொருட்டு சூத்திரம்:-

**சூ. அக்நியாதி கதி சுருதேரிதிச் சேந்ந பாக்தத்வாத்** 3—1—4

அக்ந்யாதிகதி சுருதே:, இதி, சேத், ந, பாக்தத்வாத் என்று பிரிக்கவும்.

ப. உ. அக்ந்யாதி கதிசுருதே: = 'அக்நிம்வாகப்யேதி' என்ற வாக்கியம் வாக்கு முதலிய கருவிகள் தனது தெய்வங்களில் ஒடுங்குகின்றன என்று மொழிந்திருக்கிறது. இதனுல் ஜீவ ஞேடு பொறிகள் செல்கின்றதில்லை. இதிச்சேத், ந = அவ் வாறு சொல்லுவாயாகில், அது பொருந்தாது. ஏனெனின், பாக்தத்வாத் = மேலே மொழிந்த மறைமொழி முக்யமில்லை. மற்றைய மறைகளுக்கு முரணுக இருப்பதால்.

அ.3-பா.1

வி. உ. பொறிகள் அந்தந்த தேவதைகளில் ஒடுங்குகின்றன என்பது முறையல்ல. அந்நிய சுருதிக்கு முரணுவதால். அந்நியசுருதியெவை ? அது:- ''ஓஷதிர் லோமானி வநஸ்பதீம்கேசா: '' பிரு - உ. 3-2-13 உரோமங்கள் ஒஷதிகளிலும், தலையில் உள்ள ரோமங்கள் மரங்களிலும் ஒடுங்குகின்றன என்பது பொருள்.

இது பொருந்தாதல்லவா? ரோமங்கள் குதித்து செடிகளிலும்தலைரோமங்கள் குதித்து மரத்திலும் சேர்ந்தது என்பது பொருந்தாத விஷயம். பின்னை அச்சுருதிக்கு என்ன பொருள் என்பாயாகில், அந்தந்த தேவதை அருள் செய்யாதென்பது குறிப்பு. பிராணனுடைய உபாதி அல்லாமல் ஜீவன் உலகில் உலாவ முடியாது. பிராணன் இல்லாமல் அன்னிய தேகத்தில் இன்பதுன்பங்களை நுகரவும் முடியாது. ஆகையால் ஜீவனோடு பிராணங்களும் செல்லுகின்றன என்பதை ''சர்வே பிராணு உத்க்ராமந்தி'' என்பதனுல் தெள்ளத் தெளிவாகின்றது. எனவே வாக்காதி கரணங்கள் அந்தந்த தேவதைகளில் ஒடுங்குவதென்பது உபசாரமாத்திரம். மேலேசொன்ன கருவிகள் அனைத்தும் ஜீவனோடு போகின்றன என்பது இனிது புலனும். இதை ஸ்மிருதி மூலமாகவும் தெரிந்து கொள்ளலாம்.

மன: ஷஷ்ட்டாணி இந்திரியாணி பிரக்ருதி ஸ்த்தானி [கர்ஷதி. ப.கீ. ஹேஅர்ஜுன! இவ்வுடலைவிட்டு ஜீவன் செல்லும்போது மனம் முதலிய ஆறு பொறிகளையும் கூட்டிச் செல்கின்ருன். என்று சொல்வீரன் வில்வீரனுக்குச் சொன்னுன். இதனுலும் இனிய ஜீவனோடு ஏனைய கரணங்கள் செல்லுகின்றன என்பது தெளிவு. சூ. 4.

*அவதாரிகை*

இந்த ஜலம் புருஷவடிவம் எவ்வாறு ஆகிறது என்று மீண்டும் பிரதிவாதி சங்கையைக் கிளப்புகிருன். சங்கைக்குக்

காரணம் ஐவகை அக்னியில் முதலாவது அக்னியில் நீரைப் பற்றிப் பேசக்காணேம், ஐந்து அக்னியும் ஐந்து ஆஹுதிக்கு ஆதாரம். இதில் முதலாவதுஅக்னி துவிலோக அக்னி. இந்த முதலாவது அக்னியில் தேவயஜமானன் சிரத்தையை அவனம் செய்கிறன் என்று மொழியப் பட்டிருக்கிறது. இந்த் வாக்கியம் சிரத்தையை ஓமப்பொருளாகக் கூறுகின்றது. இங்கு ஓமப்பொருளாக நீரைச் சொல்லவில்லே. பர்ஜன்ய முதலிய ஏனைய நான்கு அக்னியில் நீர் என்கின்ற ஓமப்பொரு ளேக் கற்பனைச் செய்தாலும் பொருந்தும். எப்படியெனின்? சோமஆதிதிரவ்யம் நீரோடொக்கும், ஆனல் முதலாவதக்னி யில் சொன்ன சிரத்தையைவிட்டு விட்டுச் சொல்லாத நீரை யெவ்வாறு கொள்வது என்பாயாகில் அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

**சூ. பிரதமே[2] அஸ்ரவணுதி[3] திச்சேன்ந தா ஏவஹி உபபத்தே:**
**3—1—5**

பிரதமே[2], அஸ்ரவணுத், இதி, சேத், ந, தா:, ஏவ, ஹி, உபபத்தே:, என்று பிரிக்கவும்.

ப.உ. துவிலோக முதலிய ஐந்து அக்னிகளில், பிரதமே[2] = முதலாவதான துவிலோக மென்னும் நெருப்பில் அஸ்ரவ ணுத் = நீரைக் குறிக்காதத்தாலும், சிரத்தையென்று குறிப் பிட்டிருப்பதாலும், 'ஆப:' என்பது பொருந்தாதெனின், இதிச் சேன் ந. அவ்வாறு அருள்வது அழகல்ல. ஹி - ஏனெ னின்? த்ாஏவஉபபத்தே: = நீரென்பது தான் பொருந்தும்.

வி.உ. பிரதமே[2], இங்கு ஜலம் புருஷ வடிவம் எங்ஙனம் உண்டாகக்கூடுமென்பது பிரதிவாதியின் வழக்கு,

முதலாவது நெருப்பில் கேள்வியுருத நீரைக்கற்பனே பண்ணுவது அன்யாயம். 'அஸ்ருத கல்பனு அந்யாயத் வாத்' என்பது ஒரு நியாயம். சிரத்தை என்று சொல்வது நம்பிக்கையைக் குறிக்கும் என்பாயாகில், அதில் ஒரு குற்றமும் இல்லை. அங்கும் சிரத்தை யென்னும் சொல்லால் நீர் கொள்ளப்படுகிறது. எனவே அடியிலும் முடிவிலும் நீர் வந்தமையால்ஐந்தாவது 'ஆப:' புருஷவடிவாதலால் எட்டுணை ஐயமும் இன்ரும். ஆதியிலும் அந்தத்திலும் ஒருபொருளைக் குறிப்பதால் ஏகவாக்யதா வென்னும் பொருளேயும் தரும். அந்நீரே அன்னம், ஔஷதி வடிவாய்த் தூலத்தன்மையைப் பெற்று புருஷவடிவத்தைப் பொருந்து மென்பது யுக்தியும் ஆம். காரணத்திற்கு அநுகூலமாகக் காரியம் நிகழும்.

சிரத்தை யென்பது ஒரு அவயவப் பொருளன்று, பால் தயிர், தேங்காய் பழம் முதலியவை ஒரு பொருள். அவைகளை யெடுத்து ஆஹுதி கொடுக்கலாம், சிரத்தை யவ்வாறு அன்று. அதையெடுத்து ஆஹுதி கொடுக்க இயலாது. பின்னே எதற்காக அதை ஆகுதிப் பொருளாக அருளப் பெற்றிருக்கிற தென்பாயாகில்? சிரத்தை யென்னும் சொல்லுக்கு

4

ஜலம் லக்ஷியமாகும். இது அநுமானமன்று. சிரத்தாவாஆப: என்று வைதீகப் பிரயோகமும் காணப்படுகிறது. வைதீகம்-வேதத்தில் வழங்குஞ் சொல். சிரத்தையில் நுண்ணிய பொருள் ஜீவனேடு செல்கிற ஜலாம்சத்தில் இருக்கிறது. ஆகையால் நீர் சிரத்தை யெனப்படும்.

வலிமையுடையவனே சிங்கம், புலி என்பது போல சிரத்தை நீர் என்று உரைக்கப்படுகிறது. "ஆபோ ஹாஸ்மை சிரத்தாம் சந்நமந்தே புண்யாய கர்மணே" சுருதி. ஹி = நிச்சயம். அஸ்மை = இந்த யஜமானுடைய புண்ணிய கருமத்திற்காக. ஆப: = நீர். சிரத்தையை. சந்நமந்தே = உண்டு பண்ணுகிறது என்பது ஆரணம்.

இதனுனும் சிரத்தையைத் தண்ணீரென்பது அநவத்யம்· — குற்றமற்றது.

இந்த வினவிடைக்கு ஒரு இதிகாசம் உளது. அது வருமாறு — இதிகாசம் — வரலாறு. இவ்வரலாறு சாந்-தோக்கிய உபநிடதத்திலிருந்து வருகிறது. சுவேதகேது என்னும் ஒருரிஷிகுமாரன் இருந்தான். அவன் ஒரு முறை பாஞ்சால மன்னன் அவைக்குச் சென்ருன். அம்மன்னன் பெயர் பிரவாஹணன். அம்மன்னன், வந்த சுவேதகேது வினிடம் குழந்தாய்! உன்தந்தையிடம் கல்வி முறைப்படிப் பயின்ருயா வென்று வின வினன். அவன் ஆம், என்ருன். அரசன், அங்ஙனம் ஆயின் இங்கிருந்து இறந்து போன ஜீவன் எங்கு போகிருன்? அங்கிருந்து அவன் எப்படித்-திரும்புகிருன்? தேவயான பித்ருயான மார்க்கங்களின் பேதம் என்ன? இங்கிருந்து செல்லும் மக்களால் அவ்வுலகம் ஏன்னிறைகிறதில்லே? ஐந்தாவது கூறப்பெற்ற தண்ணீர் மனித வடிவத்தை யெங்ஙனம் பெறுகிறது என்னும் ஐந்து வினவை வினவினன். இத்தனேக் கேள்விக்கும் எனக்கு ஒன்றுந்தெரியாதென்று ஒருபதிலேயுரைத்தான்.

சுவேதகேது ஒன்றுந்தெரியா தென்று உரைத்ததும், அரசன் அவனே முனிந்து கடிந்தான். இவ்வைந்து வினக்-களில் ஒரு வினவிற்கும் விடை பகராத நீ,யுன் தந்தையிடம் எப்படிக்கல்வி பயின்ருய்? எவ்வாறு எனக்கு எல்லாந் தெரியும் என்று மொழிந்தாய் என்று முடிமன்னன் முனிவு கொண்டான் என்பது கருத்து. இம்முனிவைப் பொறுக்காத சுவேதகேது கவலேயோடு பிதாவிடம் விரைந்தான். (முனிவு — கோபம்.) தந்தையை நோக்கித் தளர்ந்து நின்ருன். தந்தை, தளர்வுக்குக் காரணம் வினவினர் நிகழ்ந்ததை நிகழ்த்தினன். மீண்டும் ஐயனேப்பார்த்து இந்தப் பையன் — தந்தையே! சாதாரண பிரவாகணன் என்னும் ஒருமன்னன் என்னிடம்

ஐந்து கேள்விகள் கேட்டனன். அதற்கு ஒரு கேள்விக்கும் என்னால் உரைசொல்ல இயலவில்லை. சகலகலைகளும் உனக்கு நான் கற்பித்து விட்டேனென்று சொன்னீர்கள், அதனால் என்மனம் வேதனையடைகிறது. என்று தலைகுனிந்து நின்றான்.

தந்தை - ''மகனே! மேலே கூறிய ஐந்து கேள்வியில் ஒன்று கூட எனக்குத் தெரியாது, அங்ஙனமிருக்க உனக்கு நான் எங்ஙனம் ஓதுவது, ''என்றார். அதன் பிறகு தன் தனயனைக் கூட்டிக் கொண்டு அரசனிடஞ் சென்றார். வந்த அருந்தவரை மன்னன் வரவேற்றான். அரிய ஆசனத்தை-யளித்து அமரும்படி வேண்டினான். அதன்பிறகு அவரும் அமர்ந்தார். சிலதை மொழிந்தார். ''அரசே! எனது மைந்தனிடம் ஐந்து கேள்விகள் கேட்டீர்களாமே யதையே எனக்கு அருள்க, ''என்றார். அவருரையைக் கேட்ட அரசன், ''கவியரசே! சிறிது பொறுத்திருமென்றான். இரண்டு மூன்று தினங்கழிந்ததும் இப்பஞ்சாக்கனி வித்தையைப் பகரத்-துணிந்தான். இரிஷி இடையில், ''அரசே! இந்த வித்தை யிதுவரை அரசரிடம் இருந்தது. ஆனால் இப்பொழுது வேதியர்களுக்குக் கிடைக்கிற''தென்றார்.

அரசன் — அதன் பின் அந்தணராகிய அவருக்கு ஐந்தாவது கேள்விக்கு விடையளிக்கத் தொடங்கினான். ஏபூதேவ! துவிலோக அக்னியில் சிரத்தையென்னும் பொருளை அவனஞ் செய்யும் பொழுது சிறந்த சோமராஜா என்பவன் உண்டாகிறான். அவனை இராண்டாவதான மேகமெனும் நெருப்பில் அவனஞ் செய்யும் பொழுது மழையுண்டாகிறது, அதை பூமியெனும் நெருப்பில் அவனஞ் செய்யும் போது அன்னம் உண்டாகிறது, அதை புருடன் என்னும் நெருப்பில் அவனம் பண்ணும் போது வீரியம் உண்டாகிறது, அதை

பெண்ணென்னும் நெருப்பில் அவனஞ் செய்யும் பொழுது அவ்வீரியம் புருடவடிவம் பெற்று வருகிறதென்ருன். வரலாறு முற்றிற்று. சூ.5

*அவதாரிகை*

விஞவிடைகளால் சிரத்தை முதலிய ஆகுதி முறைப் படி நீர் புருட வடிவத்தை யடையட்டும். ஆனுல் ஜலத்தோடு கூட புருஷன் போகிருன் என்பது பொருத்தமற்றது. ஏனெனின்? அவ்வாறு ஆரணத்தில் கேட்கப்படவில்லே. ஆரணம்-வேதம். இவண் ஜலத்திற்குச் சமானம் ஜீவனேக் கூறும் மறைகளேக் காணேம். எனவே நீரோடு ஜீவன் செல்கிருன் என்பது பொருத்தமற்றது என்பாயாகில் அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு -

**ஸூ. அஸ்ருத³த்வாதி திச்சேந் நேஷ்டாதி³ காரிணும்பிரதீதே: 3—1—6**

அஸ்ருதத்வாத், இதி, சேத், ந, இஷ்டாதி காரிணும், பிரதீதே : என்று பிரிக்கவும்.

ப.உ. அஸ்ருதத்வாத் = ஜலத்திற்குச் சமானம் ஜீவனேச் சொல்லவில்லே. இதிச்சேன் ந = அங்ஙன்ம் உரைப்பாயாகில் அது பொருந்தாது. இஷ்டாதி காரிணும் பிரதீதே : = நல்ல கருமங்களேச் செய்பவரிடத்தில் காணப்படுகிறது.

வி.உ. ''அத²ய இமேகிராம இஷ்டா³ பூர்த்தேத³த்தம் இத்யுபாசதே தே⁴தூ⁴மம் அபி⁴சம்பவந்தி'' (சா-உ.) (5-10-3) என்பது ஆம்ஞயம். ஆம்ஞயம்-வேதம். இல்லறத்தில் வாழும்

மக்கள் கிராமங்களில் யாகங்களும் செய்வார்கள். கிணறு, குளம், ஆலயம், நந்தவனம், அறச்சாலே, கல்விக்கூட முதலியவைகளும் அமைப்பார்கள். இவைகளில் யாகம்-இஷ்டம். மற்றவைகள் பூர்த்தமெனப்படும். இவைகளைச் செய்பவர்கள் இஷ்டாதிகாரி யெனப்படுவர். அத[2] = எப்படி, யே = இல்லற வாசிகள். க்ராமே = கிராமங்களில். இஷ்டா பூர்த்தே = யாகங்கள், கூப முதலிய தடாகங்கள். தத்தம் = தானம். உபாசதே = (மேற்கூறிய) கருமங்களைச் செய் கிருர்களோ. தே = (அவர்கள்) தூமம்[4] அபிசம்பவ[4]ந்தி[4] = புகை வழியாகச் சென்று தேவதைகளை யடைகின்றனர் என்பது வேதப் பொருள். இங்ஙனம் தொடங்கி, ''ஆகாசாத் சந்த்ரமசம் ஏஷ சோமோ ராஜா'' சா. உ. (5 - 10 - 4) என்று சுருதி கூறுகின்றது. தே-அவர்கள் ஆகாசாத் = ஆகாச வழியாக, சந்த்ரமசம் = சந்த்ர உலகத்திற்குச் செல் கின்ருர்கள் என்று அச்சுருதி யருள்கின்றது. சிரத்தை யென் னும் ஆகுதி சோமரசமாக ஆகிறது என்பது கருத்து.

இவைகளுக்குக் காரணமான ''ஹோமப் பொருள் - அக்னி ஹோத்ரம். தர்சம், பூர்ணமாச முதலிய கருமங்களுக் குரிய பால், தயிர், நெய் இவையெல்லாம் கண்கூடாக நீர் வடிவமாக இருக்கின்றன. இவனுல் செய்யப்பட்ட நல்வினை கள் இவனை கரும பயனை அநுபவிப்பதற்காக அந்தந்த உலகிற்கு அழைத்துச் செல்கின்றன. இதனுல் ஆகுதி மய ஜலத்தோடு ஜீவன் ஏகுகிருன் என்பது எளிதில் புலனும். சூ. 6]

## அவதாரிகை

ஜீவன், அவன் செய்த வினையை அநுபவிக்க உலகங் களுக்கு ஏகுகிருன் என்பது பொருத்தமற்றதேயாம். எங்ஙன

மெனின்? அவனத்தில் இந்த ஜீவன் முதலாவது சோம ரசமாக ஆகிருன். அதை தேவர்கள் உண்கிருர்கள், அவர்களுக்கு இவன் அன்னமாகிருன் என்று சுருதிமொழி கிறதே யென்பாயாகில், அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு :-

**ஸூ· பா[4]க்தம்வா அநாத்மவித்த்வாத், தத[2]ா, ஹி, த[3]ர்ஸயதி 3—1—7**

பாத்தம். வா, அநாத்மவித்த்வாத், த தா[2], ஹி, த[3]ர்ஸயதி என்று பிரிக்கவும்.

ப.உ. வா வென்னும் சொல் சங்கிப்பவன் கழுத்தை நெறிப்பதற்காக. பாக்தம் = அவர்களை உணவு என்றது முக்கியமல்ல. அநாத்மவித்த்வாத் = ஆன்மாவை அறியாத குற்றத்தால் தேவர்களுக்கு உணவென்று சொன்னது உப சாரம். ததாஹி தர்ஸயதி = மறைகளும் அவ்வாறு அருளு கின்றன.

வி.உ. பாக்தம் வா, வேதாந்தத்தில் பாக்தம் என்னும் சொல்லுக்கு முக்யம் அல்ல வென்று பொருள். இந்த அநிஷ்டாதி காரிகளை உணவென்று சொன்னது பொதுவாக அதற்காக அவர்களை அன்னம் என்று பொருள் கொள்ள லாகாது. பின்னையென்ன கொள்ள வேண்டும் என்பாயா கில், தேவர்கள் அவர்களை அடிமைப்படுத்துகிருர்கள் என்பது பொருள். அவ்வாறு கொள்ளாவிடில் மற்றைய சுருதி களுக்கு முரணும். ''சுவர்க்க காமோ யஜேத'' சுவர்க் கத்தை விரும்புபவன் யக்ஞம் செய்ய வேண்டுமென்பது மறைமொழி. யாகம் செய்யும் ஜீவனை தேவர்கள் அருந்தி

விட்டாராஞல் சுவர்க்கத்திற்கு இவன் எப்படிப் போக முடியும்?

ய : சோமராஜா'' இந்த சோமரசம், தேவர்களுக்கு அன்னம், என்று பொருள் இருப்பினும், அன்னமென்னுஞ் சொல் அடிமையைக் குறிக்கும். எவ்வாறு சோமரஸத்தை ரித்விக்கணம்,-யாகஞ்செய்பவர்கள் 'ஆப்யஸ்வ =பருகுங்கள். அபக்ஷீயஸ்வ, 'உண்ணுங்கள், என்கின்றது சுருதி. எப்படி உண்கிருர்களோ, அதுபோல் இந்த ஆன்மாவையுணராத அறிவிலிகளையிமைவர் கூட்டங்கள் உண்கின்றனர், என்ற மறைக்கும் அடிமையென்று தான் பொருள். சூத்திரன் வைஸ்யர்களுக்கும், வைஸ்யர் அரசர்களுக்கும், அரசர்கள் அந்தணருக்கும் அன்னமென்று அருமறைகள் முரசறை கின்றன. இதற்கெல்லாம் பணிபுரிய வேண்டுமென்பது தானே பொருள். இஃதன்றி லட்டு, வடை முறுக்கு போன்று உண்பதல்ல.

தின்பன என்று பொருள் கொள்ளின் ''நஹவை தேவா அஸ்னந்தி ... என்னும் சுருதிக்கு முரணுண்டாகும். தேவர்கள் உண்கிறதில்லை என்பது சுருதிப் பொருள். சா.உ.-(3-6-1) இதனல் என்ன தெரிகிறது? குடிகளை அரசன் அடிமைப்படுத்துவது போல தேவர்கள் ஆன்மாவையுணராத அறிவிலிகளை அடிமைப்படுத்துகிருர்கள் என்பது பொருள்.

இஃதன்றியும் அதயோ[2] அந்யாம் தேவதாம் உபாஸ்தே அந்யோ[2] அசௌ[3] அந்யோ[2] அஹம் அஸ்மிஇதி நசவேத யதா[2] பசு ரேவம்[3] சதேவாஞம்'' (பிரு-உ.) (1-4-10) அத = எப்படி, யோ = எவன், அந்யாம் தேவதாம் = வேறு தெய்வத்தை அந்யோ அசௌ = அதுவேறு, அந்யோ, அஹம் அஸ்மி இதி = நான் வேறு (என்று) உபாஸ்தே = வழிபடுகின்ருனே,

நச வேத = அவன் அந்தத் தெய்வத்தை (யுண்மையில்) அறியவில்லை. யதா2 = எங்ஙனம், பசு: ஏவம் சதேவானாம் = அவன் தேவர்களுக்கு அடிமைப்படுகிறான் என்று சுருதி சொல்லுகின்றது. பசுக்கள் - ஆடுமாடுகள் நமக்கு அடிமை யாவது போல ஆன்மாவையறியாத அரும்பாவிகள் தேவர் களுக்குத் தொண்டு செய்கிறார்கள் என்பது குறிப்பு. எனவே இஷ்டாதிகாரி ஜீவன் சூட்சும பூதங்களோடும், கருவி கரணங்களோடுஞ் செல்கின்றான் என்பது தெளிவு. (சூ.7)

## (2) க்ருத அத்யய அதி4கரணம் சூ. 8—11

*அவதாரிகை*

புகை முதலிய வழியாக சந்த்ர மண்டலத்தில் ஏறியிருக்கும் நல்லவினைகளைச் செய்த ஜீவன் அங்குள்ள போகங்களை அநுபவித்து அங்கிருந்து கீழேயிறங்குவதாக வேதம் விளம்புகின்றதே-அதன் விபரம் என்ன?

**சூ. க்ருதாத்யயே அநுஸயவான் த்3ருஷ்ட ஸ்ம்ருதிப்4யாம் யதே2தமநேவம்ச, 3—1—8**

க்ருத, அத்யயே, அநுஸயவான், த3ருஷ்ட, ஸ்ம்ருதிப் யாம். யதா2, இத3ம், அநேவம்,ச, என்று பிரிக்கவும்.

ப. உ. க்ருதஅத்யயே = வினைப்பயனை நுகர்ந்த பிறகு. அநுஸயவான் = எஞ்சிய வினையோடு பொருந்தி (ஜீவன்) (இவ்வுலகிற்கு வருகிறான்) ஸ்மிருதிகளாலும். ச = மேலும். யதே2தம் = எவ்வழி சென்றானோ அவ்வழி, அநேவம்ச = அல்லது வேறுவழி (வருகிறான்) இது எங்ஙனந் தெரிகிறது?

3 4
த்ருஷ்ட ஸ்மிருதிப்யாம் = சுருதி ஸ்மிருதிகளாலும் தெரிகிறது.

வி.உ. இஷ்டமுதலிய யாகங்களைச் செய்பவர்கள் சந்த்ர உலகஞ்செல்கின்றனர். அங்கு அவர்களுக்குரிய போகங்களை யநுபவிக்கின்றனர். அப்பொழுது அவர்கள் செய்த கிருதம்-வினைகள், அத்யயம் - முடிவடைகின்றன. எங்ஙனம் ஒருவன் ஒரு உணவு விடுதிக்குச் சென்று பல பண்டங்களை வாங்கியுண்கிறபோது அவன் மடியில் உள்ள பணங் குறைகிறதோ, அதுபோல நல்வினைகளைக் கொண்டு இந்த ஜீவன் மேலுலகஞ் சென்று வினைப்பயனை அநுபவிக்கும் பொழுது வினைமுடிவு பெறுகிறது. அதன் பின் கீழே வருகிறான். இவ்வாறு உரைக்கிறது உபநிஷத்து. மேலே செல்வது கதி, யென்றால், கீழேவருவது ஆகதியாகும்.

2
''தஸ்மின் யாவத் சம்பாதம் உஷித்வாஅதஏதம் ஏவ
4 2
அத்வானம் புநர் நிவர்த்தந்தே யதேதம் சா.உ. (5-10-5)
தஸ்மின் = சந்த்ர மண்டலத்தில். யாவத் = கொண்டுபோன வினைமுடியும் வரை. சம்பாதம் உஷித்வா = வினையின் பயனை
2 4
யநுபவித்து அத = பிறகு ஏதம் ஏவ அத்வானம் = இங்கிருந்து சென்ற வழியாகவே, புநர் நிவர்த்தந்தே = மீண்டும் திரும்புகின்றனர். ஏவ = உறுதி. இது ஆம்நாயப் பொருள். ஆம்நாயம் - வேதம்.

இங்ஙனம் துவக்கி ''ரமணீய சரணா ரமணீயாம் யோநிம். நல்ல வினைகளைப் புரிபவர்கள் அந்தணர் முதலிய குலத்திலும் பாவவினைகளைப் புரிபவர்கள் சூகர கூகர யோனிகளையும் அடைகின்றனர் என்பது மறைமொழி. அதைப் பற்றி இங்கு விசாரிக்கப்படுகிறது. சூகரம்-பன்றி. கூகரம்-நாய். வினையின் விளைவை நுகர்ந்த பிறகு அநுஸயத்தோடு

இங்கு வருகிருஞ? அல்லது நிரநுஸயத்தோடு வருகிருஞ என்பது கேள்வி. அநுசயம்-கருமம். நிரநுசயம்-கருமத்தின் இன்மை. கருமத்தோடு வருகிருஞ அல்லது கருமமின்றி வருகிருஞ என்பது பிரச்னே.

பிரதிவாதி-கருமம் இல்லாமல் வருகிருன். எதஞலோ வெனில்? 'சம்பாதபரியந்தம்' என்னும் விசேடத்தால். இவண், சம்பாதமென்னும் சொல்லுக்குப் பொருள் கருமம். விஃனப்பயஃனயுண்பதற்காகவே இவன் அங்கு போகிருன். உஷித்வா, நுகரும் வரை அங்கிருந்து இந்த மறைமொழி அவன் சகல விஃனகஃள யங்கேயநுபவிக்கிருன் என்று அறிவிக்கிறது. இன்னும் ''தேஷாம்யதா தத்பர்யவதி'' பிரு. உ. 6-2-16 தேஷாம்=மேலுலகஞ் சென்றவர்களுடைய (கருமம்) ய தா = எப்பொழுது அழிந்து விடுகிறதோ) (பர்ய வா ஏதி) ஆகாசத்தை யடைகிருர்கள் என்று உபநிஷத்து ஓதுகின்றது. இதஞலும் விஃனகள் அங்கு சிலவழிந்து விடுகின்றனவென்று தெளிவாகின்றது.

கருமம் எதுவரை மிஞ்சியிருக்கிறதோ அதுவரை அவன் அங்கு இருப்பான் என்று எனது கற்பஃன யென்பது பிரதிவாதி வழக்கு. வாதி-அந்தக் கற்பஃன யொவ்வாது. அந்ய சுருதிக்கு விரோதமாவதால் அது வருமாறு- ''பிராப்யாந்தம் கர்மணஸ் தஸ்ய யத்கிஞ்சேஹ கரோத்யயம் தஸ்மாத் லோகாத் புநர்ஏத்யஸ்மை லோகாய கர்மணே'' பிரு-உ. 4-4-6 இஹ = இவ்வுலகில். யத்கிஞ்ச = ஏதோ சிறிது, தஸ்ய கர்மண: = அந்த விஃனயின் அந்தம் பிராப்ய = கர்மத்தின் முடிவையடைந்து. அடைந்து-அநுபவித்து. தஸ்மாத் லோகாத் = அவ்வுலகிலிருந்து, அஸ்மை லோகாய கர்மணே = இவ்வுலகத்திற்கு. புனர் ஏதி = மீண்டும்

வருகிறுன் என்பது சுருதிப் பொருள். பூர்வ பட்சமும் சித்தாந்தபட்சமும் போராடும் போது சித்தாந்த பட்சமே சிறந்ததென்று கொள்ளவேண்டும். அதுதான் முறை.

வாதி-அங்ஙனமாயின் - அதற்குப் பதில்-'க்ரு தாத்யயே அநுசயவான்' கருமத்தை அநுபவித்த போதிலும், அநுஸயம் இருக்கிறது. எனவே கருமத்தோடு வருகிறுன். சந்த்ர மண்டலத்தில் போகத்திற்காக உள்ள தேகம் நீர்மயம் போகத்தை அநுபவிக்குங்கால் அந்நீர் மயசரீரம் கரைந்து விடுகிறது. சூரியன் முந்நிலையில் பனிக்கட்டியும், நெருப்பு முந்நிலையில் வெண்ணெயும் கரைந்து போவது போல சோக மென்னும் தணலில் அங்கு உண்டான உடல் அழிந்து விடுகிறது. இதனுல் 'கிருதாத்யயே' என்று பகவான் வியாசர் விளம்பினர்.

எஞ்சிய நுணுக்கமான கருமத்தோடு ஜீவன் வருகிறுன். பிரமாணம் என்னே? சுருதியும் ஸ்மிருதியும், பிர 3 மாணம். திருஷ்டம் சுருதி - ''அத்யய இஹரமணீய சரணு', இங்கு யார் புண்ணிய வினைகளைச் செய்கிருர்களோ அவர்கள் அந்தணர், அரசர் முதலிய குலத்தில் அவதரிக்கிருர்கள். அவ்வாறு எவர்கள் பாவ கருமங்களைச் செய்கிருர்களோ அவர்கள் பொல்லாத பிறவியில் பிறக்கிருர்கள் என்னும் இச்சுருதி அநுஸயத்தோடு ஜீவன் அவனியில் வருகிருன் என்று அறிவுறுத்துகின்றது. இவண் - சரமென்னும் சொல் அநுசயத்தைக் குறிக்கிறது. இவண் - இங்கு. அநுசயம் --கருமம்.

பிறவியிலிருந்து ஒவ்வொரு உயிர்களிடத்திலும் வேறு -- வேருன இன்ப துன்பம் காணப்படுகின்றன. அவைகளுக்கும் அநுசயந்தான் காரணம். திடீரென அவைகள் உண்டாகமாட்டா. புண்ணியமும் பாவமுமே நிமித்தம்.

சாதி குல ஆசாரத்திற்குத் தக்கவாறு வினைகளைச் செய்ப வர்கள் இறந்த பிறகு வினைப்பயனை நுகர்ந்து, புவியில் வந்து நல்ல ஜாதியிலும் நல்ல குலத்திலும் பிறந்து ரூபம், ஆயுள், ஞானம், ஆசாரம், விசாரம், பொருள், இன்பம், அறிவு முதலியவைகளைப் பெற்று விளங்குகின்றனர் என சில ஸ்மிருதி நூல்களில் மொழிந்திருக்கின்றன. இதனாலும் எஞ்சிய கருமத்துடன் வருகிறானென்பது இனிது புலனாம்.

சிலர், கருமாநுசயம் என்பதை எண்ணெயிருந்த மண்பாண்டம், அல்லது இங்குறைந்த பாண்டத்தில் எண்ணெய் தீர்ந்தும் பசையிருப்பதையும், இங்கு நீங்கின பிறகு நாற்றத்தையும் சொல்கிறார்கள். இங்கு-காயம் எண்ணெய்ப்பாத்திரத்தில் எஞ்சிய எண்ணெய் பசை போலும் இங்குறைந்த பாத்திரத்தில் இங்கு நாற்றம் போலும், ஜீவனுடன் செல்லும் சூட்சும கருமத்தை அநுசயம் என்பர், இவ்வினை ஜீவனிடத்தில் நுணுக்கமாயிருக்கிறது. ஞானமில்லாமல் கருமங்களனைத்தையும் தொலைக்க முடியாது. மேலும் வினைப்பயனை நுகர்ந்த பிறகு சிறிது கருமம், எஞ்சியிருப்பதால் அந்த ஜீவன் அங்கு இருக்க இயலாது. அங்கு-சந்த்ரமண்டலம்.

ஒரு அரசனுடைய பணியாள் பல சாதனங்களோடு அரண்மனைக்குச் சென்றான். அங்கு சிலகாலமிருந்து பணி புரியுங்கால் பல சாதனங்கள் பழுதடைந்தன. ஏதோ ஒரு சாதனம் மிஞ்சியது. அதனால் அவன் அங்கு இருக்க இயலாதல்லவா. அதுபோல் போகத்துக்குரிய வினைகள் ஒழிந்த பிறகு கடுகளவு மிஞ்சிய கருமத்தால் சந்த்ர மண்டலத்தில் எங்ஙனமிருக்க இயலும்? இயலாதென்பது குறிப்பு, க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி'' ப.கீதை. (தனஞ்ஜய!) சுவர்க்கத்துக்குரிய கருமங்களைச் செய்து, அங்கு சென்று, கரும பயனையுண்டு, கருமங்கள்

தொலைந்ததும், அங்கிருந்து மண்ணுலகத்திற்கு வருகிருன் என்பது சுலோகத்தின் கருத்து, இதனுனும் எஞ்சிய வினையால் விண்ணிலிருந்து மண்ணுக்கு வருகிருன் என்று நன்குத் தெரிகிறது.

(யதேதம்[2] அநேவம்ச) கீழே வருகின்ற ஜீவர்கள் எந்த வழியில் போனர்களோ அவ்வழியில் வருகிருர்கள் என்பதை யதேதம்[2] என்னுஞ் சொல்லும், மாறுபட்ட வழியிலும் வரலாம் என்பதை அநேவம் என்னும் சொல்லும் உணர்த்துகின்றன. சூ.8

*அவதாரிகை*

(ரமணீய சரண:) என்னும் சுருதி நற்பிறவியை யெடுக்கிருர்கள் என்று மொழிந்து யோனியைக் குறிக்கின்றது. அநுசயத்தைக் குறிக்கவில்லை, என்பதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

## சூ. சரணாதிதிசேந்[1] நஉபலக்ஷணார்த்தேதி[3] கார்ஷ்ணாஜினி:[2] 3—1—9

சரணத், இதி, சேத், ந, உபலக்ஷணார்த்த,[2] இதி, கார்ஷ்ண ஜிநி : என்று பிரிக்கவும்.

ப. உ. சரணத் = சரணமென்னும் சொல் ஆசாரத்தைக் குறிக்கிறதேயன்றி, அநுசயத்தைக் குறிக்கவில்லை. இதி சேத் = என்று சொல்வாயாகில் ந = அங்ஙனமன்று. ஏனெனின்? கார்ஷ்ணஜிநி : = இந்நாமத்தையுடைய ரிஷி. சரணமென்னும் சொல் அநுசயத்திற்கு உபலக்ஷணமாகக் கொண்டிருக்கின்றனர்.

வி.உ. பிரதிவாதி -சரணமென்னும் சொல் சேஷகருமத்தைக் குறிப்பதாக வேதாந்திகளாகிய நீங்கள் விளம்பினீர்கள். அது பொருந்தாது. ஏனெனின்? சரணமென்னுஞ் சொல்லுக்குச் சான்றோர்கள் மூன்று பொருள் கொண்டிருக்கின்றனர். அவை :- ஆசாரம், சீலம், சரித்திரம். அங்ஙனம் இருக்க அநுசயத்தைக் குறிக்கிறதென்று எங்ஙனம் கூறலாம் என்பது எதிரியின் தருக்கம். மேலும் அநுசயம் என்னும் சொல்லுக்கு அனுபவித்து ஒழிந்த கருமத்திற்கு வேறான கருமமென்பது பொருள். எனவே சரணம் வேறு அநுசயம்
2
வேறு என்பது அவன் வழக்கு. அவன் = எதிரி. ''யதாகாரி
2 2 4
யதாசாரி ததாபவதி,, பிரு.உ.) (4-4-5) என்றும், ''யாநி
3
யநவத்யானி கர்மாணிதாநி சேவிதவ்யானி நோஇதராணி' என்றும், ''யாநி அஸ்மாகம் சுசரிதானி த்வயோபாஸ்யாநி'' தை.உ. (1-11-2) என்றும் மறைகள் மொழிகின்றன.
2 2
யதாகாரி = எவ்வித வினைகளைச் செய்கிறார்களோ, யதாசாரி
2 4
= எங்ஙனம் ஒழுகுகிறார்களோ, ததாபவதி = அங்ஙனம் ஆகிறார்கள் என்பது இச்சுருதியின் பொருள். யாநி அநவத்யானி கர்மாணி = (எங்களிடத்தில் எவை நல்ல கர்மங்கள் காணப்படுகின்றனவோ அதையொழுக வேண்டும். நோ இதராணி = இதரகருமங்களை. நசேவிதவ் யானி = ஒழுகக் கூடாது. யானி அஸ்மாகம் சுசரிதானி = எங்களுடைய நல்ல ஒழுக்கங்களை (நீங்கள்) பழக வேண்டும். மற்றவைகளைப் பழகக் கூடாதென்று ரிஷிகள் தங்கள் மாணக்கர்களுக்குக் கூறினார்கள் என்பது அடுத்த மறையின் பொருள்.

இந்த மறை மொழிகளால் சரணம் வேறு, அநுசயம் வேறு என்பது பிரதிவாதியின் ஆட்சேபம். வாதி - பிராப்தி

யென்னும் சொல்லால் யோநியைக் குறித்தாலும் ஒரு குற்றமில்லை. ஏனெனின்? இந்தச் சரண சுருதி அநுசயத்திற்கு உபலக்ஷணம் என்று கார்ஷ்ணுஜினி என்னும் ரிஷி ஒப்புக்கொண்டிருக்கிருரென்பது கருத்து. சூ.9

*அவதாரிகை.*

இவ்வாறு ஒப்புக் கொள்வதால் என்ன பயன் என்பாயாகில் -- சூத்திரம் வருமாறு :-

## சூ· ஆநர்த்க்யமிதிச் சேந்ந ததபேட்சத்வாத் 3—1—10

ஆநர்தக்யம்[2], இதி, சேத், ந, ததபேட்சத்வாத்[3] என்று பிரிக்கவும்.

ப.உ. ஆநர்தக்யம்[2] = பயனற்றதாகும். இதிச் சேந்ந = இவ்வாறு கூறுவாயாகில் அது பொருந்தாது. ததபேட்சத்வாத்[3] = ஆசாரத்திற்குக் கருமம் விரும்பப்படுகிறது. எனவே சரண சப்தம் பயனுளது.

வி.உ. சரண சுருதி தனது உரிய பொருளை விட்டு வேறு பொருளை கொள்ளுமாகில் பயனிலதாகும். வேறு பொருள் அநுசயம். இது எதிரியின் வரட்டுவாதம். வாதி அங்ஙனமன்று. நன்னடைத்தையால் நல்ல ஜென்மமும், தீய நடத்தையால் தீய ஜென்மமும் உண்டாகு மென்பது ஆகமத்தின் அரிய பொருளாய் இருப்பினும், அந்தப் பழக்கமும் கருமத்தை விரும்புகின்றது. யக்ஞ முதலிய நல்ல வினைகள். பழக்க ஒழுக்கங்களுக்கு மேலான கருவியாக இருக்கின்றன. ''ஆசாரஹீனம் நபுநந்தி வேதா :'' ஒழுக்கமில்லாத மக்களை. வேதா = கருமங்கள் ந புனந்தி =

புனிதப்படுத்துவதில்லை. இங்கு வேதமென்னும் சொல்லுக்குப் பொருள் கருமமென்று கொள்ள வேண்டும். இது ஸ்மிருதி வாக்கியம். இதனுலும் ஆசரணம் கருமத்தை விரும்புகிறது என்று தெரிகிறது. இந்த கருத்தை மனதில் நிறுத்தி வைத்துக் கொண்டு கார்ஷ்ணுஜினி யென்பவர் சரண சப்தத்தை அநுசயத்திற்கு உபலக்ஷணமாகக் கொண்டுள்ளார் என்பது குறிப்பு. ஆகையால் சரணம் அநுசயரூப கருமத்தைப் பற்றிக் கொண்டு நல்ல ஜென்மத்திற்குக் காரணமாகிறதென்பதில் என்னக் குற்றம்? ஒன்றுமில்லை யென்பது உறுதி. ஜென்மத்திற்குக் கருமம் நிலையாக இருக்கும் பொழுது சரணம் வேண்டு மென்பது அவசியமில்லை. காலால் ஓடும் வலிமையுள்ள மனிதன் முழங்காலால் ஓட வேண்டு மென்பது இல்லாதது போல. கையிருக்கும் போது வாயினுல் கவ்வி சாப்பிட வேண்டு மென்பது என்ன தேவை. தேவையில்லை என்பது குறிப்பு. சூ. 10

*அவதாரிகை*

கூறிய வாதத்தை மீறிய வாதிக்கு மீண்டும் அன்னிய ரிஷியின் அபிப்பிராயத்தை அறிவிப்பதற்கு அடுத்த சூத்திரம் வருமாறு :-

**சூ சுகிருத து$^{3}$ஷ்கிருதே ஏவேதி து பா$^{3}$த$^{3}$ரி : 3—1—11**

சுகிருதது$^{3}$ஷ்கிருதே, ஏவ, இதி, து, பா$^{3}$த$^{3}$ரி: என்று பிரிக்கவும்.

ப. உ. து. = ஆனுல் சரணம் என்னும் சொல்லுக்குப் பொருள். சுகிருதது$^{3}$ஷ்கிருதே ஏவ = நல்வினை தீவினை, இதி = என்று பா$^{3}$த$^{3}$ரி = பாதரியென்னும் ஆசாரியர் கூறுகின்றார். ஏவ = உறுதி.

வி. உ. சரணமென்னுஞ் சொல்லால் நல்வினை தீவினை என்று பாதரியென்பவர் ஒப்புக்கொள்கின்றனர். சரணமும் ஆசாரசப்தமும் முக்கிய ரூபமாகக் கருமத்திற்குப்பரியாயம் என்பதுஅவர் மதம். பரியாயம்-ஒருபொருளைத் தருஞ்சொல்.
4
சர - என்பது ஒரு தாது. (பகுதி) அதற்கு முழுக்க கரும மென்பது பொருள். இதனால் எவன் இஷ்ட முதலிய புண்ணிய கருமஞ் செய்கிருனே அவனை அறிஞர்கள் தருமாத்மாவென்றும், புண்யாத்மாவென்றும் சாற்றுகின்ற னர், சாற்றுதல் - சொல்லுதல். ஆசாரமும் தருமவிசேஷந் தான். கருமம் சரணம் இவையிரண்டிலும் உள்ள பேதம் 'பிராமண பரிவிராஜக நியாயம் போல பொருந்தும். பிராஹ்மண சப்தமும் பரிவிராஜக சப்தமும் நெருங்கியத் தொடர்புடையவை. பிராஹ்மண சப்தத்திற்கும் பரிவிராஜக சப்தத்திற்கும் பொருள் ஒன்றே. இவையிரண்டும் ஞானார்த் தகம். ''பிரஹ்ம ஞாநேநபிராஹ்மண:'' என்பது ஸ்மிருதி வாக்கியம். அறிவினால் அந்தணரென்பது பொருள். ''ஞானம் சந்யாஸலக்ஷணம்'' என்பது ஸ்மிருதி வாக்கியம். ஞான முடையவன் சந்யாசியென்பது இதன் பொருள். இவை இரண்டு வாக்கியமும் அந்தணர் துறவி இருவரும் ஒருவ ரென்பதை யுணர்த்துகின்றன. பிராஹ்மணரை அழைத்து வாவென்ருல் துறவியையும் அழைத்து வா என்ற நியாயம் பிராமண பரிவிராஜக நியாயமென்று சொல்லப்படும். இது போல் ஆசாரமும் கருமமும் ஒன்றென்பது உறுதி.

2 2 1
அங்ஙனமாயின் யதாகாரீ யதாசாரீயென்று வேறு பிரித்து கூறியிருக்கிறதேயென்பாயாகில், சமாதானம் - அங் கும் சாமான்யபேதம் விசேடத்தைக் குறிக்கும, இதனாலும் ரமணீயசரணம் சுபகருமத்தையும், கபூயசரணம் அசுப கருமத்தையும் குறிக்குமென்பது கருத்து. இது பாதரி மதம். சூ. 11)

## 13. அநிஷ்டாதி[3]காரி அதி[4]கரணம். ஸூ 12-21

*அவதாரிகை*

இஷ்டாதிகாரிகள் சந்த்ர மண்டலத்திற்குச் செல்கின்ருர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது, இவர்கள் மட்டும் அங்கு செல்கிருர்களா அல்லது அநிஷ்டாதிகாரிகளும் செல்கிருர்களாவென்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

**ஸூ· அநிஷ்டாதி[3] கா[1]ரிணுமபிச ஸ்ருதம் 3—1—12**

அநிஷ்டாதி[3]காரிணும், அபி, ச, ஸ்ருதம் என்று பிரிக்கவும்.

ப.உ: அநிஷ்டாதி[3]காரிணும் அபி = தீய கருமங்களைச் செய்யும் தீய மக்களும் சந்த்ர மண்டலத்திற்குப் போவதாக. ஸ்ருதம் = சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. இது பூர்வ பட்ச சூத்திரம்.

வி. உ. தீய வினைகளைச் செய்பவர்க்கும் எங்ஙனம் மொழிந்திருக்கிறதென்பாயாகில்? ''யேவை கே[1] ச அஸ்மாத் லோகாத் ப்ரயந்தி சந்த்ரமசம் ஏவ சர்வே க[3]ச்சந்தி'' என்பது கௌஷிதகி. உ. (1-2) சுருதி. யே கேச = அந்த எவ்வகைப் பட்டவர்களும் அஸ்மாத் லோகாத் = இவ்வுலகத்திலிருந்து ப்ரயந்தி = செல்கிருர்களோ. சந்த்[3]ரமசம் = சந்த்[3]ர உலகத்திற்கு. தேஸர்வே =அவர்கள் எல்லோரும் கச்சந்தி = செல்கின்றனர் என்பது சுருதிப் பொருள். வை = அசை. ஏவ = உறுதி.

இவ்விஷயத்தில் பிரதிவாதி வழக்கு - நல்வினைகளைச் செய்கிற மக்கள் மட்டும் சந்த்ர உலகத்திற்குச் செல்கிருர்கள்

என்பது பொருந்தாது. ஏனெனின்? தீவினை செய்பவர்களும் அங்கு போவதாக உரைத்திருக்கிறது. எங்ஙனம் என்பாயாகில்? கௌஷிதகி சாகையையுணர்ந்தவர்கள் அங்ஙனம் மொழிகிறார்கள். 'சர்வே கச்சந்தி' எல்லோரும் என்ற பதத்தால் நல்லவர் அல்லவர் அனைவரும் ஏகுகின்றனர் என்று தெரிகிறதென்பது எதிரியின் தருக்கம். மீண்டும் நல்லவர் அல்லவர் அனைவரும் மறுதேகம் எடுக்க வேண்டுமானால் சந்த்ரலோகம் போய்த்தான் ஆகவேண்டும். அங்குதான் அவ்வுடல் உண்டாகின்றது. அங்ஙனமாயின் நல்வினை வியர்த்தமாகும். எனவே யெல்லோரும் சந்த்ர உலகம் செல்கிறார்கள் என்பது பொருந்தாது, ஏனெனின்? நல்லவர்க்கும் அல்லவர்க்கும் கதி சமானம் என்பது பொருத்தமென்றால் இவர்க்குள்ள வேற்றுமையாதென்று சித்தாந்தி கேட்பாயாகில், பதில் கூறுதும் - இருவரும் அங்கு சென்றாலும், அங்குள்ள போகத்தை அல்லவர்கள் நுகர்வது இல்லை. அல்லவர்கள் - பாவிகள். இதுவே யிருவருக்குமுள்ள தாரதம்யம். தாரதம்மியம் — வேறுபாடு.

புண்ணியகருமம் பயனற்றதாகும், என்பது பூர்வ பட்சி மதம். இந்தச் சூத்திரம் பூர்வபட்சியின் வாதத்தைப் புகல்கின்றது. [சூ. 12]

*அவதாரிகை.*

பிரதி வாதியின் வறட்டு வாதத்தை விரட்டும் பொருட்டு சூத்திரம் வருமாறு -:

**சூ. சம்யமநேத்வநுபூய[4] இதரேஷாம் ஆரோஹ அவரோஹௌ[3] தத்[3] கதி[3] தர்ஸநாத் 3—1—13**

சம்யமநே, து, அநுபூய[4], இதரேஷாம், ஆரோஹ, அவரோஹௌ[3], தத்[3], கதி[3], தர்ஸநாத் என்று பிரிக்கவும்.

ப. உ. து = பிரதிவாதி ஐயத்தை யகற்றும் பொருட்டு து சப்தம்,

4
சம்யமநே = கூற்றுவன் நகரில். அநுபூய = யமலோக வேதனையை யநுபவித்த பிறகு (இவ்வுலகத்திற்கு வருகிறார் கள்.) இந்தமாதிரி, இதரேஷாம் = அநிஷ்டாதிகாரிகளும் ஆரோஹ, அவரோஹௌ மேலும் கீழுமாகத் திரிகிறார்கள்.
3
தத் கதி தர்ஸநாத் = இவ்வாறு ஆகமம் அறைகின்றது. ஆகமம் - மறை.

வி, உ. எல்லோரும் சந்த்ரமண்டலத்திற்குச் செல்கின் றார்கள் என்று எதிரி இயம்பினனே, அதை நீக்கும் பொருட்டு து என்னும் சொல்லைச் சொன்னார். பாவிகள் புண்ணியாத் மாக்கள் அனைவரும் சந்த்ர உலகத்திற்குச் செல்கின்றார்கள் என்பது அவிவேகமாகும். இருவரும் செல்கிறார்கள் என்றால் இவர் இருவருக்கும் என்ன வேற்றுமை? யென்று சித்தாந்தி கேட்டபோது, ஒருவன் போகத்தையுண்கிறான் மற்றொருவன் சும்மா இருக்கிறானென்று பூர்வ பட்சிப் புலம்பினான்.

யாரும் ஒரு பயனுமில்லாமல் ஒரு இடத்திற்குச் செல் வார்களா? ஒருவன் ஒரு மரத்தில் ஏறுகிறானென்றால் கனி யைப் பறிக்கத் தானே யேறுகிறான், சும்மா இருக்க ஏறுவானா ஏறமாட்டான் என்பது தானே கருத்து. அது போல சந்த்ர மண்டலத்தில் நல்வினை தீவினையாளர் ஏறினாலும் ஒருவன் போகத்தை யநுபவிக்கிறான், மற்றொருவன் உண்ணாமல் இருக்கிறான் என்பது கேலிக் கூத்தாயிருக்கிறது. ஏறியிறங் குவதற்குமன்று. அங்ஙன்மாயின் கிறுக்கென்பார்கள்.

இதனால் என்ன தெரிகிறது அநிஷ்டாதிகாரி அங்கு போவதில்லை. அங்கு சந்த்ரமண்டலத்திற்கு அவர்கள் எங்கு செல்கிறார்கள்? யமபுரிக்கு. (சம்யமநே) அங்கு அவர்கள்

தீவினைப் பயனை நுகர்ந்து மீண்டும் இங்கு வருகிறார்கள். இம்மாதிரி அவர்களுக்கு ஆரோஹ - மேலே செல்வதும், அவரோஹ, கீழேயிறங்குவதுமாக கூறப்பட்டிருக்கிறது.
3
இது எவ்வாறு தெரிகிறதெனின்? 'கதி தர்ஸனத்'

3 3
ந சாம்பராய : பிரதிபாதி பாலம் பிரமாத்யந்தம்
4
வித்தமோஹேந மூடம். அயம் லோகோ நாஸ்தி பரஇதிமாநீ
3
புந; புநர் வசமா பதயதேமே. (க. உ. 1 2. 6) ந சாம்பராய:
4 3
பிரதிபாதி பாலம் = அக்ஞானிகளுக்கு பரலோக சம்பந்தி சாதனங்கள் விளங்குகிறதில்லை. காரணமென்னை? பிரமா
3 3 3
த்யந்தம் = பிரமாதம் —நிறைந்தமதம் — நம்மை யார் என்ன செய்ய முடியுமென்னும் திமிர். இதற்கு என்ன
4
காரணம்? வித்தமோஹேந மூடம்=வித்தம்—பொன் பொருள் மணி, நிலம், புலம், அணி, ஆடை, முதலிய உபபோக சாதனம். முக்கிய காரணம் அவிவேகம். ஆத்மா அநாத்ம விசாரமின்மை. (இவ்வறிவிலிகள்) அயம் லோகோ (அஸ்தி) இவ்வுலகந்தான் இருக்கிறது. நாஸ்தி பர=மேல்
4
உலகம் இல்லை. இதி=என்று, மானி=அபிமானி. தானும் எண்ணி பிறருக்கும் உரைப்பார்கள். இதனால் இப்பாவிகள் புந:புந: = மீண்டும் மீண்டும். மே = வசம் = என் வசமாக. ஆபத்யதே = ஆகின்றார்கள் என்று யமதருமர் நசிகேதாவுக்கு நவில்கின்றார். என்பது சுருதிப்பொருள்.

இதனாலும் அநுஷ்டாதிகாரிகள் சந்த்ர உலகத்திற்குச் செல்வதில்லை என்பது தெளிவு. இதுதான் சூத்திரத்தில் வந்த
3
தத்கதி தர்சனம். மேலும் ''வைவஸ்வதம் சங்கமநம்

ஜநாநாம்'' ஸ்மிருதி. பாவாத்மாக்களுக்குச் செல்லுமிடம் யமலோகம் என்பதாலும் அறியலாம். இந்த வாக்கியங் களாலும் அநிஷ்டாதிகாரிகள் மேலுலகஞ் செல்வதில்லை என்பது இனிது புலனும். சூ. 13

அவதாரிகை

கூறிய பொருளைச்சீரிய முறையில் செம்மைப்படுத்துவதற் காக அடுத்த சூத்திரம் வருமாறு:-

1

**ஸூ. ஸ்மரந்திச 3—1—14**

ப. உ. ஸ்மரந்தி = ஸ்மிருதிகாரர்களும் அவ்வாறு உரைக்கின்றனர்.

வி. உ. மநு, வசிஷ்டர், பராஸர், வியாசர் முதலிய ரிஷிகள் ஸ்மிருதிக்காரர்கள். இவர்களும் கூறுகிருர்கள். அறிவில்லாத மக்களைப், (பொருள்) இருளில்தள்ளும்:

இருள் மோகம். இருக்கிற பொருள் தெரியாமல் இல்லாத பொருள் தெரிந்தால் அது மோகமெனப்படும். தன்தலைச் சுற்றுகிறபோது தரைச் சுற்றுவது போல் காணப் படும். தாய்ப் பேயாய்க் காணப்படலாம், பேய் தாயாய்க் காணப்படலாம். இருப்பது கயிறு, காண்பது அரவு-பாம்பு. உள்ளது சிப்பி, தெரிவது வெள்ளி. நிற்பது கட்டை பார்ப்பது கள்வன். இது என்னை விசித்திரம்? இதுதான் மோகஇருள்.

இம்மோகத்தை யுடையவர்களுக்கு இவ்வுலகம் தோற்றும், பரலோகந் தோற்ருது. இவ்வுலகில் பெண்டு பிள்ளை, தாய்தந்தை, உற்ருர், உறவினர் மாமியார், மாமனுர் இவ்வாறு இவ்வுலகங் காட்சியளிக்கிறது. ஆகையால் இது தெரிகிறது. பரம்-பரமாத்மா, தெரிகிறதில்லை ஏஷ சர்வேஷு

4 3 4
பூதேஷு கூடோத்மா நபிரகாஸதே'' என்பது க.உ. 1-3-12 நமனிடம் நசிகேதன்-ஐயனே! இந்தப்பையன் மனதில் ஒரு ஐயம் எழுகின்றது, அதையகற்றுவீராக. ஆன்மா எங்கும் நிறைந்து மிளிர்ந்து கொண்டிருக்க சிலருக்கு ஏன் தெரிய வில்லே யென்று வினவினன். விடை—ஏஷ=இந்த ஆன்மா
34
சர்வேஷு பூதேஷு=எல்லோருடைய இதயத்தில். கூட= மறைந்திருக்கிறது. என்றுயமன் மொழிந்தான். குளத்தில் குளிர்நீர் நிரம்பியிருப்பினும், அதற்குமேல் பாசம்படர்ந் திருந்தால் நீர்தெரியாது. அதனுல் நீரில்லே யென்று சொல்ல இயலாது. அதுபோல் உள்ளமென்னும் ஓர் குளத்தில் ஒளிர் மயமாய் ஆன்மா நிறைந்திருப்பினும் மோகமெனும் பாசம் அடர்ந்திருக்கும் போது ஆன்மாதெரியாது. அதனுல் அதையில்லேயென்று கூறுவது மதிநலமாகா. இதனுலும் அநிஷ்டாதிகாரிகள் சந்த்ர மண்டலம் செல்வதில்லே யென்பது தெளிவு. சூ.14]

*அவதாரிகை*

பாவகருமத்தைப் புரிபவர்க்கு ஏழுவித நரகமென்று புராணங்களில் புகலப் பட்டிருக்கிறது என்பதற்குச் சூத்திரம் வருமாறு:

## சூ. அபிசசப்த 3—1—15

அபி, ச, சப்த என்று பிரிக்கவும்.

ப. உ. அபிச = மேலும், பௌராணிகர்கள், சப்த = ஏழு நரகங்கள் என்று நவின்றிருக்கிறுர்கள். நவிலுதல் = சொல்லுதல்.

வி. உ. பாவகருமங்களேப் பயிலும் பாவிகளுக்கு ரௌரவ முதலிய ஏழு நரகங்கள் புராணங்களில் உரைக்கப் பெற்றிருக்கின்றன. அவை வருமாறு: 1, ரௌரவம் 2,

2, மகாரௌரவம், 3, கும்பிபாகம், 4, பீமம், 5, கோரம் 6, தமசு, 7. அந்த தமசு. இந்த ஏழும் அநிஷ்டாதிகாரிகள் துன்பத்தை யநுபவிக்க உரிய இடமென்று கூறப்பெற்று இருக்கிறது.

கூடசாட்சி = பொய் சாட்சி சொல்லுதல். ஒருதலை யாக சரிந்து பேசுதல், பொய் பேசுதல், கருச் சிதைத்தல், சிசுவைக் கொல்லுதல், பிறர் இல்லத்தை அபகரித்தல், பசுவைக் கொல்லுதல் முதலிய தொழில் புரிபவர்களுக்கு அநிஷ்டாதிகாரியென்று பெயர். ஸூ. 15

*அவதாரிகை*

அங்ஙனமாயின் மேற்கூறிய நரகங்களில் சித்ரகுப்தன் முதலிய அநிஷ்டாதிகாரியல்லாதவர்களும் இருக்கிறார்களே யென்பாயாகில், பதில் ஸூத்திரம் வருமாறு :-

## ஸூ. தத்ராபி[1] ச தத்[3] வ்யாபாராத் அவிரோத:[4] 3—1—16

தத்ராபி, ச, தத், வ்யாபாராத் அவிரோத:[4], என்று பிரிக்கவும்.

ப. உ. தத்ராபி = அந்நரகங்களில். தத்[3] வ்யாபாராத் = (யமன் ஆணையை கண்காணிப்பதற்காக யமனால் நியமிக்கப்பட்டவர்கள். எனவே அவிரோத:[4] = அதனால் விரோதமன்று.

வி. உ. குணமில்லாத மக்கள் குற்றத்தைச் செய்வார் கள். அக்குற்றத்திற்கு அரசன் தண்டனையிடுகிறான். அத் தண்டனையை நுகருமிடம் சிறைச்சாலை யெனப்படும். இவ்வாறு பல பேர்கள் குற்றம் புரிந்து அரசன் தண்டனைக்கு

ஆளாயிருப்பார்கள், அவர்கள் அனைவரும் சிறைச்சாலையில் வாழ்வார்கள். அவர்களைக் கண்காணிப்பதற்காக அரசன் தனது காவலர்களை அமைப்பான். அவர்கள் சிறைச்சாலையில் இருப்பதால் அவர்கள் குற்றவாளியாகிறதில்லை. அதுபோல் யமனால் நியமிக்கப் பெற்று நரக முதலிய இடங்களில் வாழ்கின்ற சித்ரகுப்தர் முதலியவர் அநிஷ்டாதிகாரிகளாக மாட்டார்கள். ஏழுவித நரகங்களிலும் எமனுக்கு இறைவன் அதிகாரம் அளித்திருக்கிறான். எமன் சித்ரகுப்தனுக்கு அளித்திருக்கிறான். எனவே குற்றமொன்றுமில்லை. ஆகையால் புராணங்களில் நரகம் ஏழென்று இயம்பப் பெற்றிருக்கிறது. சூ. 3-1-16

## அவதாரிகை.

2 2
பஞ்சாக்கனி வித்தையில் ''வேத்த யதா அசௌ லோகோ நசம்பூர்யதே'' சா. உ. (5-3-3) என்று பிரவாகணன் கேட்டான். பிரவாகணன் என்னும் மன்னன்,
2
சுவேதகேதுவிடம் அசௌலோக : = இந்த பரலோகம் யதா
2
நசம்பூர்யதே = ஏன் நிறைகிறதில்லை, வேத்த = அறிவாயாவென்று கேட்டான். இதற்கும் அவன் ஒன்றுந் தெரியாதென்றான். மீண்டும் மன்னனே விடை கூறும் பொழுது பிறப்பதற்கேயிறக்கின்றாரே என்பது தேவாரம்.
2 2 2
அத ஏதயோ: பதோ: ந,, என்று இதைக் கூறினான். அத =
2
எவன். ஏதயோ: பதோ: இந்த அரிச்சி, தூமமார்க்கமாகச் செல்லவில்லையோ. அவன் இழிந்த ஜீவனாகப் பிறந்து, பாம்பு, பல்லி, தேள், நட்டுவக்காலி, பூரான், இன்னும் பற்பல ஈனயோநிகளில் பிறந்து நரகத்திற்குச் செல்கின்றான். இவர்களால் அந்த பரலோகம் நிறைகிறதில்லை என்று மன்னன் விடையளித்தான்.

இக் கொடிய பாவி ஜீவர்களை எமன்'' ஜாயஸ்வ மிரியஸ்வ போய் பிறந்து ஒழியுங்கள். ஒழிந்து அழியுங்கள் என்று வெகுளித் தீயில் தள்ளுகிருன் என்பது சுருதிப் பொருள். இது மூன்ருவது ஸ்த்தானமென்று மொழியப் படுகிறது. மேலே சொன்ன மார்க்கம் ஒன்று உபாசனை யையும், மற்ருென்று கருமத்தையும் பற்றியிருக்கின்றன என்பதற்குச் சூத்திரம்.

3
## ஸூ. வித்யா கர்மணோரிதி து பிரகிருதத்வாத் 3—1—17

3
வித்யா, கர்மண:, இதி, து, பிரகிருதத்வாத் என்று பிரிக்கவும்.

3
ப. உ. வித்யா = உபாசனைக்கும், கர்மணோ: = கருமத்திற்கும் அரிச்சி மார்க்கமும், தூமமார்க்கமும் என்றுக் கொள்ளவேண்டும். எங்ஙனமெனின்? பிரகிருதத்வாத் = வித்தை-உபாசனை கருமம் இவையிரண்டும் தேவயானத் திற்கும் பித்திருயானத்திற்கும் உரியவை யென்று கூறப்பட்டி ருக்கிறது. யானம்—மார்க்கம்.

3 2 3
வி.உ. தத்ய இத்தம்விது: என்பது சுருதி. சா. உ. (5-10-1) இச்சுருதி தேவயான மார்க்கத்தை மொழிகின்றது.
3
'இஷ்டாபூர்த்தே தத்தம்' இந்தமறை கருமத்தின் மூலமாக பித்திருயான வழியை விளக்குகின்றது. இவ்விரண்டு வழிகளில் ஏதாவது ஒன்றில் எவன் செல்லவில்லையோ அவன் ஈனயோநிகளில் பிறந்து பட்டொழியும் மார்க்கம்
2
திரிதீயஸ்த் தானம். மூன்ருவது வழியென்பது முடிவு. இது மூலமாகவும் அநிஷ்டாதிகாரிகள் சந்த்ர மண்டலம் செல்வதில்லை யென்பது உறுதி.

அவர்களும் சந்த்ர உலகஞ் சென்று மீண்டும் கீழே வந்து இழிந்த பிறவியை அடைகிருர்கள் என்ருலென்ன? அதுமுறையன்று. அவ்வாறு பொருள் கொள்ளின், அநர்த்த மாகும். மேலே செல்வதால் என்ன பயன், ஒன்று மில்லை. சிலர் எல்லோருமே சந்த்ர உலகத்திற்கு ஏகுகிருர்கள் என்பதை 'து' என்னுஞ் சொல் விலக்குகிறது. சூ.17

*அவதாரிகை.*

சந்த்ர லோகம் போன பிறகுதான் எல்லோருக்கும் அதற்குரிய உடம்பு உண்டாகிறது. ஐந்தாவது ஆகுதி (அப்பு) ஜலமய சரீரமுண்டாகிற தென்று உரைத்திருக் கிறதே யென்பாயாகில் அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

2 3 4

**ஸூ. நதிருதீயே ததோபலப்தே :** 3—1—18

3 2 3 4

ந. திருதீயே, ததா, உபலப்தே : என்று பிரிக்கவும்.

ப.உ. திருதீயே=மூன்ருவது மார்க்கத்தில் செல்லும் பாவி களுக்கு உடலைப்பெறுவதற்காக ஆகுதி நியமம். ந=இல்லை.

2 3 4

ததா உபலப்தே : = (ஆகுதியில் அருளிய முறையின்றியே) மூன்ருவது இடத்தைப் பெறும் ஜீவர்களுக்கு அதற்குரிய தேகம் உண்டாகிறதாகத் தெரிகிறது. 'ஜாயஸ்வ மிரி

2

யஸ்வ ஏதத்திருதீயம் ஸ்தானம்' என்னும் மறையால் உணரலாம். ஐந்தாவது ஆ ப:) ஜலம், காய வடிவமாகிற தென்பது மனித சரீரத்தை நோக்கி மொழிந்ததே அல்லாமல் பாம்பு, பல்லி, புழு, விட்டுப்பூச்சி முதலிய வாளாத்திரியும் உயிர்களை நோக்கியல்ல. புருஷனென்னுஞ் சொல் மனிதனைக் குறிக்குமேயல்லாது புழு, தேள், பாம்பு

3

இவைகளைக் குறிக்காது. (புருஷசப்தஸ்ய மநுஷ்ய ஜாதி

4
வசனீத்துவாத்) என்பது ச. பாஷ்யம். எனவே புல்லிய உயிர்கள் உடல் பெறுவதற்காக சந்த்ர உலகம் செல்ல வேண்டியதில்லை யென்பது திண்ணம். சூ. 18

அவதாரிகை.

உரைத்ததை உறைக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:-

1
**ஸூ. ஸ்மர்யதே அபிச லோகே 3—1—19**

ஸ்மர்யதே, அபி, ச, லோகே என்று பிரிக்கவும்.

ப.உ. ச=மேலும். லோகே=உலகில். அபி=உலகத்திலும். ஸ்மர்யதே = (இம்மாதிரி) கூறப்பட்டிருக்கிறது.

வி.உ. உலகம் என்பது இவண் புராண இதிகாசங்கள். மகாபாரத முதலிய நூல்கள் என்பது குறிப்பு. அந்நூலில் என்ன சொல்லப்பட்டிருக்கிற தென்பாயாகில், துரோணர் திருஷ்டத்யும்னன், முதலியவர்களும், சீதா, துரௌபதி முதலியவர்களும் அயோநி-எவ்வித காரணமில்லாமலே உடம்பைப் பெற்றிருக்கிறுர்கள் என்று உரைக்கப் பெற்றிருக்கிறது. இவர்களில் துரோணர்க்கு பெண் ஆகுதியில்லை. திருஷ்டத்யம்னனுக்கு ஸ்திரி, புருஷ இரண்டு ஆகுதியுமில்லை. இவ்விஷயத்தில் மேலே கூறிய ஆகுதிக்கு ஆதரவு இல்லை. இதுபோல் அநிஷ்டாதிகாரிக்கும் தேக உத்பத்திக்காக அங்கு செல்ல வேண்டுவதில்லை. பலாகா என்பது ஒரு பறவை. அது விண்ணிலேயே வாழ்கிறது அது வீரியமில்லாமலே கருவுற்றுக் குழந்தையைப் பெறுகிறது. இம்மாதிரி உலகிலும் புராணங்களிலும் தெரிகிறது. (19)

*அவதாரிகை.*

கூறிய பொருளை யுறுதி செய்வதற்காக அடுத்த சூத்திரம்.

3
**ஸூ. தர்ஸனாச்ச 3—1—20**

3
தர்சனாத், ச, என்று பிரிக்கவும்.

3
ப. உ. தர்சனாத் = உலகில் காணப்படுவது போல் சுருதிலும் அவ்வாறு தெரிகிறது. ச = உறுதி.

வி. உ. நான்கு வித பூத சமுதாயம். இங்கு பூதம் என்பது யோநி யென்று பொருள் கொள்ளவேண்டும். அவை

3 3
ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜம். இந் நான்கு பூதங்களில், ஸ்வேதஜம், உத்பிஜமென்னும் இவையிரண்டுக்கும் கிராம்ய தருமமில்லாமலே உத்பத்தியுண்டாகிறது. கிராம்ய தருமம் - ஆண் பெண் முறைமை. அது இல்லாமல் உயிர்கள் உண்டாகின்றன என்பது பொருள். இங்கும் ஆகுதிக்கு ஆதரவு இல்லை. அது போல் அநிஷ்டாதிகாரிகளுக்கும் ஆகுதிக்கு மரியாதையில்லை என்பது கருத்து. ஸூ. 20.

*அவதாரிகை*

மூன்று பூதங்கள் மொழிந்திருக்கிற போது நான்கு பூதமென்று நவிலுதல் எங்ஙனம் பொருந்தும் என்பாயாகில் அதற்கு சூத்திரம் வருமாறு :-

3 3 4
**ஸூ திருதீய சப்த அவரோதஃ ஸம்சோகஜஸ்ய 3—1—21**

3 3 4
திருதீய, சப்த அவரோத : ஸம்சோகஜஸ்ய என்று பிரிக்கவும்.

3
ப.உ. சம்சோகஜஸ்ய = ஸ்வேதஜ பிராணிகளில், உத்பிஜ யோநியை உள்ளடக்கிக் கூறியிருப்பதால் திரிதீய
4
சப்த அவ்ரோத: = அடங்கி இருக்கின்றது. சுவேதஜ உயிர்களை அடக்கிக் கொள்வதால் குற்றமொன்றுமில்லை.

வி.உ. மூன்று பூதங்கள் எங்கு மொழியப்பட்டிருக்கிற தென்று சித்தாந்தி-கேட்பாயாகில், அவை வருமாறு :-

2 4 3
''தேஷாம்கலு ஏஷாம்பூதானும் த்ரீந்யேவ பீஜாநீ பவந்தி
3
ஆண்டஜம் ஜீவஜம் உத்பிஜ்ம் இதி'' சா. உ. (6-3-1 என்று சுருதிச் சொல்கின்றது. ஆண்டஜம் = பறவைகள். பாம்புகள் பல்லி முதலியவை. ஜீவஜம் = கருப்பத்தில் இருந்து உண்டாகின்ற-மனிதன், மாடு, ஆடு முதலியவைகள். உத்பிஜம்-மரம், செடி, கொடி முதலியவை. இவைகளில் உத்பிஜ சப்தத்தில் ஸ்வேதஜ சப்தத்தை அடக்கிக் கொள்வதாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இதற்கு என்ன காரண மெனின்? உத்பிஜ உயிர்களும், ஸ்வேதஜ உயிர்களும் பூமியையும், நீரையும் பிளந்து வந்திருக்கின்றன. உத்பிஜம் ஜடப்பொருள், ஸ்வேதஜமோ சேதனப் பொருள். இம்முறையால் நான்கு பூதமென்று நவிலப்பட்டிருக்கிறது. இக்கிரமம் ஐதரேய உபநிஷத்தில் அருளப்பெற்றிருக்கிறது. இதனுல் விரோதம் ஒன்றுமில்லை.

4 4
## சாபாவ்யாபத்யதி கரணம்.

### *அவதாரிகை.*

இது வரை கூறியதென்னை? இஷ்டாதிகாரிகள் சந்த்ர லோகத்திற்குப் போய் அங்குள்ள போகங்களை அநுபவித்து

அதன் பிறகு மிஞ்சிய கருமத்தோடு இங்கு வருகிருர்கள் என்று வரையப்பட்டிருக்கிறது. இனி வருகிறமுறை வர்ணிக்கப்படுகிறது. சூத்திரம் வருமாறு.

## சூ. சாபா4வ்யாபத்தி ருபபத்தே: 3—1—22

சாபா4வ்யாபத்தி:, உப பத்தே:, என்று பிரிக்கவும்.

ப. உ. சாபா4வ்யாபத்தி: = ஆகாச ஆதி - முதலிய பூதத்திற்குச் சமானமாக இங்கு வருகிருர்கள். உபபத்தே: = அங்ஙனம் தெரிகிறது.

வி.உ. இவ்வுலகத்திற்கு வரும்போது இஷ்டாதிகாரிகள் வருகிறவிதமென்ன? ''அத2 ஏதம்ஏவ அத்4வானம் புநர் நிவர்த்தந்தே அத2 ஏதம் ஆகாசம் ஆகாசாத்3 வாயும் வாயுர்பூ4த்வா தூ4மோ ப4வதி தூ4மோ பூ4த்வா அப்4ரம் பவதி அப்4ரம் பூ4த்வா மேகோ4 ப4வதி மேகோ4 பூ4த்வா பிரவர்ஷதி'' என்பது ஆரணம். சா. உ. (5-10-5) (தே-இஷ்டாதிகாரிகள்) முதலாவது ஆகாசம் ஆகிருர்கள். ஆகாசத்திலிருந்து வாயுவாகிருர்கள். வாயுவிலிருந்து (தூமம்) புகை வடிவமாகிருர்கள். புகையிலிருந்து மின்னல் ஆகிருர்கள். மின்னலிலிருந்து மழையாக வருகிருர்கள் என்று மறை மொழிகின்றது.

இவண் ஐயமுண்டாகின்றது. இவண் - இங்கு. ஈண்டு இஷ்டாதிகாரிகள் ஆகாச முதலிய அந்தந்த, வடிவமாகிருர்களா அல்லது அவைகளுக்குச் சமானமாகிருர்களா என்பது விஞ. வாதி - உனக்கு எங்ஙனந் தெரிகிறது? பிரதிவாதி அந்தந்த சொரூபமாகிருர்கள். எதனுல்? மறை மொழியால்

அங்ஙனம் தெரிகிறது. அங்ஙனம் பொருள் கொள்ளாவிடின், லக்ஷணை கொள்ள வேண்டி வரும். சுருதியும் லக்ஷணையும் ஒப்பிட்டுப் பார்த்தால் சுருதிக் கொள்ளத் தக்கது லக்ஷணைத் தள்ளத் தக்கது.

'வாயுர்பூத்வா[4] தூரமோ[4] பவதி[4]' வாயுவிலிருந்து புகை வடிவமாகிறது என்பது வாக்கியத்தின் பொருள்.

அந்தந்த உருவமாகிறதென்பதை யறிவிக்கிறது. இதனால் அவ்வடிவமாகிறார்கள் என்பது பிரதிவாதியின் மதம். வாதி - வடிவமாகிறதில்லை. ஆனால் வடிவம் போல ஆகிறது. போல-சமானம். சந்த்ர மண்டலத்தில் ஆண்டுள்ள போகத்தை அநுபவிப் பதற்கு நீர் வடிவ உடலையெடுத்து போகத்தை நுகர்ந்ததும், அவ்வுடல் நுண்ணியவடிவமாகிறது. பிறகு ஆகாச சமமாகி வாயுவின் அதீனமாகிறது. பின்னர் புகை முதலியவைகளோடு பொருந்தி அவ் வடிவம் போல் ஆகிறது.

''யதேதமாகாசம்[2]'' எப்படிச் சென்றனோ அப்படித் திரும்புகிறான் என்பது பொருள்.

ஒன்று மற்றொரு வஸ்துவின் முக்கிய வடிவம் ஆக இயலாது. ஆகாச சொரூபமாக ஆகிவிட்டால் வாயு வடிவமாக எங்ஙனம் கீழேயிறங்க இயலும்? எனவே ''சாபாவ்[4] யாபத்தி[4], சபாவம்[3]-சாத்ருஸ்யம். சமான ரூபம். ஈண்டு ஆகாசாதி[4] பாவம்-ஆகாசத்திற்குச் சமமென்று பொருள் கொள்ளவும். வேதத்திற்கு விரோதம்வரின் லக்ஷணையைக் கொள்வதால் குற்றமொன்றுமில்லை. ஆகையால் ஈண்டு இஷ்ட்டாதி காரிகள் ஆகாசாதிக்குச் சமமாக வருகிறார்கள் என்பது கருத்து. ஈண்டு இங்கு. ஆண்டு-அங்கு. சூ. 22

(4) நாதிசிராதி[1] கரணம் சூ.22

அவதாரிகை

இங்கு ஒவ்வொரு பொருளுக்குச் சமானமாக வருகிறபோது விரைவாக மாறுகிறதா அல்லது தாமதமாக மாறுகிறதா என்ற வினுவிற்குப் பதில் சூத்திரம் வருமாறு

**சூ நாதி[1] சிரேண விசேஷாத் 3—1—23**

ந,[1] அதிசிரேண, விசேஷாத் என்று பிரிக்கவும்.

ப. உ. (ஜீவன்) நாதிசிரேண[1] = விரைவாக (ஆகாசத்தோடு சமமாக இருந்து மழையின் வாயிலாகத் தரைக்கு வருகிருன்.) விசேஷாத் = விசேடமாக வேதத்தில் கூறியிருப்பதால்.

வி.உ. இஷ்டாதி ஜீவன் ஆகாசாதி வடிவமாகமாறி மழைவடிவமாகி, அன்ன ரூபமாக அவனிக்கு வருகிருனென்பது ஆம்நாயம். ஆம்நாயம்-வேதம். இங்கு சிறிது சந்தேக முண்டாகிறது. ஒவ்வொன்ருக மாறுகிறபொழுது தாமதமாக மாறுகிறதா அல்லது விரைவாக மாறுகிறதா என்பது ஐயம். இதில் ஒரு நியமமுங்காணும். இவ்வாறு அல்லது அவ்வாறு என்று சொல்லும் சுருதியைக் காணும். அப்படிக் கேட்கும் பிரதிவாதியை நோக்கி வாதி

''நாதிசிரேண'' ஸ்வல்ப காலத்தில் ஆகாசாதி வடிவங்களாகி மழைத்துளிகளாக இங்கு வருகிருர்கள். எங்ஙனந் தெரிகிறதெனின்? 'விசேஷதர்சநாத்[3] என்பது சங்கர பாஷ்யம். நெல்லு முதலிய தவசங்கள் ஆனபிறகு என்று சிறப்பித்து உரைக்கப்படுகிறது. ''அதோ வை கலு[2] துர்[3] நிஷ் பிரபதரம்,, என்று சா. (உ. (5-10-6) கூறுகிறது. அத:

அந்நம், ஓஷதியிவைகளிலிருந்து மீண்டும் துர்நிஷ்
பிரபதரம் = மனித வடிவத்தைப் பெறுவது மிகப்
2
பிரயாசம் என்பது மறையின் பொருள். கலு—அசை. வை
3 3
=உறுதி. செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான். என்றபடி. மணிவாசகம். இறுதியானப் பிறவி தருக்களாகப் பிறப்பது. தருக்கள்—மரம். இதற்கு முந்திய ஆகாசம், வாயு, இவைகளிலிருந்து மாறுவது எளிது. ஆனல் மரஞ்செடிகளிலிருந்து மாறுவது அரிதென்று ஆரணம் அருளுகின்றது. இதனல் ஆகாசாதிகளுக்கும், ஓஷதாதிகளுக்கும் காலத்தின் குறைவும், மிகுதியும் நிமித்தமாக இருக்கிறது. எனவே அன்னம். மரஞ் செடியிவை ஆவதற்கு முன்பதாக அல்பகாலமாக இருக்கவேண்டும். இதனுலும் காலம் சுவல்பமென்பது எளிதில் புலனும். சூ. 23

4 4
## 6) அந்நியாதிஷ்ட்டித அதிகரணம். சூ24-27

### அவதாரிகை

இஷ்டாதி ஜீவன் மழைவடிவம் ஆனபிறகு கீழே வருகிருன் என்றும், அன்னவடிவமாய் வருகிருனென்றும், நெல், கோதுமை, மரஞ்செடி, எள், கொள், உழுந்து, பயரு இந்தவடிவமாகவும் வருகிருனென்றும் சொல்லியிருக்கிறது. இவண் சம்சயமுண்டாகிறது. என்ன சந்தேக மென்பாயாகில்? இந்தஜீவன் உள்ளபடியே இந்த அன்னவடிவத்தை அடைகிருன அல்லது இன்னெரு ஜீவனுக்கு உபபோகமாகிய அன்னத்தில் பொருந்தாமல் இருக்கிருன என்பது கேள்வி. இதற்குப் பதில் சூத்திரம் வருமாறு :-

## சூ. அந்யாதி[4]ஷ்ட்டிதேஷு பூர்வவத் அபி[4]லாபாத் 3—1—42

அந்ய, அதி[4]ஷ்ட்டிதேஷு பூர்வவத் அபி[4]லாபாத் என்று பிரிக்கவும்.

ப. உ.: (அநுசயி ஜீவன் முன்னேமாதிரி) அந்நிய அதி[4]ஷ்டிதேஷு = வேறு ஜீவனுக்கு உபபோகத்திற்காக உள்ள அன்னத்தில் பொருந்துவன். பூர்வவத் அபி[4]லாபாத்= ஆகாசாதிகளைப் போல் இங்கும் எண்ண வேண்டும்.

வி.உ. ஜீவன் கீழே இறங்குகிருன் என்று சொல்லிய பின்னர் சுருதி கூறுகிறது. ''ஜாயந்தே = பிறக்கின்றனர் என்பது மறையின் பொருள். அநுசயி ஜீவன். விஞ்சிய வினையோடு கூடிய ஜீவன் ஸ்தாவர வடிவத்தை யடைந்து இன்ப துன்பத்தைப் பெறுகிருனு அல்லது வேறு ஜீவனுடன் கலந்து தா[2]வரத்தில் பற்றற்று இருக்கிருனு என்பது வினு. வாதி-என்ன ஆகிருன்? பிரதிவாதி-தாவர நிலையை அடைந்து இன்ப துன்பவடிவமாகிருன். எப்படி? ஜனி, என்பது ஒரு பகுதி. இப்பகுதிக்கு முக்கியார்த்தம் பிறப்பது என்று கொள்ளப்படுகிறது. சுருதியிலும், ஸ்ருமிதியிலும் தாவரத்தன்மையை அடைந்து இன்பதுன்பத்தை மருவுகிருன் என்று காணக்கிடக்கிறது. சுருதி வருமாறு-

யோநிம் அந்யே பிரபத்[3]யந்தே சரீரத்வாய தே[3]ஹிந :
ஸ்தா[2]ணும் அந்யே அநுசம்யந்தி யதா[2] கர்மயதா[2]
ஸ்ருதம் !!

நசிகேதனுக்கு நமன் கூறுகிருன். யதா[2] ஸ்ருதம்=அறிவு கேள்வி ஞானத்தால் வருகிறது. யதா[2]கர்ம = அவ்வாறு

3
கருமத்தைச் செய்கிருன். (கருமாநுசாரம், தேஹிந : = ஜீவன், தனது வினையின் பயனுக, யோநிம் அந்யே=வேறு சரீரங்களையடைகிருன். உடலைப் பெறுவதற்காக நாளுயோ நிகளில் பிறக்கிருன் என்பது பொருள். சரீரத்வாய =
2
காயத்தையெடுப்பதற்காக என்பது கருத்து. ஸ்தாணும் அந்யே அநுஸம்யந்தி = மரம், செடி, கொடி முதலிய ஈன யோநிகளையும் அடைகிருன் என்று கூற்றுவன் கூறுகின்ருன். க. உ.அ. 2- வ. 1— 7

அறிவினுல் வினையும், வினையினுல் விளைவும் என்பது வெளி. ''வினைவழியே வந்தடையும் தேகமெல்லாம்'' என்று வேதாந்த ரத்னம் விளம்புகின்றது. உடலனைத்தும் ஒள்ளிய வினையின் பயன் என்பது குறிப்பு. ''சரீரஜை : கர்ம
3 2
தோஷை: யாதி ஸ்தாவரதாம் நர :'' என்கின்றது ஸ்மிருதி.

நர : = மனிதன் சரீரஜை : கர்ம தோஷை : =
2
காயத்தில் எழுந்த குற்றம் உற்றவினையால். ஸ்தாவரதாம் யாதி = மரம், செடி, கொடி யென்னும் இழிந்த யோநியை அதாவது தாழ்த்தப்பட்ட பிறவியை; அடைகிருன் என்பது ஸ்மிருதி வாக்கியம்.

வினைகளையியற்றுவதற்கு இறைவன் இந்த ஜீவனுக்கு மூன்று கருவிகளையளித்திருக்கிருன். . மனம், வாக்கு காயம். முதலாவது, எண்ணம் மனதில் எழுகிறது. எழுந்த எண்ணத்தை வாக்கால் சொல்லுகிருன். சொன்னதைக் காயத்தால் செய்கிருன். இவ்வாறு கருமத்தைச் செய்வதற்கு உரிய கருவிகள் மூன்று என்று மொழிவர் பெரியோர்கள்,

மறை மொழிகளாலும், புராணவசனங்களாலும், தாவரத் தன்மையை அடைந்து இன்பதுன்பத்திற்கு கூரிய வர்களாக ஆகிருர்கள் என்பது உறுதி. ''நஹிம்ஸ்யாத்

4
சர்வாபூதாநி" இந்த சாமான்ய வேதம் ஹிம்ஸயை
3 4
விலக்குகிறது, ''அக்நீஷோமீயம் பசுமாலபேத" இந்த
விசேஷ வேதம் யாகத்தில் ஹிம்சயை விதிக்கிறது.
இவ்விரு மறைகளுக்கும் அந்தந்த இடத்தில் அதற்குரிய
சிறப்பு என்று அறியவும்.

இதனுல் என்ன தெரிகிறது? இஷ்டாதிகாரிகளுக்கும் ஹிம்ஸயைச் செய்து அதன் பயனுக தாவரத் தன்மையை அடைய வேண்டி வரும் என்பது இனிது புலனும். ஆனுல் இவையெல்லாம் பற்ருமல் பற்றும் என்பது குறிப்பு. சூ. 24.

*அவதாரிகை.*

பசுஹிம்சையால் நல்ல கருமமும் அசுத்தம் ஆகுமே, அஃதன்றியும் அநிஷ்டபயனும் உண்டாகக் கூடுமேயென் பாயாகில் அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு :-

4 3 3
**சூ. அசுத்தமிதிசேந் நசப்தாத் 3—1—25**

3 3
அசுத்தம், இதி, சேத், ந, சப்தாத் என்று பிரிக்கவும்.

4
ப. உ. அசுத்தம் = புனிதமில்லாதது. இதிசேத் =
3 3
இவ்வாறு கூறுவாயாகில். ந = அங்ஙனமன்று. சப்தாத் =
சுருதிப் பிரமாணத்தால்.

வி. உ. பசுஹிம்சையினுல் அக்நி ஓம கருமங்களும் புனிதமில்லாமல் போகும், அஃதல்லாமலும் நாம் விரும்பாத பலனும் நம்மை வந்து சாரும். இஷ்டம் - விரும்புவது, அநிஷ்டம் - விரும்பாதது. இங்ஙனம் பொருள் கொள்ளின்

அநுசயீ ஜீவனுக்கு நெல்லு, கொள்ளு, எள்ளு முதலிய வடிவம் உண்மையாகி விடும். உண்மையாகி விட்டால் கௌணமென்பது பொருந்தாது. வாதி - அவ்வாறாயின்
4 4
அதற்குப் பரிகாரங் கூறுதும். ''தர்மாதர்ம விக்ஞானம்
4
சாஸ்த்ரஹேதுகம், என்பது சங்கரபாஷ்யம். இது தருமம், இது அதருமம் என்னும் அறிவு, நூலால் வருகிறது. தருமமும் அதருமமும் அதீந்திரியம். பொறிகளுக்குப் புலனாகாது என்பது பொருள்.

மேற் கூறிய இரண்டிற்கும், தேசம், காலம், நிமித்தம் இவைகளுக்கு நியமமில்லை. எந்த தேசத்தில், எந்தக் காலத்தில், எந் நிமித்தத்தில் எந்த அறஞ் செய்யப்படுகிறதோ, அதே அறம் அந்ய தேச காலங்களில் மறமாகி விடுகிறது. அறம் - தருமம். மறம் - அதருமம். எனவே நூலறிவல்லாமல் தருமாதரும விக்ஞானம் உண்டாகாது என்பது துணிபு.

ஆகையால் நூலைக்கொண்டும், நுண்ணியஅறிஞராலும் எதையுறுதி செய்திருக்கிறதோ அதையசுத்தமென்று எங்ஙனம் சாற்றலாம். கொலைத் தொழில் புரியக் கூடாதென்பது பொது நூல். , யாகத்தில் பசுவைக் கொலை செய்யலாமென்பது விசேடநூல். முன்னே சொன்னது உத்சர்க்கமென்றும், பின்னே சொன்னது அபவாதமென்றும் வடநூலார் மொழிவர். இவையிரண்டிற்கும் நிலைகள் வேறு. ஆதலின் வைதிக கருமம் சுத்தம். ஏனெனின்? அறிவுள்ள மக்கள் அதைக் கையாள்கிறார்கள். அதனால் அது குற்றமற்றது. எனவே அக்கருமத்திற்கு மரஞ், செடி முதலிய விரும்பாத ஜன்மமும் விரும்பாதத் துன்பமும் உண்டாகிறதில்லை. இதனால் நாய் முதலிய ஜன்மத்திலும், உணவு முதலிய பொருள்களிலும் அநுசயி ஜீவன் பற்றற்று இருக்கிறானென்பது கருத்து. சூ. 25.

*அவதார்ரிகை.*

கூறிய பொருளை ஐயமற அறிவதற்கு அடுத்த சூத்திரம் வருமாறு:-

3 2

**சூ. ரேத: ஸிக் யோகோ அத 3—1—26**

3 2

ரேத:, சிக், யோக; அத என்று பிரிக்கவும்.

ப. உ. ரேத: சிக் யோக : = வீரிய பாவம் உண்டா

2

கிறது. அத=அவ்வாறு ஆரணத்தில் அருளியிருக்கிறது.

வி. உ. இக்காரணத்தினுலும் உணவுப்பொருளாவது சொல் மாத்திரம்.

''யோயோ அந்நம் அத்தி யோ ரேத: சிஞ்சதி

3 4 4

தத் பூய ஏவ பவதி'' சா. உ. (5-10-6) என்பது சுருதி. எந்த எந்த (அநுசயி, ஜீவன்) அன்னத்தை. அத்தி=உண்கிருனே, யோ, ரேத: சிஞ்சதி = எவன் ஒருவன் வீரியத்தை

3 4 4

கொடுக்கிருனே, அவன், தத் பூயோ பவதி = அந்தவடிவ மாகிருன் என்பது ஆம்நாயப்பொருள். உணவுப்பொருளுக்குப்பிறகு சிக்பா்வம் (வீரிய வடிவம்) என்று சுருதிச் சொல்கிறது. இங்கும் வீரிய தானம் முக்கியமில்லை. ஏனெனின்? நெடுநாளைக்குப்பிறகு உண்டாகும் அதாவது காளைப்பருவத்தில் விளையும் புருஷத்வம் உடனே வீரிய ஆதானம் என்பது சொல்லளவேயன்றி வேறு ஒன்றுமில்லை எனவே உணவு முதலிய பொருள்களாக ஆகிருனென்பதும் தொடர்பு மட்டும் அன்றி மற்ருென்றில்லை. சூ. 26.

அவதாரிகை

இனி இந்த சூத்திரத்தில் அநுசயி ஜீவனுக்கு கரும பலத்தை நுகரும் பொருட்டு சரீரமுண்டாகின்றது என்று உரைக்கப்படுகிறது என்பதற்கு சூத்திரம் வருமாறு:-

## சூ. யோநே: சரீரம் 3—1—27

ப. உ. யோநே: யோநியில் (வீரிய விதானம் — விடுத்த பின்னர் இன்ப துன்பத்தை அநுபவிக்கும் பொருட்டு சரீரம் = அதற்கு அநுகூலமான உடல் உண்டாகிறது.

வி. உ. 'ரேத: சிக்பாவம்' வீரியதானம் செய்ப வரோடு தொடர்பு கொண்ட பிறகு அநுசயி ஜீவனுக்கு புண்ணிய பாவ ரூப பயனை யநுபவிக்கும் பொருட்டு வீரியம் பெண் குறியில் விழுந்த பிறகு சரீரம் தோன்றுகிறது என்பது சூத்திரப் பொருள். இங்ஙனம் எவ்வாறு தெரி கிறதெனின்? சுருதிச் சொல்லுகிறது. 'தத் ய இஹ ரமணீய சரண :' சா. உ. (5-10-6) அநுசயீ ஜீவன் புண்ணிய சாலி. நல்ல குலத்தில் பிறந்து சீரிய தேகத்தை யெடுப்பான் என்று மிஞ்சிய வாக்கிய மூலமாகத் தெரி கிறது. ''சுசீனும் ஸ்ரீமதாம் கேஹே யோக பிரஷ்டோ அபி ஜாயதே'' என்றபடி. ப. கீதை. குணமுள்ள கருமங் களைக் குயின்று ஞானத்தைத் தொடங்கி இடையில் உடலை விட்டவன் - சுசீனும்=அந்தணர் குலத்திலும் ஸ்ரீமதாம் = பொருள் படைத்தவர் இல்லத்திலும். யோக பிரஷ்டோபி ஜாயதே=கருமத்திலிருந்து ஏறி ஞானத்தைப் பெருமல் நடுவில் நழுவியவன் யோக பிரஷ்டன் எனப்படுவன். இவன் மேற்கூறிய இருவர் இல்லத்திலும் போய்ப் பிறப் பன் என்று வில்வீரனுக்குச் சொல்வீரன் சொல்கின்ருன் என்பது குறிப்பு. இதனுலும் அநுசயி ஜீவன் நவதான் யங்களோடு சம்பந்த மாத்திரமென்பது உறுதி. சூ. 27

மூன்ருவது அத்யாயத்தின் முதற்பாதம் முற்றிற்று.

மூன்ருவது அத்யாயத்தின் இரண்டாவது பாதம். இந்தப்பாதத்தில் தத்துவம் பதார்த்தத்தை விசாரிக்கின்ருர் பகவான் வியாசர்.

## (1) சந்த்[4]யாதி[4] கரணம். சூ. 1-6

*அவதாரிகை.*

ஞானமில்லாமல் வெரும் கருமத்தைச் செய்பவர்களுக்கு க[3]தி ஆக[3]தி ரூப சம்சாரம் நீங்குவது மிக அரிது. இம்மாதிரி விசாரம் செய்வதால் வைராக்கியம் உண்டாகிறது. இது ஞானத்திற்கு முன்னேடி சாதனம்.

முந்திய பாதத்தில் வைராக்கியம் உண்டாவதற்காக பஞ்சாக்நி வித்தையை எடுத்துக்காட்டாகச்சொல்லி கதி செல்வது. ஆகதி-வருவது. இவைகளைப் பற்றி விரிவாக விசாரிக்கப்பட்டது. இப்பொழுது வைராக்ய மூலமாக தத், த்வம் பதார்த்தத்தின் விசாரஞ் செய்யப்படுகிறது. இதனுல் வாக்யார்த்த ஞான முண்டாகும்.

**சூ. சந்த்[4]யே ஸ்ருஷ்டிர் ஆஹஹி** **3—2—1**

சந்த்[4]யே சிருஷ்டி; ஆஹ, ஹி என்று பிரிக்கவும்.

ப.உ. சந்த்[4]யே = கனவில். சிருஷ்டி : = படைப்பு. (உண்மை) ஹி = ஏனெனின்? ஆஹ = கூறப்பட்டிருக்கிறது.

வி. உ. முந்திய பாதத்தில் பஞ்சாக்நி வித்தையை உதாரணமாகக் காட்டி, ஜீவனுடையப் பிறப்பிறப்பின் பேதங்களை விரிவாக விளம்பியிருக்கிறது. இப்பொழுது அவனுடைய நிலைமைகள் (அவஸ்தைகள்) விரிவாகக் கூறப்படுகிறது. ''ச, யத்ரபிரஸ்வபிதி'' பி.உ. (4-3-9) ச = ஜீவன், யத்ர = எப்போது பிரஸ்வபிதி = தூங்குகிருனே என்பது

2 2 3
சுருதி. இங்ஙனம் மொழிந்து ''நதத்ர ரதா நரத யோகா
2 4 2 2 2 3 2
நபந்தா, நோபவந்தி அத ரதான் ரதயோகான் பத: சிரு-
ஜதே, பி.உ. (4-3-10) இவ்வாறு மறை அறைகிறது.

இவண் ஐயம் உண்டாகிறது. நனவில் உள்ள உலகம் போல் கனவிலும் காணும் உலகம் சத்யமா அல்லது அசத்தியமா என்று சந்தேகம் எழுகிறது.

4 2
சந்த்யம்—சுவப்பன ஸ்த்தானம்.) உனக்கு என்ன
வாகத்தெரிகிறது? பிரதிவாதி—உண்மையாகத் தெரிகிறது. எங்ஙனமென்று வாதி. கேட்பாயாகில்? மறைகளில்காணப்
4 2
படுவதால். ''சந்த்யம் திருதீயம் ஸ்வப்ன ஸ்தானம்,
(4-3-9)

பி.உ. என்று உரைக்கிறது. நனவு, உறக்கம்
4
இவை யிரண்டிற்கும் (சந்தியில்) நடுவில் வருவதால் கனவு
4
சந்த்யம் எனப்படும். அவ்வகைப்பட்ட கனவில் காணப்-
படும் உலகம் சத்யமென்பது எனது மதம். இதற்குப் பிரமாணம் வருமாறு:-

2 2 3 2
ரதான் ரத யோகான் பத: சிருஜதே என்றது வேதம்.
2 2
பி.உ. (4-3-10) ரதான் = தேர்களையும். ரதயோகான்
2
=அதற்குரிய குதிரைகளையும். பத : =வழியையும் படைத்-
தான் என்றும், ''சஹிகர்த்தா, ஆத்மா (செய்கிறது) என்றும் முடிவில் மொழியப்பட்டிருப்பதாலும் சொப்பன சிருஷ்டி யுண்மையென்று உணரப்படுகிறது. சூ. 1

*அவதாரிகை.*

பூர்வ பட்சத்தை நன்குப் புலப்படுத்தும் பொருட்டு மற்றொரு சூத்திரம் வருமாறு :-

1 1 3 1
**தூ நிர்மாதாரம் சைகே புத்ராதயஸ்ச 3—2—2**

3 1
நிர்மாதரம், ச, ஏகே, புத்ராதய: ச, என்று பிரிக்கவும்.

ப.உ. ச=மேலும். ஏகே=சில கிளைகளை யோதும் சீரியோர் நிர்மாதாரம் =சொப்பனப் படைப்பு ஆத்மாவினது.
3
புத்ராதய : = (காமமென்னுஞ் சொல்லால்) பெண்டீர், பிள்ளைகளைக் கொள்ளுகின்றனர்.

வி.உ கனவில் காணப்படும் பொருள் முழுதும் உண்மை, இறைவன் படைத்ததால், ஆகாசாதிகளைப்போல என்று அவர்கள் தரும் அநுமானம் இங்கு உணரற்பாலது. அவர்கள் - பிரதிவாதிகள். கடவல்லி உபநிஷத்தை நன்று ஆராய்பவர்கள். ஈண்டு 'ஏகே, என்று கொள்ளப்படுவர். ஈண்டு-இங்கு.

இந்த கனவில் விரும்பிய பொருள்களைப் படைப்பவன்
3
பரமன் என்று பகருவர். "யஏஷு சுப்தேஷு ஜாகர்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண:" க. உ. (5 - 8) என்பது ஆம்நாயம். யஏஷ புருஷ : சுப்தேஷு = அப்படிப்பட்ட இந்த பரமாத்மா சொப்பணத்தில் காமம் காமம் = விரும்பிய பொன்னும் பொருள்களையும். நிர்மிமாண : = ஆக்கிக்
3
கொண்டு. ஆக்குதல்—படைத்தல். ஜாகர்தி = விழித்திருக்கிறார் என்பது கடவல்லியின் கருத்து.

பொதுவாக காமமென்பது இச்சையைக் குறித்தாலும் மற்றைய மொழிகளைக் கொண்டு இங்கு பெண்டீர், பிள்ளை, பொன், பொருள், மண், மணி முதலியவைகளைக் கொள்ள

வேண்டும். மற்றைய மொழி வருமாறு - 'ஸதாயுஷ: புத்ர பௌத்ரான் விரிணீஷ்வ' க. உ. (1-23) (குழந்தாய்) நூறு வயதுள்ள குழந்தைகளேயும், நூறு வயதுள்ள பேரன் பேத்திகளேயும் விரும்பு என்றதாலும், முடிவில் காமாநாம் த்[4]வா காம பாஜம் கரோமி, க. உ. (1-24) என்ற உரையாலும் உணரலாம். இதனுல் காம சப்தம் பிள்ளேயை உணர்த்துகின்றது என்பது இனிது புலனும்.

'நிர்மாதாரம்' ஈண்டு நிர்மாணம் - படைப்பது என்ற பதத்தால் அறிவு நிறைந்த இறைவனே நாங்கள் கொள்கிருேம். இது, யமன் வாக்ய மூலமாகத் தெளிவாகிறது. மிஞ்சிய மொழிகளும் இங்ஙனங் கூறுகின்றன. விஞ்சிய வாக்கியம் 'அந்யத்ர த[4]ர்மாத் அந்யத்ர அத[4]ர்மாத்' க. உ. (2- 14) தருமத்திலிருந்தும், அதருமத்திலிருந்தும், எது வேருக இருக்கிறதோ, என்ற நசிகேதன் வசனத்தால் இறைவன் என்று தெளிவாகிறது.

இஃதன்றியும் எஞ்சிய மொழிகள் பல உள்ளன. பிரஹ்ம, அமிர்தம், என்பன. இவைகளாலும் இறைவன் ஆக்கிய நனவு போல, கனவும் உண்மையென்று உணரலாம். நனவையும் கனவையும் பற்றி வரும் பொருள்களே நாரணன் செய்ததால் நிலேயுள்ளது. இதைத்தான் வேறு மறையும் விளம்புகின்றது - ''அதோ[2] க[2]லு ஆஹுர் ஜாக[3]ரித தே[3]ச ஏவ அஸ்ய ஏஷ இதி, யாநிஹியேவ ஜாக்[3]ரத் பஶ்யதி தாநிசுப்த : பி. உ. (4-3-14) என்ற வாக்கியத்தாலும் அறியலாம்.

அதோ[2] = அதனுலன்ருே ஆஹு : = கூறுகின்றனர் (என்ன மொழிகிருர்கள்) அஸ்ய ஏஷ இதி = இந்த ஜீவனுக்கு எது

2 3
சொப்பன ஸ்தானமோ. (அது) ஜாக்ரீததேச ஏவ = நனவுக்கு உரிய இடமென்று கொள்ள வேண்டும். யாநிஹி யேவ
3
ஜாக்ரத் பஸ்யதி = எந்தப் பொருளை நனவில் பார்க்கிருனே தாநி = அந்தப் பொருளை, சுப்த: = கனவில் பார்க்கிருன் என்பது மறையின் பொருள். ஆக இம்மறைகளெல்லாம் நனவு கனவுகளுக்கு ஒரே நியாயத்தை யோதுகின்றன. எனவே கனவில் உள்ள பொருள்களையும் நனவைப்போல சத்யமென்று கொள்ளவேண்டும் என்பது பிரதிவாதியின் பேய்ப்பிடிவாதம். இந்த இரு சூத்திரமும் பூர்வ பட்சத்தைப் புலப்படுத்துகின்றன. சூ. 2

*அவதாரிகை*

முந்திய இரு சூத்திரங்களால் சொப்பன சிருஷ்டியை சத்தியமென்று பூர்வபட்சி மொழிந்தான். அதைக் கண்டிக்-கும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

4
**சூ. மாயாமாத்ரந்து கார்த்ஸ்ந்யேந அநபிவ்யக்த ஸ்வரூபத்வாத் 3—2—3**

4
மாயாமாத்ரம், து, கார்த்ஸ்ந்யேந, அநபிவ்யக்த, ஸ்வரூபத்வாத், என்று பிரிக்கவும்.

ப. உ. து = து என்னும் சொல் எதிரியின் முடிவை இடித்து நொறுக்கும் பொருட்டு. மாயாமாத்ரம் = (கனவு பொய்) சொப்பன சிருஷ்டி பொய். கார்த்ஸ்ந்யேந = தேச
4
கால, வஸ்து தருமங்களால். அநபிவ்யக்த ஸ்வரூபத்வாத் = வெளிப்படையாக அல்ல.

வி.உ. கனவில் காணும் படைப்பு உண்மையென்றது
4
முறையன்று. மாயை. — பொய். சந்த்யே சிருஷ்டி;

உண்மையின் மணம் கூட கிடையாது. பின்னை சத்தியம் எங்ஙனமாகும்? ஆகாதென்பது கருத்து. ஏனெனின்? அதற்கு உரிய தேசம், காலம், பொருள், இவைகள் இல்லாததால். கார்த்ஸந்யம்-உண்மை. உண்மையான பொருள்கள் அங்கு ஒன்றுமில்லை. அங்கு-கனவில். கனவில் விளங்கும் பொருள் உண்மையில் எண்ணிப்பார்க்கும் போது இருப்பு, விளக்கம், பிரியம் இல்லை.

இவன் அங்கு கண்டது தேர். தேர் ஊர்ந்து செல்வதற்கு உரிய இடம், காலம், பொருள்கள் எங்கிருக்கின்றன? இல்லையென்பது உறுதி. அங்ஙனமாயின் தேஹத்திற்கு வெளியில் கனவுகாண்கிருனெனின்? அவ்வாறு

3 1

கூறியிருக்கிறதே 'பஹிஷ்குலாயாத் அமிர்தசரித்வா. ச ஈயதே அமிர்தோ யத்ரகாமம்,, பி.உ. (4-3-12) என்பது ஆகமம். (ஜீவன் அமிர்த வடிவினன்) அவன் உடலிலிருந்து வெளி

3

யில் திரிகிருன். பஹிஷ்குலாயாத் = சரீரத்திலிருந்து புறத்தில் ஈயதே = விளையாடுகிருன். யத்ரகாமம் = வாசனை யெங்கிருக்கிறதோ அங்கு செல்கிருன் என்பது சுருதி. இதனுல் இவன் வெளியே சென்று கனவுகாண்கிருனென்பது தெரிகிறது. நிலைமையும் அதுதான். செல்லுந் தன்மையும், தோற்றத்தின் பேதமும், தேகத்திற்கு வெளியில் செல்லாது போனுல் பொருந்தாது.

உறங்குகிற ஜீவன், ஒரு கணத்தில் பல்லாயிரயோ ஜனை தூரம் வேறுதேசம் போகவோ வரவோ எங்ஙனம் இயலும். இந்த வலிமை எவ்வாறு பொருந்தும்? இஃதன்றியும் இங்கு இருந்து நான் உறக்கத்தில் பாஞ்சால தேசம் சென்றேன், துயில் நீத்தப்பிறகு தூங்கிய இடத்திலேயே விழிக்கிறேனென்கிருன். அங்கு சென்றது உண்மையென்ருல் அங்கு விழித்திருக்கவேண்டும். மேலும்

2
அந்ய ஆகமம்-''ஸ்வேசரீரே யதா காமம் பரிவர்த்ததே'' இவன் தன்னுடைய உடலுக்குள்ளே தனது எண்ணம் போலத் திரிகிருன் என்றுங் கூறுகின்றது. முந்தியசுருதிக்கும் இந்த சுருதிக்கும் முரண் காணப்படுவதால் புறத்திற் சென்று கனவு காண்கிருனென்ற மறை முக்கியம் அல்லவென்று கொள்ளவேண்டும்.

கனவில் காலமும் பிறழ்ச்சியடைகிறது. நொடிப் பொழுதில் காணும் கனவில் யுகம் கழிகிறது. நிமித்தங் களும் முறையில்லாத நிலேயில் இருக்கின்றன. கருவி சரணங்கள் லயத்தை அடைந்திருக்கின்றன. அந்நிலேயில் சொப்னப்பொருள்கள் காணப்படுகின்றன. இது என்ன முறை? எந்தக்கண் இதைப்பார்க்கிறது? இவையெல்லாம் மாறுபட்டக் கருத்தைத் தானேயுணர்த்துகின்றன.

இன்ஞெருவிதம், தேர்வகைகளேச் செய்வதற்கு உரிய காமான்கள் எங்கிருக்கின்றன? கனவில் காணும் பொருள் உண்மையில் சத்தியமாக இருக்கு மாஞல் நனவிலும் தெரிய வேண்டும்? அவ்வாறு காஞேம். எதைத்தேரென்று உறுதி செய்தோமோ மறுகணத்தில் மரம் போலக்காணப்படுகிறது. எதை மரமென்று எண்ணிஞேமோ அது மனிதனுகக் காணப்

2 2 3
படுகிறது. மேலும். ''ந ரதான் நரதயோகான்'' என்ற ஆரணம் கனவில் காணும் பொருள் முழுதும் மாயா மாத்ரம் என்று அறிவுறுத்துகின்றது. இத்ஞலும் சொப்பன சிருஷ்டி பொய் என்பது இனிது புலஞம்.

*அவதாரிகை.*

அங்ஙனம் ஆயின் கனவு பொருள்கள் இல்லே யென்ருயிற்று. அப்படியாஞல் இல்லாததாயும், பயனில் லாததாயும் உள்ள பொருளேயிறைவன் ஏன்படைத்தான் என்பதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

1 1 1 1 3 3

**ஸூ. ஸூசகஸ்ச ஹி ஸ்ருதே ராசக்ஷதே ச தத்வித: 3—2—4**

| 1 | 3 3

ஸூ. ஸூசகஸ்ச, ஹி, ஸ்ருதே:, ஆசக்ஷதே, ச, தத்வித: என்று பிரிக்கவும்.

1 3

ப.உ. ஸூசகஸ்ச= (சுவப்பனம்) பின்னால் வரும் நன்மை தீமைகளுக்கு அறிகுறி. ஹி = ஏனெனின் சுருதே:

|

ஆகமம். ஆசக்ஷதே=அவ்வாறு அருள்கின்றது. ச= மேலும்,

3 3

தத்வித:=அதையறிந்தவர்களும் அங்ஙனங் கூறுகிறார்கள். அறிந்தவர்-சொப்பனத்தை யுணர்ந்தவர்.

வி. உ. மந்திரத்தின் வலிமையாலும், தெய்வத்தின் அருளாலும், மருந்து மாயத்தாலும் சொப்பனம் நல்லது கெட்டதற்கு ஸூசகம் - அடையாளம். ஆன போதிலும் உண்மையென்று உரைக்க இயலாது. நல்லதை உணர்த்துவதற்கு நல்ல கனவும், தீயதையுணர்த்துவதற்குக் கெட்ட கனவுந் தோன்றும். சுருதி வருமாறு :

3

யதா கர்மசு காம்யேஷு ஸ்த்ரியம் ஸ்வப்னேஷு பஸ்யதி

4 3

சம்ரித்தீம் தத்ர ஜாநீயாத் தஸ்மின் ஸ்வப்ன நிதர்ஸநே

சா. உ. (5-2-8)

3

யதா = எப்பொழுது. கர்மசுகாம்யேஷு = ஆசையோடு கூடி கருமங்களைச் செய்கிற வேளையில். ஸ்வப்னேஷு = சொப்பன காலத்தில், ஸ்த்ரியம் = பெண்ணை. பஸ்யதி

4

= பார்க்கிறானோ. தத்ர = கனவு காலத்தில். சமிர்த்திம் ஜாநீயாத்=நாம் எண்ணிய எண்ணம் நிறைவேறுமென்று

அறிய வேண்டும் என்பது ஆகமப் பொருள். மேலும்,
3
'புருஷம் கிருஷ்ணம் கிருஷ்ணதந்தம் பஸ்யதி சஏநம் ஹந்தி' எவனொருவன் கனவில், கிருஷ்ணம் = கருநிறமுள்ளவனையும் கிருஷ்ணதந்தம் = கருத்தப் பல்லையுடையவனையும் உள்ள புருஷனை பஸ்யதி = பார்க்கிருனே. ஏனம் = அவனை ச = அக் கருநிற மனிதன். ஹந்தி = கொல்லுகிருன் என்பது
3
ஆரணப்பொருள். இன்னும், குஞ்ஜரா ரோஹணுதீனி
4 2 4
ஸ்வப்நே தன்யானி கரயாநாதீனி அதன்யாநி'' ச, என்பது பாஷ்யம். கனவில் யானையில் ஏறுவது நல்லது. கழுதை மேல் ஏறுவது அபசகுனம். இவைகளை 'தத்வித: ஆசக்ஷதே' என்னும் பதம் வற்புறுத்துகின்றது.

கனவிலும் நல்ல தெரிசனத்தால் நன்மையும், பொல் லாத தெரிசனத்தால் தீமையும் உண்மையாக இருந்தாலும் அங்குக் கண்ட பெண், யானை, கருத்தமனிதன், கழுதை மாயாமாத்திரம். பொய் என்பது பொருள். இதனுல் கனவு வியர்த்தமென்ருே கனவில் உள்ள பொருள் உண்மை யென்ருே அறையலாகாது. ஆகமத்திற்கும் அநுமானத் திற்கும் பொருந்தாததால் கனவைச் சொல்லும் சுருதி கௌணமென்று அறியவும்.

கலப்பை, காளை முதலியவைகளைச் சுமந்து செல்கின் றது என்னும் வாக்கியம் எங்ஙனம் முக்கியமில்லையோ அது போல் தேர், வழி, குதிரை இவைகளைக் கனவில் உள்ள புருஷன் படைக்கிருனென்னும் சுருதியும் முக்கியமில்லை யென்பது பொருள். 'அத்ராயம் புருஷ : ஸ்வயஞ் ஜோதி' இந்தச் சுருதி கனவை மனதில் வைத்துக்கொண்டு ஆன்மா சுவயம் ஒளிமயம் என்று கூறுகிறது.

ஒரு மந்திரத்தில் கனவுப் பொருள்களைப் படைத்தான் என்றும், கனவுப்பொருள்களைப் படைக்கவில்லையென்றும்

மொழிந்திருப்பதால் முந்தியதைப் பொய்யென்றும் பிந்தியதை மெய்யென்றும் கொள்ள வேண்டும். அவன் கர்த்தா வென்று மொழியப்படுகிறது. ஆனல் உறங்குகின்ற மனிதன், தேர் முதலிய காரியஞ் செய்ய முடியாது. இதற்கு முக்கிய காரியம் தேர் முதலியவைகளால் உவகையும், அதன் இன்மையால் வருத்தமும், இவைகளுக்கு நிமித்தம் நல்வினை தீவினைகளும் ஆம். இவைகளுக்கு அவன் கர்த்தா என்பது கருத்து. இவ்வாறு இதற்குப் பொருள் கொள்ள வேண்டும்.

நனவில் விஷயத்திற்கும், இந்திரியங்களுக்கும் நெருக்கம் இருப்பதாலும், கதிரவன் ஒளி காணப்படுவதாலும், ஆன்மா சுயஞ் ஜோதியென்று அறிவது அரிது. ஆன்மா ஒளி வடிவம் என்று உணர்த்துவதற்காக சொப்பன சிருஷ்டி சொல்லப்
2
படுகிறது. இதனல் ரத ஆதி சிருஷ்டி கௌணவிருத்தியாகவும், தேர் முதலிய படைப்பு இன்மை முக்கிய விருத்தியாகவும் கொள்ளப்படுகிறது.

கனவைப்படைப்பவன் பரமாத்மா வென்று சொன்னதும் பொருந்தாது. ஏனெனின்?'' ஸ்வயம் விஹத்ய ஸ்வயம்
4
நிர்மாய ஸ்வேந பாஸா ஸ்வேந ஜ்யோதிஷா பிரஸ்வபிதி' பி.உ. (4-3-9) என்பது மறை. ஸ்வயம் விஹத்ய = (ஜீவன்) தானே தூல உடலை அசேதனமாக்கி ஸ்வயம் நிர்மாய = தானே வாசனவடிவ தேகத்தையுண்டு பண்ணி. ஸ்வேந
4
பாசா ஸ்வேந ஜ்யோதிஷா பிரஸ்வபிதி = அந்த: கரண விருத்திப்பிரகாசத்தினுலும் தனது உயர்ஒளியாலும் வாசன வடிவ பொருள்களை விளக்கிக் கொண்டுத்துயில்கின்ருன் என்பது மறையின் பொருள். இதனல் கனவை ஜீவன் படைக்கிருனென்று அறியப்படுகிறது. கடவல்லியில் சுத்தத்

வாதி குணங்களும் வியவகார ஜீவன் பரமார்த்தத்தில் பிரஹ்ம சொருபமென்பதை உணர்த்துகின்றன.

இதனுலும் பிரஹ்ம பிரகரணத்தில் ஒரு விரோதமும் அன்று. ஆகாச முதலிய படைப்பு முற்றிலும் உண்மையன்று. எதனுலோ வெனின்?'' ததநந்யத்வம்[3] ஆரம்பண[4]'' அதிகரணத்தில்[4] அகில உலகத்தையும் அநித்தியமென்று அருளப்பெற்றிருக்கிறது. ஞானம் வரும்வரை ஆகாச முதலிய உலகம் ஒருபடித்தாக இருக்கிறது. கனவில் காணும் உலகமோ ஒவ்வொருகணமும் அழிந்து கொண்டேயிருக்கிறது. இது தான் இதற்கும் அதற்கும் உள்ள விசேடம் இதுகனவு. அது நனவு. எனவே சொப்பனம் மாயாமாத்திரம் என்பது உறுதி. சூ-4.

*அவதாரிகை.*

பொறிகள் நெருப்பின் அம்சம். அது போல ஜீவன் ஆத்மாவின் அம்சம். ஆத்மா-பரமாத்மா. அக்நியும் அதன் அம்சமாகிய பொறிகளும், சுடுந்தன்மையிலும், பிரகாசத் தன்மையிலும் ஒரேமாதிரிதான். எரிக்கும் தன்மையும் விளங்குந்தன்மையும் ஒன்றே போல ஜீவனிடத்திலும், இறைவனிடத்திலும், ஞானசக்தியும், ஐஸ்வரியசக்தியும் ஒருபடித்தாகத் தானேயிருக்கும். அங்ஙனமாயின் ஜீவனுடைய சங்கற்பத்தால் சொப்பன சிருஷ்டி உண்டாகட்டுமேயென்றதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

**சூ. பராபி[4] த்யாநாத்து[4] திரோஹிதம் ததோஹி அஸ்ய பந்த[3] விபர்யயௌ[4] 3—2—5**

பராபி[4] த்யாநாத்[4], து, திரோஹிதம், ததோஹி, அஸ்யபந்த[3] விபர்யயௌ[4] என்று பிரிக்கவும்.

ப. உ. து = ஆனால். அஸ்ய = ஜீவனுடைய. (ஞான
3 4
ஐஸ்வரியம்) திரோஹிதம் = மறைந்திருக்கிறது. பந்தவிபர்
4
யயௌ = பந்த மோட்சம். பராபித்யானாத்= பரமாத்மாவின் ஞானமுண்டாகாமையால் பந்தமும், அவர்ஞானத்தால் மோட்சமும் உண்டாகும்.

வி.உ. அம்சாம்சி பாவத்தால் இறைவனும் இனிய ஜீவனும் ஒன்றேயாயினும், பிரத்யக்ஷமாக ஜீவனிடத்தில் இறைவனுக்கு வேறாக தருமம் காணப்படுகிறது. ஜீவனிடத்தில் இறைவனுக்கு ஒப்பான தருமமில்லையா? இருக்கிறது, ஆனாலும், அவித்தையின் வலியால் திரோஹிதம், மறைந்திருக்கிறது.
4 4
அந்த ஜீவன் மீண்டும் (பராபித்யாநாத்) பரமனை நினைந்து வழிபடுவானாகில் அக்ஞானம் அழிந்து அருள் ஞானம் சுரந்து ஆவரணம் அகன்று அகிலவலிமையும் பெறுகிறான். எங்ஙனம் கண்ணொளி சதையால் மறைந்து, மருந்து மாயத்தால் அதையகற்றிய பிறகு அவ்வொளி மீண்டும் உண்டாகிறதோ அதுபோல் இறையருளால் ஞானத்தைப் பெற்று மறைப்பு என்கின்ற சதை நீங்கின பிறகுப் பூரண ஞான முண்டாகிறது. இறைவன் ஞானத்தால் மோட்சமும் அவன் ஞானமில்லாமல் துன்பமும் உண்டாகுமென்பதை (ததः) என்னுஞ் சொல் வலியுறுத்துகின்றது.

அவ்வாறு ஆரணம் அருளுகின்றது:-" ஞாத்வா
3
தேவம் சர்வபாசாபஹாநி: க்ஷீணைர்க்லேஸைர் ஜன்மமிருத்
4 4 3 4 3
யுபிரஹாணி : தஸ்யாபித்யாநாத் திருதீயம் தேகபேதே விஸ்வைஸ்வர்யம் கேவல ஆப்தகாம : சுவே. உ. (1-11)
3
என்று வேதம் கூறுகிறது. ஞாத்வா தேவம் =பரமாத்மாவை தனது நிஜ ஆத்மாவாக அறிந்து. சர்வபாசாபஹாநி := (அவ்வாறறிவதால்) சகலஆசைகளும் அற்றுப் போகின்றன.

க்ஷீணைர்க்லேஸை:=கவலை முழுதும் ஒழிந்து போகின்றன. ஜன்ம மிருத்யு பிரஹாணி:= பிறப்பும் இறப்பும் தொலை-
4 4
கின்றன. தஸ்யஅபித்யாநாத் = பரமனை வேண்டுவதால்.
3 4 3
தேஹபேதே=உடலைவிட்டு (உயிர்) ஜீவன் பிரிந்த போது. த்ருதீயம்=மூன்ருவது நிலை. காரணபிரஹ்ம தன்மை. விஸ்வைஸ்வரீயம்=நிகில செல்வமும் நிறைந்த காரண பிரஹ்மத்தையடைந்து, ஆப்தகாம:= எல்லா உவகையும்
3
பெற்றவனுய். கேவல=நிலை. விதேஹத்தன் மையை முடி-வில் அடைகிருனென்பது ஆரணத்தின் திரண்ட பொருள். இதனுல் அறியாமையால் அறிவு மறைந்த ஜீவன் கனவு சிருஷ்டியைச் செய்ய இயலாதென்பது இனிது புலனும். சூ. (5)

*அவதாரிகை.*

நெருப்பிலும், நெருப்பின் அம்சபொறியிலும்,
3
தஹிக்கும் வலிமையும், ஒளியும், தளராதிருக்கவும், ஆத்மாம்சமான ஜீவனுக்கு மட்டும் தளர்ந்து இருக்கவும் காரணம் என்னை யென்பதற்குச் சூத்திரம் வருமாறு:-

3 3 3
**சூ. தேஹ யோகாத்வா ஸோ அபி 3—2—6**

3 3 3
தேஹ, யோகாத்வா ஸோ, அபி, என்று பிரிக்கவும்.

3 3
ப.உ. சோ அபி=அதுவும். தேஹ யோகாத்=தேகஆதி தொடர்பினுல் (உண்டாகிறது).

வி.உ. சோஅபி = ஜீவனுக்கு உரிய ஞானமும் ஐஸ் வரியமும். மறைந்து போவதற்கு நிமித்தம் தேகயோகம். உடலோடு உறவு. இங்கு உடல் என்பதால் மூன்று உடலையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். பொறிகள், புலன்கள், பிராணன், மனம், புத்தி இவைகளுக்கு நிமித்தமான

அறியாமை. இவைகளோடு (சம்பந்தம்) உறவு கொள்வதால் உண்மையான உணர்வும், ஒள்ளிய செல்வமும் கார்காலத்தில் கதிரவன் என்ன, மறைந்து போகின்றன. வா, என்னுஞ் சொல் ஐயத்தையகற்றுகின்றது.

கட்டையில் பொதுவான நெருப்பும், சுடுந்தன்மையும் இருப்பினும், மறைந்திருக்கிறது. அது போல் என அறிக. அடுப்பில் அனல் இருப்பினும், சாம்பல் மேலே மூடியிருக்கு மாருல் தெரியாது. அதுபோன்று அக்ஞானத்தால் எழுந்து, நாம ரூபமாக வந்து, உடல் உறுப்பு என்னும் உபாதியோடு உறவு கொண்டு, முடிவில் ஞானமும், அழியா ஐஸ்வரியமும் மறைந்திருக்கின்றன.

அப்படியாருல் ஜீவனை இறைவனுக்கு வேருக ஏன் சொல்லக் கூடாது? தேக யோக கற்பனைக்குப் பதிலாக ஜீவன் ஈஸ்வரனுக்கு அந்நியன், மறைபட்ட அறிவையுடையவஞ யிருப்பதால் என்ற அநுமானமும் பொருந்துமேயென்பா யாகில், அது ஒவ்வாது. எதனுலோவெனின்? 'அநேந ஜீவேன ஆத்மநா' இம் மூன்று பதமும் ஒரு வேற்றுமையில் வந்திருப்பதாலும், தத்வமசி என்னும் வாக்கியத்தாலும் ஜீவன் பிரஹ்ம சொருபமென்று புலனுகின்றது. 'தத்சத்யம்' அதுதான் உண்மை.

ஆகையால் ''அக்ஞாநேந ஆவிருதம் ஞானம் தேந முஹ்யந்தி ஜந்தவ : என்பது ப. கீதை, அர்ஜுனு! அக்ஞா நேன = ஆத்மாவையறியாததாலும், அறை குறை ஞானத் திஞலும். ஆவிருதம் ஞானம் = உண்மை ஞானம் மறைபட்டு அதனுல், தேந-மறைபட்ட ஞானத்தால். முஹ்யந்தி ஜந்தவ: = (ஆத்மா அநாத்ம விஷயத்தில், மோஹத்தை அக்ஞானிகள் அடைகிருர்கள் என்று தாமோதரன் தனஞ் ஜயனுக்குச் சாற்றுகின்ருன் என்பது கருத்து. எனவே ஜீவன் இறைவனுக்கு அநந்யம் என்றும், அவனதுஞானம்,

தேகாதிகள் உறவால் மறைந்திருக்கிறதென்றும், நன்கு தெரிகிறது. இதனுல் இவன் எண்ணத்தால் சொப்பன சிருஷ்டியுண்டாகவில்லையென்று உணரலாம்.

ஜீவாத்மா இயல்பாக ஒளிமயன் என்பதை விளக்கும் பொருட்டு சொப்பன அவஸ்தை உரைக்கப் பெற்றது. ஜீவன் தானே படைப்பானுகில் நல்லதையே படைக்க வேண்டும், பொல்லாத சொப்பனத்தையேன் படைக்க வேண்டும்? வேண்டுவதில்லை. இவையெல்லாம் எண்ணிப் பார்க்கும் பொழுது கனவு மாயா மாத்திரமென்பது தெற்றெனத் தெளிவாம். சூ. (6)

3 4 4
தத் பாவாதி கரணம் :

*அவதாரிகை*

கனவைப் பற்றியச் சிந்தனை முடிந்து விட்டது. இனி சுஷுப்தியைப் பற்றிய விசாரம் செய்யப்படுகிறது. உறக்கத்தைப் பற்றிய மறைகளும் இருக்கின்றன. இதை விலக்கும் பொருட்டு இனி சூத்திரம் வருமாறு :-

3 4 3
**ஸூ. தத³பாவோநாடீஷு தத்ஸ்ருதே ஆத்மநிச**
**3—2—7**

4 3 1
தத், அபாவ : நாடிஷு தத் ஸ்ருதே : ஆத்மநி, ச என்று பிரிக்கவும்.

3 4
ப.உ. தத பாவ : = சொல்லப்பட்ட சொப்பனமில்லாத சுஷுப்தி. நாடிஷு = நாடிகளில் நுழைந்து. ஆத்மநி = ஆன்மாவில் உண்டாகின்றது. தத் சுருதே : = அந்தந்த ஆம்நாயத்தில் அவ்வாறு அருளப் பெற்றிருக்கிறது.

வி.உ. அச்சுருதி வருமாறு :- ''தத்யத்ரைத$^{3}$த் சுப்த$^{3}$ : சமஸ்த : சம்ப்ரசன்ன : ஸ்வப்நம் நவிஜாநாதி ஆசு த$^{4}$ தா நாடிஷு சிருப்தோபவதி''

சா.உ. (8-6-3) என்றும், வேறு இடங்களிலும், ''தாபி$^{4}$: பிரத்யவசிருப்ய புரீததி சேதே'' என்றும், பி.உ. (2.1.19) ''தா$^{3}$சு த$^{4}$தா பவ$^{3}$தி யதா சுப்த: ஸ்வப்னம் ந கஞ்சன பஸ்யதி அத$^{2}$ அஸ்மின் பிராண ஏவைகதா$^{4}$ பவதி' கௌ. (உ. 4-19) என்றும், இன்னும் பற்பல சுருதிகள் வருகின்றன.

தத் யத்ர=ஆனால் சுஷுப்தியில். ஏதத் சுப்த : = இந்த ஜீவன் தனது உறுப்புக்கள் அனைத்தையும் ஒடுக்கிக் கொண்டு உறங்குகின்றானே. சம்ப்ரசன்ன : மிகுந்த உவகையோடு சுவப்னம் நவிஜாநாதி=உறக்கத்தில் சொப்பனத்தை யறிகிற தில்லை. அந்நேரம் அவன் நாடியில் நுழைந்திருக்கிறான் என்பது அச்சுருதியின் பொருள். 'தாபி$^{4}$ : பிரத்யவசிருப்ய' அந்த நாடிகளோடு கலந்து புரீதத்து என்னும் நாடியில் தூங்குகிறான் என்பது அடுத்த ஆகமத்தின் பொருள்.

நாடியில் உறங்கினாலும் தத் சம்பந்தி ஆத்மாவில் தூங்குகிறானென்பதுதான் பொருள். இந்த ஜீவனுக்கு எங்கும் இடமில்லாமல் பிராண வடிவ ஆன்மாவில் துயில் கிறானென்று மற்றைய மறை அருள்கின்றது. பிராணனில் ஒடுங்குகின்றது என்றாலும் பிரஹ்மத்தில்தான் ஒடுங்குகின்ற தென்பது பொருள். பிராணனும் பிரஹ்மமும் ஒன்று என்பது குறிப்பு. நாடிஷு என்று ஏழாவது வேற்றுமையில் கூறியதால் ஒரு குற்றமும் அன்று. புரீதத்து என்பது இதயத்தை வளைந்திருக்கும் ஒரு நாடி. உபாதியினால் ஜீவன் வேறு வேறு இடங்களில் துயில்கிறானென்றாலும் உபாதி

யகன்ற பின்னர் சத்ரூப பிரஹ்மத்தில் ஒடுங்குவதென்பது உறுதி. எனவே ஆத்மாதான் சுஷுப்தி ஸ்த்தானம். (சூ. 7)

அவதாரிகை.

ஆன்மாவே உறக்கஸ்தானம் என்பதற்கு அடுத்த சூத்திரம் வருமாறு :—

3 4
## ஸூ. அத : ப்ரபோதோ அஸ்மாத் 3—2—8

3 4
அத : ப்ரபோத : அஸ்மாத் என்று பிரிக்கவும்.

ப.உ. (பரமாத்மா தான் துயிலுமிடம்) அத: = அதனால்
3 4
அஸ்மாத் = ஆத்மாவிலிருந்து. ப்ரபோத: = விழித்து வருவதால்.

வி.உ. ஜீவன் ஆத்மாவிலிருந்து எழுந்து வருகிறான். அதனால் துஞ்சுவதற்கு இடம் ஆன்மா என்பது எங்ஙனம்
3
தெரிகிறதென்பாயாகில், அது வருமாறு:- ''சத ஆகம்ய'' = சத்திலிருந்து இவன்-ஜீவன் வருகிறான் என்று உரைக்கப்பெற்றிருக்கிறது. அஜாத சத்துரு என்பவன் ஒரு அரசன்.
3
அவனிடம் கார்க்யன் என்னும் அந்தணன் சென்றான். அந்தணனிடம் அரசன், மறையவரே! உறக்கத்தில் இந்த ஆன்மா எங்கு இருக்கிறது? பிறகு எங்கிருந்து வருகிற
3
தென்று வினவினான். ''குதஏதத் அகாத்,, பி.உ. (2-1-16) அதற்கு அந்தப் பார்ப்பாரால் பதில் அளிக்க இயலவில்லை.

இந்நிலையைக்கண்ட அரசன் ''ஆத்மந : சர்வே ப்ராணா:'' ஆத்மாவிலிருந்து எல்லாம் உண்டாகின்றன என்று
3 3 3
கூறினான். மேலும் ''சதஆகம்ய ந விது : சத ஆகச்சாமஹே, என்பது சுருதி. சா. உ (6—10—2) உறக்கத்திற்சென்ற

ஜீவன் சத்ரூப ஆன்மாவிலிருந்து வருகிறோம் என்பதை உணர்கிறதில்லை, என்ற மறையும் ஆன்மா சுழுத்திஸ்த் தானம் என்பதைப் புலப்படுத்துகின்றது. இவ்விஷயத்தில் ஐயம் எழும் போது, சிலர் நாடியையும், சிலர் புரீதத்தையும் சிலர் பரமாத்மாவையும் கூறுகின்றனர். ஆனாலும் இவ்வி கல்பத்தில் ஆத்மா உதிக்குமிடம் என்பது சாலப் பொருத்தம். இதனால் சுஷுப்தி நிலைமை விசாரிக்கப்பட்டது. சூ.8

3 3 4 4
கர்மாநுஸ்மிருதி சப்த வித்யதி கரணம்.

*அவதாரிகை*

உறக்கத்தில் சத்தோடு கலந்த ஜீவனே வெளியில் வருகிறான் என்பதில் என்ன உறுதியிருக்கிறது? எங்ஙனம் நிறைந்த கடலில் ஒருதுளி நீரை விட்டால் அக்கடலிலிருந்து நீரை யெடுக்கும் போது அதுதான் மேலே வருகிற தென்று எங்ஙனம் தெரியும் என்றதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:-

3 3 4 4
**சூ. ஸ ஏவது கர்மாநுஸ்மிருதி சப்தவிதிப்ய: 3—2—9**

3 3 4 4
ஸ, ஏவ, து, கர்ம, அநு ஸ்மிருதி; சப்த விதிப்ய : என்று பிரிக்கவும்.

ப. உ. து=பிரதிவாதியின் போக்கைப் போக்கு வதற்காக ஸ,ஏவ=அந்த ஜீவன்தான் (வெளியே வருகிறான்)
3 3 4 4
கர்மாநுஸ்மிருதிசப்த விதிப்ய : = கருமத்தினாலும் அநுஸ் மிருதியினாலும், சப்த விதியினாலும் அவ்வாறு தெரிகிறது.

வி. உ. பிரஹ்மத்திலிருந்து ஜீவன் எழுவதால் பிர-ஹ்மம், எழுந்து வருவதற்கு உரிய இடம். பிரதிவாதி-அது பொருந்தாது. ஏனெனின்? ஆத்மாவிலிருந்து வேறு ஜீவனும் வரக்கூடும், அதனால் துயிலுமிடம் ஆன்மா அல்லாமல் நாடியும் ஆகக்கூடும் தண்ணீரில், தண்ணீரை

விட்டோமானல் நாம் விட்ட தண்ணீர் தாம் வெளிவருகிற தென்று எங்ஙனம் சொல்ல இயலும் வாதி என்பது பிரதி மதம் நீ சொல்வது முறையன்று. எந்த ஜீவன் ஆத்மாவோடு கலந்து ஒன்ருஞனே, அவனே மீண்டும் வெளியில் வருகிருன். வேறு ஜீவனல்லன். இது எங்ஙனந் தெரிகிறதென்பாயாகில், நான்கு காரணத்தால் அறியலாம். கருமத்தைக் கொண்டுமறியலாம். துயில்வதற்கு முன்னம் எந்தக் கருமத்தைச் செய்து இடையில் விட்டு விட்டுத் தூங்கினுனே விழித்ததும் அந்தக் கருமத்தையே செய்கிருன்.

அநுஸ்மிருதி- இரண்டாவது காரணம். விட்டதை நினைத்துப் பார்க்கிருன். (இது பிரத்யபிக்ஞ ஞானமெனப் படும்) ஒருவன் நினைத்ததையின்னெருவன் நினைத்துப்பார்க்க இயலாது. சப்தாத். சோஹம், அவனே நான் என்னும் சொல் லாலும் அறியலாம். கருமவிதி, வித்யாவிதி, இவையிரண்டும் பயனற்றுப்போகும். வேறு ஒருவன் உறங்கினன் மற்ரெருவன் விழித்துவந்தான் என்ருல் உறங்கினவர் எல்லோரும் முக்தர் ஆகிவிடுவர். அங்ஙனமாயின் நீ, பதில்கூறவேண்டும் ஜீவன்இவ்வுடலை மறந்து உறக்கத்தில் ஆத்மாவோடு கலந்திருந்தும் நான் ஆன்மாவோடு கலந்திருந்தேன் என்று அறியாத தோஷத்தால் சிங்கம், கரடி, புலி, கொசு, பாம்பு, பல்லி, இன்னும் பற்பல கொடிய உயிர் களாகப்பிறக்கிருன் என்று சுருதி சொல்லியிருக்கிறது. இது வித்யாவிதி. இதனுலும் எவன்தூங்கினுனே அவனே விழிக்கிருனென்று தெரிகிறது.

நெடுநாள் கழித்துப் பயனைத் தருகிற கருமமும் வித்தையும் என்னவாகும்? மேலும் வேறு உடலில் வியவ காரம் பண்ணுகின்ற ஜீவன் இந்த உடலிலிருந்து எழுந்தானுனல் அவ்வுடலிலுள்ள வியவகாரம் நடவாது. பழமையானதும், பகரஇயலாதாயும் உள்ள அவித்தை

யென்னும் உபாதியால் கற்பிதஜீவன் உண்மையில் பரமாத்மாவிற்கு வேறு அன்று ''வேற்றுமையுணர்வால் வேரும் இருவரும் ஒற்றுமை யுணர்வால் ஒன்றெனத் தெளியே என்பது சங்கரச் சரிதாமிருதம். பொருள்வெளி. கடலில் நம்மால் விடப்பட்ட நீரை எப்படி எடுக்க முடியுமென்னும் கேள்வி பொருந்தாது. ஏனெனின்? அங்கு விவேகம் இன்மையிருக்கிறது. தார்ஷ்டாந்தத்தில் விவேக மிருக்கிறது. கருமமும் அவித்தையுமிருக்கின்றன.

பிரஹ்மத்தோடு கலந்த ஜீவனை அக்ஞானமும். அவனது கருமமும் இழுக்கும் வெளியினில். எனவே உதாரணம் ஒவ்வாது. பாலும் நீரும் கலந்திருக்க நம்மால் அதை வேறுபிரிக்க இயலாது போனுலும் அன்னப் பறவை யால் பிரிக்கமுடியுந்தானே. ஒருசேதனத்திற்கு ஒன்றையும் விரும்பாத காலத்தில் பிரஹ்மம் என்றும், உலகத்தை விரும்பிய போது ஈசனென்றும், உடலை விரும்பிய போது ஜீவனென்றும் பெயரிடப்பெற்றிருக்கிறது. உரைமயக்கம் அல்லது ஆன்மா ஒருவனேயென்றவாறு.

எந்த ஜீவனுக்கு உபாதி யொன்ருயிருக்கிறதோ அவனுக்கு ஏகஜீவவியவகாரம். வேறு உபாதியோடு கூடுகிறபோது வேறு ஜீவவியவகாரம். இவ்வுபாதி விழிப்புக்கும், உறக்கத்திற்கும், பீஜாங்குரம்போல இருக்-கிறது. ஆகையால் அந்த ஜீவனே விழிக்கிருனென்பது உறுதி. சூ. (9)

முக்தே[3] அர்த்த[4]சம்பத்தி[4]அதிகரணம்[4].

*அவதாரிகை*

உலகத்தில் எதை மூர்ச்சித (அவஸ்த்தை) அதாவது செயல் இழந்தநிலையென்று உரைக்கிருர்களோ அது

இங்கு முக்த அவஸ்த்தை யெனப்படும். அதை நனவு கனவு உறக்க மிவைகளில் எதனோடு இணைப்பது என்பது கேள்விக்குறி. அதற்கு சூத்திரம் வருமாறு:-

**ஸூ· மு3க்தே4 அர்த்4த சம்பத்தி: பரிசேஷாத் 3—2—10**

மு3க்தே4, அர்த்4த, சம்பத்தி: பரிசேஷாத் என்று பிரிக்கவும்.

ப.உ.மு3க்தே4=மயக்கமான நிலையில் (ஜீவனுக்கு) அர்த்4த சம்பத்தி:=பாதி உறக்கம். ஏனெனின்? பரிசேஷாத்= எஞ்சிய வாக்கியங்களால் அங்ஙனம் தெரிகிறது.

வி.உ. இம்மயக்கமென்னும் நிலையை, மூன்று அவஸ்த்தைகள் முறையாக நனவு, கனவு, துயில் என்று மொழியப் பட்டிருக்கிறதே, இவைகளில் அதை யெந்த அவஸ்த்தையோடு இணைப்பது என்று இங்குச் சிந்திக்கப்படுகிறது.

மூன்று அவஸ்த்தைகள் ஜீவனுக்கு முறையாக மொழிந்திருக்கின்றன. உத்கிராந்தி—(உடலை விட்டுஉயிர் பிரிந்து போவது) இது நான்காவது அவஸ்த்தை யென்று நவிலப்படுகிறது. நவிலுதல்-சொல்லுதல். இவனுக்கு ஐந்தாவது நிலையருளவில்லை. நிலை-அவஸ்த்தை. எனவே மயக்க நிலை, நான்கு நிலையில் ஒருநிலை எனப்படும். வாதி.

மயக்கமான நிலையை நனவில்வைக்க இயலாது. ஏனெனின்? இந்நிலை, பொறிகளைக் கொண்டு புலன்களை யறிகிறதில்லை அங்ஙனமாயின் நுண்ணிய பொருள்களைச் செய்கின்ற மக்கள் அதைத் தவிர எப்புலன்களையும் உணர்வதில்லையே யென்பாயாகில், புலன்களையுணராது போனாலும் அந்த நுண்ணிய பொருள்களைச் செய்கின்றேன் என்ற உணர்வு அவனுக்கு இருக்கிறது. அந்த உணர்வு, மயங்கிய

மனிதனிடத்தில் இல்லை. நுணுக்க மானவேலை செய்பவன் மனம் அந்த நுண்ணிய செயலில் ஈடுபட்டிருப்பதால் மற்ற பொருள்களையறிய இயலவில்லை, மயக்கத்தையடைந்த மனிதன் மனம் செயலற்று இருக்கிறது. ஆகையால் மூர்ச்சிதமனிதன் அசேதனமாகி விடுகிருன்.

மேலும் நுண்ணிய பொருள் செய்தவன் வேலை முடிந்தவுடன் நான் இவ்வளவு நேரம் இவ்வேலையில் ஈடுபட்டிருந்தேன் என்கிருன், மயக்கமுற்றவனே மயக்கந் தெளித்து விழித்தவுடன் ஒன்றுமுணராது பிணம் போல் கிடந்தேன் என்கிருன். இருவருக்கும் இதுதான் வேறுபாடு. இன்னும் சூக்கும வேலைப் பார்ப்பவன் உடல் நனவில் நிற்கிறது. மயக்கம் அடைந்தவன் உடல் தரையில் கிடக்கிறது. எனவே மயக்கம் உள்ள மனிதன் கனவையும் நனவையும் காண்கிறதில்லை.

ஆனல் அவனையிறந்தவனென்றும் இயம்ப இயலாது. இறந்தவனென்ருல் உடலில் பிராணனும் கொதிப்பும் இருக்கக்கூடாது. இவனுக்கோ இவை இரண்டும் இருக்கிறது. மயக்கமுள்ள மனிதன் இறந்தானு இல்லையாவென ஐயம் வரும்போது இவன் இதயத்தில் கொதிப்பு இருக்கிறதா, இல்லையாவென்று கை வைத்துப் பார்க்கிருர்கள். இவன் இருக்கிருனு இறந்துபோனுனு வென்று மூக்கில் கை வைத்துப் பார்க்கிருர்கள். மூச்சு போகிறதா, போகவில்லையாவென்று பார்க்கிருர்கள். இறந்து போனுன் என்று தெரிந்தால் எரிக்கிருர்கள். இறக்கவில்லையென்று அறிந்த பிறகு மருந்துகளைக் கொடுக்க முயல்கிருர்கள். அங்ஙனமாயின் உறக்கத்தோடு இவனையிணைக்கலாமே, எனின்? உறக்கத்தில் உள்ள ஜீவன் இறக்கவுமில்லை, செயல்படவுமில்லை என்பாயாகில், அதுசரியல்ல.

உறக்கநிலையும், மயக்கநிலையும் வெவ்வேறு மயக்கமுள்ளவன் நெடுங்காலம் மூச்சுவிட முடியாது. அவனது

உடல் நடுங்குகிறது. முகம் விகாரமாகவும் கண் திறந்த வண்ணமும் இருக்கிறது. உறங்கினவனுக்கு மலர்ந்தமுகமும் தடையற்ற சுவாசமும் இயல்பாக இருக்கின்றன. அவன் உடல் நடுங்குகிறதில்லை. இஃதன்றியும் கரத்தால் தொட்ட மாத்திரத்தில் எழுந்துவிடுகிறான். ஆனால் மயங்கிவிழுந்தவனை உலக்கையைக் கொண்டு அடித்தாலும் விழிப்பதில்லை. மயக்கத்திற்கும், உறக்கத்திற்கும், நிமித்தமும் வேறு வேறு. பிறரால் அடிக்கப்பட்டோ, அல்லது மரமுதலியவை களிலிருந்து கீழே விழுந்தோ மயக்கமுண்டாகிறது. அதனால் அவனுக்குப் பாதி உறக்கம் வருகிறது.

மயங்கி விழுந்தவனை உறங்குகிறானென்று யாரும் உரைப்பதில்லை. உறக்கம் வேலை முதலிய களைப்பால் வருகிறது. சேதனத்தையிழந்ததால் சம்பன்னன். உறக்கத்திற்கு வேறானதால் அசம்பன்னன். இவையிரண்டிற்கும் பொருள் பாதியுறக்கம். அங்ஙனமாயின் பிரதிவாதிகேள்வி சத்ரூப ஆன்மாவோடு கலந்து ஒன்றாகிறான், என்றும், திருடன், திருடன் இல்லாதவனாகிறான் என்றும், அரூப ஆன்மாவைப் பாவ புண்ணியம் பற்றமாட்டாவென்றும் இந்த ஆன்மாவை ஜரை, மரணம் கவலை, இன்பதுன்பம் பொருந்தாதென்றும், ஆரணம் அருளுகின்றது. ஆரணம்வேதம்.

ஜீவனுக்கு இன்பதுன்பம் வருவதற்கு முன்னேபாவ புண்ணியமுண்டாகவேண்டும். துன்பம் என்னும் உணர்வும். இன்பமென்னும் உணர்வும் உறக்கத்தில் எழுவதற்கு நியாயமில்லை. இந்நிலைமுழுவதும் மயக்கமுள்ளவனுக்கும் உண்டாகின்றன. இவனுக்கு பூர்ணதுயில் ஏன்வரக்கூடாது? வாதி-வருவதற்கு நியாயமில்லை. மயக்கத்தை யடைந்த மனிதன் பிரஹ்மத்தோடு கலக்கிறதில்லை, அதனால் பாதி தூக்கம். மயக்கநிலை மரணவாயில். உறக்கம் அவ்வாறன்று.

மயக்கமுடையவனுக்கு கருமங்கள் எஞ்சியிருந்தால் இவனது மனமும், பிராணனும் அவைகளுடைய இடத்திற்கு வரும். எஞ்சிய கருமம் இல்லாது போனால் நிலை குலைந்து

விடும். இதனுல் ஆன் மாவை யறிந்த அறிஞர்கள் இவனுக்கு பாதி உறக்கமென்று பகர்வர். இதற்காக அதை ஐந்தாவது அவஸ்த்தை யென்றும் அறையலாகாது. சூ,10

4 3 4
உபயலிங்க அதிகரணம்

உறக்க முதலியவைகளில் உபாதி அடங்கினதால் ஜீவன் எந்தப் பிரஹ்மத்தோடு கலந்து கொள்கிருனே அப்பொழுது அவனது உண்மையான வடிவம் இன்ன தென்பதைச் சுருதிகளால் சொல்லப்படுகிறது. பிரஹ்மத்தை விளக்கும் மறைகள் இருவிதம். சூத்திரம் வருமாறு:-

2 4 3
## சூ. ந ஸ்த்தானதோ அபி பரஸ்ய உபயலிங்கம் சர்வத்ரஹி 3—2—11

4 3
ந, ஸ்த்தாநதோ அபி, பரஸ்ய, உபயலிங்கம், சர்வத்ரஹி என்று பிரிக்கவும்.

ப.உ. ஸ்த்தாநத: = இயல்பாக. பரஸ்ய = பரமாத்
4 3
மாவில். உபயலிங்கம் = சகுணநிர்குணம். ந = பொருந்தாது ஹி = ஏனெனின்? சர்வத்ர = எல்லா உபநிடதங்களிலும் நிர்குணத்தை மட்டும் கூறியிருப்பதால்.

வி.உ. உபயலிங்கம், சகுணம், நிர்குணம். இங்கு லிங்கமென்பது குணத்தைக்குறிக்கும். உபயம்-இரண்டு. இதை சவிசேஷம், நிர்விசேஷம் என்றும் சாற்றுவார்கள். ரிஷிகள் என்பது பொருள். உபயலிங்கசுருதி வருமாறு:-
3 4
''சர்வ கர்மா சர்வகாம: சர்வகந்த: சர்வரச'' சா.2.(3.14.2) சர்வகர்மா = (சகல உலகமும்) இந்த ஆன்மாவுக்கு வினை களாம். சர்வகாம:= எல்லாக் குற்றமுமின்றிய விருப்பு
3 4
இதற்கு காமமாம். சர்வகந்த:= எல்லா மணமும் இதற்கு

இனிமையாம். சர்வரச:=எல்லா ஆனந்தமும் இதற்கு சொந்தமாம். இதற்கு—ஆன்மாவுக்கு. இது சவிசேஷலிங்கம். சகுணத்தைக் குறிக்கும். ''அஸ்த்தூலம் அநணு அஹ்
3 4
ரஸ்வம் அதீர்கம்,, பி.உ. (3-8-8) அது, தூலமுமில்லை, அணுவுமில்லை நெடிலுமில்லை, குறிலுமில்லை, இது நிர்வி சேஷலிங்கம். நிற்குணமென்பது பொருள்.

இந்தச் சுருதிகளைக் கொண்டு இரு வடிவமாக பிரஹ்மம் இருக்கிறது என்று அறிவதா, அல்லது ஒரு வடிவமாக இருக்கிறதென்று உணரவா? அங்ஙனமாயின் நிற்குணமா அல்லது சகுணமா என்பது யிங்கு விசாரிக்கப் படுகிறது. உனக்கு எப்படித் தெரிகிறதெனின்? வேதம் இரண்டையுங் கூறுவதால் சகுணம், நிற்குணம் பிரஹ்மம் என்று தெரிகிறது என்பது பூர்வபட்சம். வாதி-அதுமுறை யன்று. ஏனெனின்? இறைவனுக்கு இயல்பாக உருவமும் அருவமும் ஒவ்வாது. இறைவன்-பிரஹ்மம். அப்படியானால்
2
'ஸ்தானத:' நிலம் நீர் முதலிய உபாதித் தொடர்பால் ஆகட்டுமே யென்பாயாகில், அதுவும் பொருந்தாது. ஏனெனின்? உபாதியோடு கூடின போதிலும் ஒரு பொருள் மற்றொரு பொருளாகாது. இயல்பான பளிங்குக் கல் இன்னொரு பொருள் தொடர்பால் மலினம் ஆகிறதில்லை. அதில் மலினங் காணப்படுமானல் மயக்கமேயாகும். அறியாத தோஷத்தால் அதில் அழுக்குக் காணப்படுகிறது. அதனல் உருவம் என்று ஓதியிருந்தாலும் அருவமென்றே அருள வேண்டும். ஓதுதல்-சொல்லுதல். இதனல் எந்த குற்றமும் இல்லை.

ஏனெனின், பிரஹ்மத்தைப் பேசும் சுருதிகள் ஓசை யின்றியதென்றும், ஸ்பரிசமின்றியதென்றும், மற்றைய குணங்கள் இன்றியதென்றும் கூறுகின்றன. உருவம்

கற்பிதம். அருவம் வாஸ்தவம். இதனுல் எல்லா உபாதிகளும் இன்றிய சுத்த பிரஹ்மம் ஆகமங்களுக்கு. ஆகமம் — வேதம். உடன்பாடென்பது உறுதி. சூ. (11)

அவதாரிகை.

கூறிய பொருளை சீரிய முறைப்படியுறுதி படுத்துவதற்கு சூத்திரம் :-

4 3 3 1 3
## சூ. நபேதாதிதி சேந்நப்ரத்யேகம் அதத்வசனுத் 3—2—12

4 3
ந, பேதாத், இதி, சேத், ந, ப்ரத்யேகம், அதத், வசனுத், என்று பிரிக்கவும்.

ப. உ. எல்லா உபநிடத வாக்கிய மூலமாக நிர்க்குணபிரஹ்மம் தான் மொழிய பட்டிருக்கிறதென்பது
4 3
பொருத்தமன்று என்பதை, ந, விலக்குகிறது. பேதாத் = (இருபாதம் பிரஹ்ம) சதுஷ்பாத் பிரஹ்ம, நான்கு கால்களுடையது பிரஹ்மம் என்று நவிலப் பட்டிருக்கிறது. நவிலுதல் சொல்லுதல். இவ் வாக்கியங்கள் பேதத்தை யுரைக்கின்றது. இதி சேத் ந. = இவ்வாறு கூறுவாயாகில், அது பொருந்தாது. எதனுலோவெனின், ப்ரத்யேகம் = ஒவ்வொரு உபாதியையும், அதத்வசனுத் = பொய்யென்றுரைத்திருப்பதால்.

வி. உ. பிரஹ்மம் அருவம், உருவமன்று என்பது சரியல்ல. காரணம்? பேதவசனத்தால், என்ற ஏதுவால் ஒவ்வொரு உபநிஷத்துக்களிலும் ஒவ்வொரு வடிவத்தை ஆன்மாவுக்கு உரைக்கப் பெற்றிருக்கிறது. 'சதுஷ்பாத் பிரஹ்ம', நான்கு காலையுடையது ஆன்மா, ''ஷோட

சகலம் பிரஹ்ம'' பதினறு கலையுடையது ஆன்மா, வா
3
மனித்வாதி லக்ஷணம் பிரஹ்ம'' விரும்பத் தகுந்த வடிவம் ஆன்மாவென்றும், ''த்ரைலோக்ய சரீரம் பிரஹ்ம'' மூவுல கத்தை தனக்கு சரீரமாக உடையதென்றும், சாற்றப் பட்டிருக்கிறது. இவையனைத்தும் பேதத்தை மொழிகின் றன. இதனுல் அநேக வடிவம் ஆன்மா என்று புலனுகிறது. இவ்வாக்கியங்களை யேற்றுக் கொள்ளாது போனுல் இவை களைச் சொல்லும் சுருதிகள் பொருளற்றுப் போகும், இவ்வாறு மொழிவாயாகில் வாதி :-

அது முறையல்ல. ஒவ்வொரு வாக்கியத்திலும் அதத் வசனம் — தத்வசனம் — பேதவசனம் அதத்வசனம் — அது அல்லாத வசனம். வசனம் — சொல்லுதல். உபாதி கள் வேருயிருப்பினும், அதற்குள் இருக்கும் ஆன்மா
1
ஒன்றென்று உணர வேண்டும். சுருதி : யஸ்சாயம் அஸ்
2
யாம் பிருதிவ்யாம் தேஜோமயோ அமிர்தமய : புருஷோ
1
யஸ்சாயம் அத்யாத்மம் சாரீரஸ் தேஜோமயோ அமிர்த மய : புருஷோ அயமேவச யோஅயம் ஆத்மா. பி. உ. (2-5-1) என்பது மறை, அஸ்யாம் = புவியில், ய : = எந்த தேஜோமய அமிர்தமய : புருஷ : = ஒளிமயமாகவும், அழிவில் வடிவமாகவும். எங்கும் நிறைந்ததாகவும், உள்ள
1 4
ஆன்மா எதுவோ, யஸ்சாயம் அத்யாத்மம் = எது இந்த உடலுக்குள் ஒளி மயமாகவும், அழிவு இலதாகவும் உள்ள ஆன்மாவோ அவையிரண்டும் ஒன்றென்பது இம்மறை யின் பொருள். இந்த வாக்கியங்களில் காணப்படும். பேதம் உபாசனையின் நிமித்தம். முக்கியம் — அபேதம் இதை பகவானும் பகருகின்ருர்.

வித்யா[3] விநய சம்பந்நே பிராஹ்மணே[3] கவி ஹஸ் திநீ,[1] சுநி சைவஸ்வபாகே ச[1] பண்டிதா : சமதர்ஸிந:[3] ப. கீதை (5-18) (அருஜுன!) வித்யா விநய சம்பந்தே[3] பிராஹ் மணே = கல்வி, அறிவு, பணிவு, ஒழுக்க முதலிய குணங் களோடு கூடிய வேதியரிடத்திலும்,[3] கவி = பசுவிடத்தி லும், ஹஸ்தி = மதிப்புக்குரிய யானையிலும், சுநி = தாழ்ந்த நாயிடத்திலும், சுவபாகேச = நாய் மாம்சம் உண்பவனிடத்திலும்; ஸமம் = வேறுபாடு, கூறுபாடு, மாறுபாடு இல்லாமல் ஒருபடித்தான ஆன்மாவை, தரிசின:[3] = பார்ப்பவர், பண்டிதா; = ஞானிகள் என்று நாரணன் நவின்ருன். நாரணன் = நாராயணன். இந்த சுலோக மூலமாகவும் வேறு வேறு உபாதிகளில் இருக்கும் பிரஹ்மம் ஒன்றென்றும், அது அருவமென்றும் இனிது புலனுகின்றது. சூ. 12

*அவதாரிகை.*

பேத தரிசனத்தை நிந்தை செய்து அபேத தரிசனம் செய்ய வேண்டுமென்பதற்கு சூத்திரம்:-

## சூ. அபி[1]சைவ[1]மேகே 3—2—13

அபி,[1] ச, ஏவம், ஏகே என்று பிரிக்கவும்.

ப. உ. அபிச[1] ஏகே[1] = மற்ருெரு (சாகை — வேதத் தின் கிளையை உணர்ந்தவர்கள்) ஏவம் = மேலே சொன்ன மாதிரி கூறுகிருர்கள் என்றவாறு.

வி. உ. மற்ருெரு கிளையை யோதிவர்கள் — கடவல்லியை நன்கு கற்றவர்கள் என்பது கருத்து. அவர்கள் என்ன மொழிகிருர்கள்? பேத த3ரிசனம்=தன்னை பரமாத்மாவிற்கு வேருகப் பார்ப்பது. இங்ஙனம் பார்ப்பது நிந்தையென்கிருர்கள். கடவல்லியைக் கழறினவர் காலபகவான். அவர் — நன் மகன் நசிகேதனையழைத்து மைந்தனே!

மனசை வேத3ம் ஆப்தவ்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சன மிருத்யோ: ஸமிருத்யும் ஆப்நோதிய இஹ நாநேவ பஸ்யதி க-4-11 மனசா எவ இத3ம்=இந்த—நீ வினவிய ஆன்மாவை, மனசா மனதைக் கொண்டு. ஆப்தவ்யம்=அடைய வேண்டும். இஹ = இந்த ஆன்மாவில் கிஞ்சன = வேறு ஒரு பொருளும். ந = இல்லை. ய: = எவனெருவன். இஹ = தன்னந் தனியான ஆன்மாவில். நாநாஏவபஸ்யதி = பல பொருளாகப் பார்க்கிருனே. ச = அவன். மிருத்யோ = என்னிடத்திலிருந்து மிருத்யும் = என்னையே. ஆப்நோதி வந்தடைகிருன் என்பது கடவல்லியின் கருத்து. ஏவ — உறுதி.

இவ் வாக்கியம், ஆ ன் ம ா வி ல் அநாத்மாவைப் பார்ப்பதும், தன்னை ஆன்மாவிற்கு அந்நியமாகப் பார்ப்பதும், இழிவென்பதை யுணர்த்துகின்றது. மேலும், (ஏகே) சுவேதா சுவதர ரிஷி = 'போ4க்தா போ4க்3யம் ப்ரேரிதா்ரஞ்ச மத்வா, சர்வம் ப்ரோக்தம் திரிவித4ம் பிரஹ்4மமேதத்' என்பது (சுவே ...) உ. (1-12) சுருதி. போக்தா = போகங்களை யுண்பவன் போ4க்3யம் = உணவுப் பொருள்கள். ப்ரேரிதாரஞ்ச = பரமாத்மா இவர்கள் மூவரையும், மத்வா = ஒன்றென்று உணர்ந்து, சர்வம் = எல்லாவற்

4.
றையும், திரிவிதம் = மூன்ருக மொழிந்ததை ஏதத் பிரஹ்ம = அனைத்தும் பிரஹ்மமென்று. ப்ரோக்தம் = கூறப்பெற்ற தென்பது பிந்திய சுருதியின் பொருள். போக்தா — ஜீவன், போக்யம் ஜகத்து. ப்ரேரகன் — இயக்குபவன் — இறைவன் எனினும் அமையும். மாணவர்களே! இவண் மூன்ருக மொழிந்ததை முடிவில் ஒன்றென்று உணர்க என்ருர் சுவேதாசுவதரர். இதனுல் ஜீவன், ஜகத்து, ஜகதீசன் எல்லாம் பிரஹ்மமென்பது இனிது புலனும். சூ. 13

*அவதாரிகை.*

ஆனுல் உருவத்தையும் அருவத்தையும் உரைக்கும் சுருதிகள் இருக்க அருவ்த்தை மட்டும் ஏற்றுக் கொள்வது எங்ஙனம் பொருந்தும் என்பதற்கு சூத்திரம்:-

3 4
## சூ. அரூபவதேவஹி தத்பிரதானத்வாத் 3—2—14

4
அரூபவத், ஏவ, ஹி, தத், பிரதானத்வாத் என்று பிரிக்கவும்.

ப. உ. அரூபவத் = உருவ முதலியவையின்றிய பிரஹ்மத்தை மட்டும் கொள்ள வேண்டும். ஹி = 4
ஏதனுலோ வெனின்தத் பிரதானத்வாத் = மறைகளில் நிர்குண பிரஹ்மத்திற்கு முக்கியத்வம் மொழியப் பட்டிருக் கிறது. ஏவ = உறுதி.

வி. உ. உபநிடதங்களில் பிரஹ்மத்திற்கு இரு வடிவங்கள் கூறப்பட்டிருப்பினும், அருவத்தை மட்டும் கொள்ள வேண்டும். எற்றினுக்கோ வெனின்? தத்பர அதத்பர நியாயமென்பது ஒரு முறை. இம்முறையின்

கருத்து : சகுணம், நிற்குணம் இரண்டையும் ஆரணத்தில் சாற்றின போதிலும், சகுணத்தை விட்டு நிற்குணத்தை யேற்றுக்கொள்ளல் என்பது சகுணத்தைக் கூறும் வாக்கியம் அதத் வாக்கியம், நிற்குணத்தைக் கூறும் வாக்கியம் தத் வாக்கியம்.

அஸ்த்தூ[2]லம் அநணு அஹ்ரஸ்வம் அதீ[3]ர்க[4]ம்,

பிரு. உ. (3-8-8) என்ற படி. (பிரஹ்மம்) பருமை யின்றியதும், அனு இன்றியதும், நெடில் குறில் இன்றியது மாய் உள்ளது. ''அஸப்த[3]ம் அஸ்பர்ஸம் அரூபம் அவ்யயம்'' க. உ. (3-15) அசப்த[3]ம் = ஒலியின்றியது. அஸ்பர்ஸம் = ஊறின்றியது. அரூபம் = உருவம் இன்றியது. அவ்யயம் = கூடுதல் குறைதல் வ்யயம். அஃது இன்றியது அவ்யயம் வரவு சிலவு வ்யயம் அஃதின்றியது அவ்யயம் எனினும் ஒக்கும். இஃது கடவல்லியின் கருத்து. ''ஆகாசோவை நாம நாம ரூபயோர் நிர்வஹிதாதே யத்[3]ந்தரா தத்[3] பிரஹ்ம'' கா. உ. (8-14-1) என்பது ஆகமம் — மறை. ஆகாசோவை நாம = ஆன்மாவிற்கு ஆகாசமென்று ஒரு பெயர். நாம ரூபயோ: நிர்வஹிதா = நாம ரூப வடிவமான உலகத்தை நடத்துகின்றது. தே, யத[3]ந்தரா = தே நாமமும் உருவமும். எதற்குள் அடங்கியிருக்கின்றனவோ. தத்[3] பிரஹ்மம் = அது ஆன்மா என்பது ஆம் நாயப் பொருள் — ஆம் நாயம் — வேதம்.

இன்னும் ''தி[3]வ்யோ ஹி அமூர்த்த: புருஷ: ஸபா[3]ஹ்ய ஆப்[4]யந்தரோஹி அஜ:'' மு. உ. (2-1-12) புருஷ: = ஆன்மா தி[3]வ்ய: = அறிவு வடிவினன். அமூர்த்த: = உருவம் அற்ற

வன். ச = அந்த (ஆன்மா) பா3ஹ்ய ஆப்4யந்தர: = உள்ளும் புறம்பும் மருவியிருப்பவன். அஜ: = பிறப்பற்றவன் என்பது பெரும் மறையின் பொருள். மேலும்: ''ததே3தத்3 பிரஹ்ம அபூர்வம் அநபரம் அநந்தரம் அபா3ஹ்யம் அயமாத்மா பிரஹ்ம சர்வாநுபூ4:'' பிரு-உ. (2-5-19) தத் ஏதத் பிரஹ்ம = அவ்வாறான இந்த பிரஹ்மம். அபூர்வம் = காரணமின்றியது. அநபரம் = காரியமின்றியது. அநந்தரம் = வேறு பொருளின்றியது. அபா3ஹ்யம் = திருஸ்யமற்றது. அயமாத்மா = இந்த ஆன்மா பிரம சொரூபம். சர்வாநுபூ: எல்லா அநுபவமும் இதற்கு1ண்டு — என்ற வாக்கியங்கள் எல்லாம், பிரபஞ்சமின்றிய பிரஹ்மத்தை விளக்குகின்றன. அந்நியப் பொருளை யறிவிப்பதன்று.

இதைப் பற்றி 'தத்து சமன்வயாத்' என்னும் இடத்தில் நன்கு நவிலப் பட்டிருக்கிறது. எனவே இந்த வாக்கியங்களை யெண்ணிப் பார்க்கும் பொழுது நிற்குண பிரஹ்மத்தைக் கொள்ள வேண்டுமென்பது துணிபு. சாகாரத்தைக் கூறும் வாக்கியமெல்லாம் முக்கியமற்றவை. அவை அனைத்தும் உபாசனைகளை விதிக்கும் வாக்கியங்கள். அவைகளால் இங்கு விரோதமன்று. இஃதன்றியும் நிற்குணத்தை விதிக்கும் வாக்கியம் அதிக பலமுடையது. குறைந்த மதியுடையவனைப் பார்க்கிலும் மிகுந்த மதியுடையவன் அதிக பலமுள்ளவன் அல்லவா அது போலறிக. ஆகையால் இரண்டையும் கூறும் வாக்கியமிருக்க ஒன்றை மட்டும் எங்ஙனம் கூறுவது என்ற ஆக்ஷேபம் அகற்றப்பட்டது. சூ. 14,

*அவதாரிகை.*

அங்ஙனமாயின் வடிவத்தை மொழியும் சுருதிகளுக்கு என்ன கதியென்பதற்குப் பதில் சூத்திரம் :-

## ஸூ. ப்ரகாஶவச்ச அவையர்த்யம் 3—2—15

1 2
பிரகாசவத், ச, அவையர்த்யம் என்று பிரிக்கவும்.

ப. உ. பிரகாஸவத் = எங்ஙனம் சூரியன் ஆதி ஒளி உபாதியால் கோணலாகத் தெரிகிறதோ அது போல பிரஹ்மம் அருவமாயினும் உருவமாகக் காணப்படுகிறது. அவையர்த்யம் = ஆகையால் உருவத்தையுரைக்கும் ஆரணம் வீணன்று.

வி. உ. 'பிரகாசவத்' சூரியன், சந்திரன், மின்னல் முதலிய ஒளிகள் விண்ணைப் பற்றியிருக்கின்றன. விரல்கள், வளையப் பொருள்கள் இவைகள் வட்டமாகவும், நீளமாகவும் கோணலாகவும் இருக்கும். இந்த வடிவங்களுக்குத் தக்க வாறு ஒளியும் நீளமாகவும், வட்டமாகவும், கோணலாகவும் காணப்படும். அது போல ஆன்மாவும் நிலம், புலம், மாயை முதலிய உபாதி சம்பந்தத்தால் அந்தந்த வடிவமாகக் காணப்படுகிறது. அதனுல் ஆகாரத்தைக் கூறும் வாக்கியங் கள் பழுதன்று.

அவ்வாக்கியங்கள் அனைத்தும் உபாசனைக்காகப் பயன் படுகின்றன. அதனுல் வடிவத்தை அருளும் மறைகள் பயனற்றதாகா. இப்படி விசாரித்திட்டால் எல்லா வாக்கிய மும் இணைந்து போகும். வேதவாக்கியங்களில் சில பயனுள்ளது சில பயனற்றது என்பதிலை. ''ஆரணம் பொய் சொல்லாதே'' என்றபடி. இரு வகை வாக்கியங்களிலும் பிரமாணமிருக்கிறது.

இதனுல் (உபயலிங்கம்) அருவமும் உருவமும் அசத்தியமென்று நாங்கள் கூறவில்லே. பின்னே, உபாதி நிமித்தமாக வரும் பொருள்களுக்கு அதன் தருமமில்லே. ஏனெனின், உபாதிகள் அனேத்தும் அக்ஞானத்தால் வந்தவை. அக் ஞானம் இருக்கும் வரை ஆகாரம் இருக்கும். ஆகாரம் — வடிவம். அது ஒழிந்ததும் கற்பிதம் அழிந்து போகும். எனவே வடிவத்தை வரையும் மறைகள் வியர்த்தம் அன்றென்பது தெளிவு. சூ. 15.

அவதாரிகை.

உரைத்ததை யுரப்படுத்துவதற்காக அடுத்த சூத்திரம் :-

## ஸூ. ஆஹ[1] ச தன்மாத்ரம் 3—2—16

ஆஹ[1], ச, தன்மாத்திரமென்று பிரிக்கவும்.

ப. உ. தன்மாத்ரம் = அருவத்தை மட்டும், ஆஹ = கூறியிருக்கிறது. ச = இதனுல்.

வி. உ. 'ச' இன்னும் சுருதிகள், பிரஹ்மத்தை அருவமென்று அருள்கின்றன :- ச யதா[2] ஸைந்தவ[4] கநோ[4] அநந்தரோ அபாஹ்ய[3]; கிருத்ஸநோ ரசகநஏவ[4] ஏவம் வா அரே அயமாத்மா அநந்தரோ அபாஹ்ய[3]: கிருத்ஸந: பிரக்ஞான கனஏவ[4] பிரு. உ. (4-5-13) யதா[2] = எங்ஙனம் ஸைந்தவகன:[4] = உப்புக்கட்டி. அநந்தரோ அபாஹ்ய[3]: = (உள்ளும் புறம்பும் ஒருபடித்தாக,) அகம் புறமின்றி. ரசகநஏவ[4] = உப்பு ரசமாக இருக்கிறதோ, அது போல, (ச) = அயம் ஆத்மா = இந்த ஆன்மாவும் ஏவம் =

இம்மாதிரி. அரே = [4]பிரியபாரியே? அநந்தரோ [3]அபாஹ்ய: அகம் புறமின்றி கிருத்ஸந: = நிறைந்த பிரக்ஞான [4]கன: = ஞானவடிவம். ஏவ = உறுதி. என்று பகவான் யாக்ஞ்ய வல்க்யர் தனது மனையாளுக்குச் சாற்று கின்றார். இதனால் ஆத்மா [1]சைதன்யமாயும், வேறு வடிவ மின்றியதாயும், சேதனத்திற்கு வேறு இல்லையென்றும், ஞானமே இதற்கு நிரந்தர வடிவமென்றும் புலனும். உப்புக் கட்டி, உள்ளும் புறம்பும் உப்பு ரசம் அல்லாமல் வேறு ரசமல்ல. அது போல் ஆன்மாவையுமறிக என்பது பொருள். சூ. (16)

*அவதாரிகை*

இப்பொருளை மீண்டும் விளக்கும் பொருட்டு சூத்திரம்:-

## சூ [1]தர்ஸயதிச [2]அதோ அபி ஸ்மர்யதே 3—2—17

[3]தர்ஸயதி, [1]ச, [2]அதோ, அபி, ஸ்மர்யதே, யென்று பிரிக்கவும்.

ப. உ. [1]ச = மேலும், [3]தர்ஸயதி = அறிவிக்கிறது. [2]அதோ = அவ்வாறு. ஸ்மர்யதே = கீதையும் மொழிகின் றது.

வி. உ. சுருதிகள் சொல்லுகின்றன. என்ன சொல்லு கின்றன? பிரஹ்மத்திற்கு அருபத்தையன்றி உருவமில்லை யென்று கூறுகின்றன. எங்ஙனமெனின், "[2]அதாத [3]ஆதேசோ நேதி [2]நேதி" பிரு. உ. (2-3-6) அத = இதற்குப்

பிறகு அத: = (பிரஹ்மம்) மூர்த்தமுமன்று அமூர்த்தமும் அன்று. மூர்த்தம் — உருவம். அமூர்த்தம் — அருவம். ஆதே3ஸ: = உபதேசம். சொல்வது என்று பொருள். இன்னும், ''அந்யதே3வ த3த் விதி3தாத் அதோ2 அவிதி3தாத் அதி4'' (கே-உ.) (1-3) விதிதாத் = காரிய ரூப பிரபஞ்சத்தில் இருந்தும் அவிதி3தாத் = காரண ரூப மாயையிலிருந்தும், அந்யதே3வ = (பிரஹ்மம்) வேறு என்பது பொருள்.

மேலும், ''யதோவாசோ1 நிவர்த்தந்தே அப்ராப்ய மநசாசஹ'' தை-உ. (2-4-1) யதோ = எங்கிருந்து. மநசாசஹ மனதோடு கூட வாச: = வாக்கு = மொழிகள். நிவர்த்தந்தே = திரும்புகின்றனவோ என்பது சுருதிப் பொருள். இந்த வாக்கியமெல்லாம் அநாத்ம வடிவத்தை விலக்கி ஆன்ம சொரூபத்தை விளக்குகின்றன. எப்படி யெனில், அது நிர்விசேஷ வடிவம். அது — ஆன்மா. பா3ஷ்கலியென்பவன் ஒரு ரிஷிகுமாரன். அவன் பாத்வனி டம்-ஏ பா3த4வ! எனக்கு பிரஹ்ம உபதேசம் செய்வாயாக என்றான். அதற்கு அவன் 'அவச1னேநைவப்ரோவாச1' மௌனமாக உணர்த்தினான் என்றபடி. மௌன உபதேசம்:

அவன் வினவினான். இவர் சும்மா இருந்தார். அவன் இருமுறை மும்முறை, வினவினான். அவர் மெல்ல வாய் திறந்து சொல்லத்தானே செய்கிறேன் என்றார். அதை மொழியால் மொழிய இயலாதென்று கூறத்தானே செய் கிறேனென்றார். அதை — ஆன்மாவை. ஆன்மா உபசாந்த ரூபம். கரணங்கள் அனைத்தும் இறந்த நிலை. ''உபசாந்தோ அயமாத்மா'' என்கின்றது சங்கர பாஷ்யம்.

'ஸ்மர்யதே' இதைப் பற்றி பகவானும் பகருகின்ருர். ''ஞேயம் யத்தத் பிரவக்ஷ்யாமியஜ்ஞாத்வா அமிர்த மஸ்நுதே
3 3
அநாதி மத்பரம் பிரஹ்ம ந சத்தந்நாசதுச்யதே'' ப. கீ. (13-12) ஞேயம் யத்தத் = அறியவேண்டியது அனைத்தும். பிரவக்ஷ்யாமி = நன்ருகக் கூறுகிறேன். (உனக்கு) யத்ஞாத்வா = எதையறிந்த மாத்திரத்தில் அமிர்தமஸ்நுதே = மோட்சத்தையடைகிருர்களோ (அதை) (அது எது?) அநாதிமத் = அடியும் நடுவும் ஈறுமில்லது. பரம் பிரஹ்ம = மேலான ஆன்மா. நசத் நாசத் உச்யதே = காரிய ரூப உலகமுமில்லை. காரண ரூபமாயையும் இல்லையென்று நரனுக்கு நாரணன் நவின்றனன். நரன் = அருஜுனன். நாரணன் — இறைவன். மேலும்:-

மாயாஹி ஏஷா மயாசிருஷ்டா யன்மாம் பஸ்யசி
3 4 3
நாரத. சர்வபூத குணைர் யுக்தம் மைவம்மாம்ஞாது மர்ஹசி,. ஹே நாரத! ஏஷா = இம்மாயையையும் மாயாகாரியத்தையும். மயாசிருஷ்டா = நான் படைத்தேன். யன்மாம் பஸ்யசி = எந்த விசித்திரமான என்னைப் பார்க்கிருயோ. (அது) எனக்கு சொந்தமல்ல) (விலக்ஷணமான) சர்வபூத் குணைர்யுக்தம் மாம் = சகல குண வடிவமான என்னை. மைவம் ஞாது மர்ஹசி = உள்ள படியுணர உன்ஞல் இயலாது என்பது விமலன் கருத்து. விமலன் — இறைவன். இம் மொழிகளால் ஆன்மா அருள் ஞானவடிவமென்பது தெற்றெனத் தெளிவாம். சூ. 17.

*அவதாரிகை.*

உருவ முதலியவை உபாதியால் வந்தவை யென்பதற்கு சூத்திரம்:-

1 3
## சூ. அதஏவச உபமா ஸூர்யகாதிவத் 3—2—18

1 3
அத, ஏவ, ச, உபமா, சூர்யகாதி, வத் என்று பிரிக்கவும்.

3
ப. உ. அதஏவ = இதனுல் (இதற்கு) சூரியகாதிவத் = தண்ணீரில் காணப்படும் சூரிய பிம்பத்தோடு. உபமா = உவமானம் கொடுக்கப்படுகிறது.

வி. உ. 'அத ஏவ' ஆன்மாசைதன்ய உருவமானதாலும், எவ்வித விசேஷணங்கள் இன்றியதாயும், மன, மொழி, மெய்களுக்கு எட்டாததாயும், அந்ய பேதங்கள் அகற்றப் பட்டதாயும், அறிவு நூல்களில் அருளப் பெற்றிருக்கிற தென்பதையுணர்த்தும் பொருட்டு அத ஏவ என்ருர். எனவே இப் பிரஹ்மத்தில் காணப்படும் வேற்றுமைகள் அனைத்தும் உபாதியால் வந்தவையென்பதை உபநிடதங்கள் உரைக்கின்றன. அவை:-

2 3
''யதா ஹி அயம் ஜ்யோதிராத்மா விவஸ்வான்
4 3 4 3 4
அபோ பின்னு பஹுதைகோ அநுகச்சன். உபாதினு கிரி
4 3 3
யதே பேத ரூபோ தேவ: க்ஷேத்ரேஷு ஏவம் அஜோ அயமாத்மா'' பி. பி. உ. (12) என்று சுருதியில் கூறப்பட்டிருக்கிறது.

2
யதா = எவ்வாறு. அயம் = இந்த ஜோதி: வடிமான = விவஸ்வான் = சூரியன் (ஒன்ருக இருப்பினும்)
4
அபோபின்னு = வேறு வேறு நீர்க்குடங்களில் பலவாருகக் காணப்படுகிறது. இதற்கு என்ன காரணம்? குடத்தின் நீர்
3
தான் காரணம். அது போல தேவ: = அறிவு சொரூப ஆன்மா. க்ஷேத்ரேஷு = ஒவ்வொரு உடலிலும். அஜோ அயமாத்மா = ஆக்கமும் அழிவும் இன்றியதாயும், ஞானிகளுக்கு வெளிப்படையாயும் விளங்கும் இந்த ஆன்மா பலவாகப் பார்க்கப்படுகிறதென்பது மறையின் மலர்ந்த பொருள். ஹி = உறுதி.

4 4 4
மேலும் ''ஏகஏவஹி பூதாத்மா பூதே பூதே வ்யவஸ்த்
4 3 4 1 3 1
தித: ஏகதா பஹுதா சைவ த்ருஸ்யதே ஜலசந்த்ரவத்
பி. பி. உ. (12) ஏகஏவ = ஒரே (ஆத்மா) பூதாத்மா =
4 4 2
எல்லா வடிவமாதலால் பூதாத்மா. பூதே பூதே வியவஸ்த்தித:
= ஒவ்வொருவர் உள்ளத்திலும் உறைந்திருக்கும் ஆன்மா.
1
ஜலசந்த்ரவத் = தாலத்தில் இலங்கும் தனிப் பெரும் சந்தி
ரன், தண்ணீரில் பலவாகக் காணப்படுவது போல, தாலம்
4
— ஆகாசம் (ஆன்மா) ஏகதா = ஒன்றுக இருந்தும்
3 4 3
பஹுதா ச = நானுவாக. த்ருஸ்யதே = காணப்படுகிற
தென்பது சுருதிப்பொருள். இம்மறைகள் மூலமாகவும்
ஆன்மாவிற்கு அநேகத்வம் இயற்கையன்றென்று தெரிய
வருகிறது. சூ. 18

*அவதாரிகை.*

வாதி மொழிந்த திருஷ்டாந்தத்தை மறுப்பதற்கு
பிரதி வாதி சூத்திரம்:-

3 3 2
**ஸூ. அம்புவத் அக்ரஹணுத்து நததாத்வம் 3—2—19**

3 3 2
அம்பு, வத், அக்ரஹணுத் து, ந, ததாத்வம் என்று
பிரிக்கவும்.

3
ப. உ. அம்புவத் = ஜலத்தில் சூரிய பிம்பம் எவ்வாறு
தோற்றுகிறதோ, அது போல் ஆன்மா தோற்றுவதில்லை.
3
அக்ரஹணுத் = பிரதி பிம்பம் உண்டாவதில்லை. ஆகையால்
இந்த சூரிய திருஷ்டாந்தம் பொருந்தாது.

வி. உ. சூ2ரியன் உருவமுடையது. ஆன்மா அருவமுடையது. நததாத்வம் = பிரதிவாதி — ஆன்மாவிற்குக் கூறிய உவமானம் ஒவ்வாதென்று உரைக்கிருன். அதற்கு அவன் தரும் காரணம் — ஆதவன் உருவமுடையவன், அவனது பிரதி பிம்பம் நீரில் விழும், ஆனுல் ஆன்மாவோ உருவமுடையதல்ல. ஆகையால் அதனது பிரதி பிம்பம் உபாதியில் விழுமென்பது எங்ஙனம் பொருந்தும் என்பது அவனது கேள்வி.

மேலும் ஆதவன் குறிப்பிட்ட இடத்திலிருப்பவன், ஆன்மாவோ எங்கும் நிறைந்தது. கதிரவன் வேறு, கட ஜலம் வேறு. ஆனுல் மாயையும் ஆன்மாவும் அவ்வாறன்று. மாயை ஆன்மாவிற்கு வேறுமன்று தூரமுமன்று. எங்ஙனமென்பாயாகில், ஆன்மாவியாபகம், அநந்யமும் ஆம். எனவே மேலே மொழிந்த உவமானம் ஒவ்வாதென்பது பிரதிவாதியின் மதம். சூ. 19.

இனி அதற்கு உரிய சமாதானம் வருமாறு சித்தாந்தி :-

**சூ விருத்3தி4 ஹ்ராச பா4க்த்வம் அந்தர்பா4வாத் உப3ய சாமஞ்ஜஸ்யாதே3வம் 3—2—20**

விருத்3தி4, ஹ்ராச, பா4க்த்வம், அந்தர் பா4வாத், உப4ய, சாமஞ்ஜஸ்யாத், ஏவம் என்று பிரிக்கவும்.

ப. உ. விருத்தி4 — நீரில் (தோன்றும் சூரிய பிரதி பிம்பம்) நீர் பெருகும் போது பிரதி பிம்பமும் பெரிதாகிறது. ஹ்ராச பா4க்த்வம் = நீர் குறையும் போது பிரதி பிம்பமும்

சிறியதாகிறது. ஏவம் = இம்மாதிரி, அருவமான பிரஹ்ம மும் உபாதியினுள்ளே தோற்றுவதால் சிறிதாகவும், பெரி
4
தாகவும் காணப்படுகிறது. உபய சாமஞ்ஜஸ்யாத் = உவமான உவமேயங்களில் சாமஞ்ஜஸ்யம் = பொருத்தமேயாம்.

வி. உ. பிரதிவாதி மறுத்ததை சித்தாந்தி — மேலே சொன்னது பொருத்தந்தான் என்று புகலுகின்ருர். என்ன காரணமென்பாயாகில் (விவக்ஷித அம்ச சம்பவாத்) சங்... பாஷ்யம், உவமான உவமேயத்திற்கு எவ்வளவு நியாயம் வேண்டுமோ அவ்வளவு அங்கு காணப்படுகிறது. உவமான உவமேயங்களில் ஒருவாறுதான் உரைக்க இயலும். முழுக்க மொழிய யாராலும் முடியாது. உவமான உவமேயங்களில் உள்ள முறைகள் முழுதும் இருக்குமானுல் அதை உவமான மென்று எவ்வாறு சொல்ல முடியும், முடியாதென்பது கருத்து. ஒருவாறு சொல்லத் துணிந்தால் திருஷ்டாந்தம் நொறுங்கிப் போகும்.

இந்த ஜலசூரிய உவமானம் நம்மால் மொழியப் பட்டதல்ல. பின்னே? நூல்களால் நுவலப்பட்டிருக்கிறது. நூல் — உபநிடதங்கள். நுவல்வது — மொழிவது. நூலே மறுத்தவன் தன் காலே அறுத்தவன் எனப்படுவான். உவமானம் உவமேயம் பொருந்துமா பொருந்தாதாவென்று சிந்திப்பதால் யாது பயனுமில. இந்த உவமான மூலமாக நாமறிய வேண்டுவது மாயையால் நிற்குண பிரஹ்மம் சகுணமாகத் தோற்றுகிறதென்று அறிய வேண்டுமென்பது பொருள்.

இவன் விரும்பிய சமான ரூபமென்னே? விருத்தி ஹ்ராசம். பெரியது சிறியது என்பது தண்ணீரில் காணப் படும் பிரதி பிம்பம் தண்ணீர் பெருகும் போது அது பெரி தாகவும் தண்ணீர் குறையும் போது அது சிறிதாகவும்

தெரிகிறது. அது — பிரதி பிம்பம். தண்ணீர் அசைகிற பொழுது அதுவும் அசைகிறது, அது வேறுபடுகிற போது அதுவும் வேறுபடுகிறது. அது என்பதில் முன்னது நீரையும் பின்னது பிரதி பிம்பத்தையும் உணர்த்தி நிற்கும்.

இதுதான் இங்கு ஜல சூரிய உவமான உவமேயங்களால் தெரிய வேண்டிய' விஷயம். உண்மையாக சூரியன் தண்ணீரில் இல்லவேயில்லை. இம்மாதிரி உள்ள படியாக விகாரமின்றியதும், ஏ க ரூ ப ம ா யு ம், அருவமாயுமுள்ள பிரஹ்மம் உடல் முதலிய உபாதிகளுக்குள் தோற்றுவதால் அந்தந்த உபாதி தருமங்கள் பெருகுகிறபோது இது பெருத்த தாகவும், சிறிதாகிற போது சிறுத்ததாகவும் காணப்படுகிறது. எனவே உவமான உவமேயங்கள் பொருத்தமுடையதேயாம். சமஞ்ஜஸம் = பொருத்தமுடையது. ஆகையால் கூறிய உவமானத்தில் குற்றமொன்றுமில்லை. சூ. 20

அவதாரிகை.

ஆன்மா தேகாதிகளுக்குள் பிரதிபிம்ப ரூபமாக நுழைந்திருக்கிறதென்பதற்கு சூத்திரம் :-

## சூ. தர்ஸநாச்ச[3] [1] 3—2—21

ப. உ. (ஆன்மா) பிரதி பிம்ப வடிவமாக சரீர ஆதிகளில் நுழைந்திருக்கிறது. தர்ஸநாத்[3] = மறை மொழிகளால் தெரிய வருகிறது. ச[1] — உறுதி. ஆகையால் ஒரு உபாதியும் இன்றியது பிரஹ்மம் என்பது தெளிவு.

வி. உ. எல்லா உபாதிகளிலும் நுண்ணிய ஆன்மா திண்ணமாய் நுழைந்திருக்கிறதென்று சுருதிகள் கூறுகின்றன; அவை:-

1 3 3 1 1 3
''புரஸ்சக்ரே த்வி பத: புரஸ்சக்ரே சதுஷ்பத: புர: ஸ
4
பக்ஷீ பூத்வர புர: புருஷ ஆவிஸத்'' பிரு-உ. (2-5-18) புரஸ்
3
சக்ரே த்விபத: = (இருகால்வடிவ மனித உடலைப்
3
படைத்தது. புரஸ்சக்ரே சதுஷ்பத: = நான்கு கால் உள்ள உடலை இயற்றியது. இயற்றுதல் — செய்தல். புர: ச
3
பக்ஷீபூத்வா = முன்னே அந்த ஆன்மா லிங்க சரீரியாக இருந்து புர: புருஷ ஆவிஸத் = உடலில் நுழைந்தது என்பது ஆகமத்தின் திரண்ட பொருள். மேலும், ''அநேந ஜீவேந ஆத்மநா அநுபிரவிஸ்ய" சா.உ. (6-3-2) இறைவன் ஜீவ வடிவமாகக்காயத்துக்குள் நுழைந்திருக்கிறன் என்றபடி. சூரிய உவமானம் சாலப் பொருத்தம். எனவே உபய லிங்கம் பிரஹ்மத்திற்குப் பொருத்தமற்றதென்றும், நிர் விசேஷ பிரஹ்மம் என்பது சித்தம்.

இவண் சிலர் சில தருக்கத்தைச் செய்கின்றனர். இவண் — இங்கு. அவர்கள் இங்கு இரு அதிகரணத்தை மொழிகின்றனர் — முதலாவது எல்லாவுலகமும் இன்றிய ஒரு வடிவம் பிரஹ்மமா அல்லது உலகத்தைப் போல பல வடிவம் பிரஹ்மமா? சத்ரூபமா அல்லது ஞான வடிவமா? அல்லது இரண்டுமா? வாதி :- இங்கு வேறு பிரகரணத்தைக் கொண்டு வருவதால் ஒரு பயனுமில. ஏனெனின், அநர்த்தம்
2
வந்து பொருந்தும். இதைப்பற்றி 'ந ஸ்த்தாநதோ' என்னும் சூத்திரமூலமாக நிராகரணம் செய்யப்பட்டது. நிராகரணம் — விலக்குதல்.

பிரஹ்மத்திற்கு என்ன என்ன வடிவம் என்றதற்கு — பிரகாச வத்து என்று பதில் கூறப்பட்டது. பிரஹ்மம் சத்ரூபம் ஞானரூபமில்லையென்று சொல்லவில்லை. அங்ஙனம்
4
கூறினல் 'பிரக்ஞானகனஏவ' என்னும் வாக்கியம் பொய்த்து

போகும். அதற்காக ஞானவடிவம் பிரஹ்மம், சத்ரூபமல்ல வென்று மொழிய இயலாது. அவ்வாருயின் ''அஸ்தித்யேவ உபலப்[34]தவ்ய:'' என்னும் மறை பொய்த்துப் போகும். எந்த வஸ்துவிற்கு இருப்பு இல்லேயோ அதற்கு ஞானம் எப்படி யுண்டாகும், உண்டாகமாட்டாதென்பது கருத்து,

இங்கு சத்தும்,, சித்தும் இரண்டும் பிரஹ்மத்திற்கு வடிவமென்று உரைக்கக் கூடாது. பின்னே? இரண்டும் ஒன்றென்று உணர வேண்டும். எது சத்தோ அதுதான் சித்து. எது சித்தோ அதுவே சத்து. இதை 'பிரகாச வச்ச' என்ற சூத்திரமும் வலியுறுத்துகிறது. தீபம் வேறு, தீப ஒளி வேறு என்பதல்ல. தீபந்தான் ஒளி. ஒளிதான் தீபம்.

உருவத்தை உணர்த்தும் மறைகளுக்கு, பிரபஞ்சத் தையொடுக்கி அரூவ பிரஹ்மத்தில் தான் பயன். வேறு பயனன்று. பயன் — பிரயோஜனம். இருள் பொருளை மறைக்கும், ஒளி அதை விளக்கும். அது போல கருமம் ஆன்மாவை மறைக்கும், ஞானம் அதை விளக்கும். எத்கு எத்தொழிலோ அது அதைச் செய்யும் என்பது நியாயம். தண்ணீர் குளிரும், தணல் கொதிக்கும். பரவித்தையைப் பற்றிப் பேசும் பொழுது ''யுக்தாஹி அஸ்ய'' சரீரமென்னும் தேரில் பத்து அல்லது நூறு குதிரைகள் பூட்டப்பட்டிருக் கின்றன. இந்த குதிரையும் ஆன்மாதான். இதுதான் பத்து, நூறு, ஆயிரமாக ஆகிறது. ''ஹரயோ அயம்வைதஸச[1] ஸஹஸ்ரா[3]ணி பஹூ[1]னி சாந[1]ந்தாநிச,, பிரு.உ. (2-5-19) அயம் — ஆத்மா தஸ[3]ச[1] = பத்து. ஆயிரம், இன்னும் பல வென்று அம்மறையருளுகின்றது. இதனுல் தோன்றிய உலகம் ஒடுக்கப் படுகிறதென்பது தெரிகிறது.

உபாசனேயின் நிமித்தம் உருவம் உரைக்கப் படுகிறது. அவை:- ''மநோமய: பிராண சரீரோ பாரூ[4]ப:'' சா.உ.

(3-14-2) என்பதால் தெரிகிறது. பிரபஞ்சம் பிரஹ்ம சுபாவம், பிரஹ்மம் பிரபஞ்ச சுபாவமன்று. சகுண சுருதியும் நிற்குண சுருதியும் ஓரிடத்தில் வருமானால், சகுண சுருதி மெலிந்தது, நிற்குண சுருதி வலிந்தது. கருமேந்திரியமும் ஞானேந் திரியமும் போல. காரிய ஒடுக்கத்தால், காரணமும் ஒடுங்குந்தானே யென்பாயாகில், அது முறையன்று. காரிய வடிவ உலகம் ஒடுங்கிக் காரண வடிவ ஆன்மாவாகி விடும், காரணரூப ஆன்மா எதில் ஒடுங்கும்? எதுவாகும்? அதற்கு அந்நியம் ஒன்றுமில்லாததால் ஒடுங்கவோ, வேறொன்றாகவோ நியாயமில்லை.

குடம் இலயமானதால் மண்ணும் இலயம் ஆக வேண்டுமென்பது என்ன கேள்வி. காரியத்திற்கு வடிவம் காரணம், காரணத்திற்கு வடிவம் காரியமன்று. இதனால் வடிவத்தை வரையும் மறை நல்லதென்றால், அருவத்தை அறையும் ஆரணம் மிக நல்லது என்பது இனிது புலனும். வரைவது — கூறுவது. அறைவது — உரைப்பது. எனவே யெப்போதும் ஆன்மா அருவமென்பது உறுதி. சூ. 21.

## 16) பிரகிருத ஏதாவத்வாதிகரணம் (22-30)

### *அவதாரிகை.*

"த்வேவாவ[3] பிரஹ்மணோ ரூபே மூர்த்தஞ்சைவ[1] அமூர்த்தஞ்ச" பி.உ. (2-3-1) துவேவாவ[3] பிரஹ்மணோ ரூபே = பிரஹ்மத்திற்கு இருவடிவம். மூர்த்தஞ்ச அமூர்த்தஞ்ச = அருவமும், உருவமுமாம், என்று துவக்கி, ஐந்து பூதங்களை யிருகூறாக்கி, அதில் முதற் கூறில் உள்ள நிலம், நீர், நெருப்பு மூன்றையும் மூர்த்தமென்றும், இரண்டாவது கூறிலுள்ள காற்றையும், ஆகாசத்தையும் அமூர்த்தம் என்றும்

அச்சுருதியருளியது. அந்தத்தில் ‘‘அதாத[2] ஆதேசோ[3]’’ என்று மொழிந்தது. இதன் பிறகு ‘நேதி நேதி’ என்று மொழிந்தது. இது பிரஹ்ம உபதேசம். இந்த உபதேசத்திற்கு மேலான உபதேசமேயில்லே. இந்நேதி நேதியென்னும் சொல் ஆத்மாவில் காணப்படும் உருவமுதலிய அநாத்ம பொருள்களே விலக்குகிறதா, அல்லது வேறு எதையும் விலக்குகிறதா என்ற கேள்விக்கு ஆட்சேபஞ் செய்து சமாதானத்திற்கு சூத்திரம் :-

## ஸூ. ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி[4] ததோ[3] ப்ரவீதி ச[1] பூய[4]: 3—2—22

பிரகிருதா, ஏதாவத்வம், ஹி, பிரதிஷேததி தத[4]: பிரவீதி[3], ச[1], பூய[4]: என்று பிரிக்கவும்.

ப.உ. ஹி = ஏனெனின்? பிரகிருதா ஏதாவத்வம் = பிரகரணத்தில் சொல்லப்பட்ட பிரஹ்மத்திற்கு அளவு கூறிய மூர்த்தத்தையும், அமூர்த்தத்தையும், பிரதிஷேததி[4] = விலக்குகின்றது. எந்த வாக்கியம்? ‘நேதி நேதி’ என்னும் வாக்கியம். ச[1] = மேலும். தத: = வாக்கியத்திற்குப் பின்னே பூய[4]: = மீண்டும். பிரவீதி[3] = அந்யத் பரமஸ்தி’ இம்மாதிரி கூறுகிறது. ஆகலின் சூன்ய வாதம் பொருந்தாது.

வி.உ. நேதியென்னும் வாக்கியத்திலுள்ள இதி சப்தம் ஆன்மாவிற்கு வேருன எதையும் விலக்கும் வலிமையுடையது. பிரதிவாதி - இதி சப்தம் எல்லாவற்றையும் விலக்குந் தன்மையால் பிரஹ்மத்தையும் விலக்கத்தானே செய்யும்

என்பது அவன் மதி. அவன் கேள்வி — இங்கு மூர்த்தம், அமூர்த்தம் இரண்டையும் விலக்குகிறதா, அல்லது அந்த வுருவத்தையுடையதையும் விலக்குகிறதா என்பது அவனது கேள்வி. ஒன்றை மட்டும் விலக்குகிறது என்ருல் இரு உரு வத்தையும் விலக்குகிறதா அல்லது பிரஹ்மத்தையும் விலக்குகிறதா. உனக்கு எப்படித் தெரிகிறது? பிரதி வாதி — பொதுவாக விலக்குவதால் இரண்டையுமே வில்க்குகிறதென்பது எனது கருத்து. ஆந்தை யிருகண்களை யும் மூடிக் கொண்டு பகலிலும் இருள்வடிவமாகத் தான் இருக்கிறதென்பது என் கருத்து என்ருல் யாரும் ஒப்புக் கொள்வார்களா? அங்ஙனம் ஒப்புக் கொண்டால் நாமும் ஆந்தையா? இல்லை. நாம் ஆறறிவு படைத்த மனிதர்கள். ஆகையால் எதையும் ஆராய்ந்து அறிய வேண்டும்.

பிரதிவாதி — இரண்டையும் விலக்குகின்றது. எங்ஙனம் என்பாயாகில், 'துவிவார பிரயோக தர்ஸனுத்' சங்... பாஷ்யம். நேதி சப்தத்தை இருமுறை மொழிந்திருப்பதால். 'நேதி நேதி' என்றபடி. ஆன்மா, மனம், மொழி, காயம் என்னும் இம்மூன்றையும் கடந்து நிற்பதால் இல்லையென்று கூறுவதால் என்னைக் குற்றம். இதற்கு மாருக உருவ முதலிய உலகங்களனைத்தும் பிரத்யக்ஷ முதலிய அளவை களுக்கு எட்டுவதால் அதை யில்லையென மறுக்க இயலாது, அளவை - பிரமாணம்.

வாதி — அங்ஙனம் ஆயின், சூந்யவாதம் தான் மிஞ்சும். அதனுல் இரண்டையும் விலக்கும் என்பது பொருந் தாது. மேலும், பொய்ப் பொருளை விலக்க வேண்டுமானுல் மெய்ப் பொருளைப் பற்றித்தான் விலக்க வேண்டும். கற்பித பாம்பை அகற்ற வேண்டுமானுல் உண்மையான கயிற்றைப் பற்றித்தான் அகற்ற வேண்டும். அது போல இரண்டை யும் நிஷேதம் செய்த பிறகு மிஞ்சியென்ன இருக்கும் ஒன்றும் இராதுதானே.

இஃதன்றியும் பிரஹ்மத்தை விலக்குவது[3] பைத்தியக் காரத்தனமாகும். ஏனெனின், ''பிரஹ்மதே பிருவாணி'' என்றது மறை. உனக்கு பிரஹ்மத்தைப் பற்றி மொழி கிறேன் என்ற வாக்கியம் முரணும்[4]. இன்னும் சுருதி[3]. ''அஸந்நேவஸ பவதி அஸத் பிரஹ்மேதி வேத சேத்'' தை.உ (2-6-1) எந்த மனிதன், ஆன்மா இல்லையென்று எண்ணு வானே அவன் தானுக அழிந்து விடுகிருனென்பது தைத் திரீய சுருதியின் பொருள். பிரஹ்மத்தைப் புறக்கணிக்கிற போது எல்லாக் கேடுகளும் வந்து இவனைச் சேரும். இஃது[34] மட்டுமல்ல, ''அஸ்தீத்யேவ உபலப்தவ்ய:'' இருக்கிற தென்று தான் இதையடைய வேண்டும் என்பது கட வல்லியின் கருத்து. இதற்கெல்லாம் என்ன பதில் உரைப் பது, எவனும் ஈன்ருளைக் கொலை புரியான், அங்ஙனமிருப்ப, அறிவுள்ளவன் அன்னையைக் கொலை செய்தால் அவனை அவனி பொறுக்குமா? அவனி — உலகம். சுருதி யன்னை அல்லவா, அவள் அருளிய மொழிகளை மறுப்பது அவளைக் கொல்வது தானே. ஈன்ருளுக்கு நாம் செய்யும் இனிய உதவி யிதுதானு?

நிற்க, மன மொழி மெய்களுக்கு ஆன்மா எட்டா தென்று சொன்னது அதையில்லை யென்பதற்காக இல்லை. ''பிரஹ்ம விதாப் நோதி பரம், என்றும், சத்யம் ஞாநம் அநந்தம் பிரஹ்மமென்றும், இயம்பிய மறைகள் என்னவா கும். இவ்வாக்கியங்கள் அனைத்தும் பிரஹ்மத்தை யெவ் விதத்திலும் அறிந்து அடைய வேண்டும் என்று மொழிந்து அந்த பிரஹ்மத்தையில்லை யென்று மொழியுமானுல் இது எள்ளள வேனும் பொருந்துமாவென்று ஊகித்து உணர வேண்டும்:

இல்லையென்று சொல்ல வேண்டுமானுல் இருக்கிறது என்று கூறுவானேன்? வதியை அள்ளி வயிற்றிலே பூசி

பிறகு தண்ணீரை விட்டு கழுகுவதோடொக்கும். வதி — சகதி. பிரக்ஷாளநாத் பங்கஸ்ய தூராத் அஸ்பர்ஸனம் வரம் என்பது ஒரு நியாயம். சகதியில் காலை விட்டு, நீரில் காலைக் கழுவுவதைப் பார்க்கிலும் தூரத்திற் சென்று அதைத் தொடாதிருப்பது மிக நலம் என்பது அதன் பொருள்.

1

'யதோ வாசோ நிவர்த்தந்தே'' மன மொழி மெய் களுக்கு எட்டாதென்றது அறிவைக் கொண்டு அடைய வேண்டுமென்பது பொருள். இல்லையென்று அர்த்தமில்லை. ''அறிவாலறிந்துன் இருதாளிறைஞ்சும் அடியாரிடைஞ்சல் களைவோனே'' என்றது திருப்புகழ். அருணகிரி — முருகா! அடியார் = உனது தொண்டர்கள் (உன்னை) அறிவால் அறிந்து தத்வ ஞானத்தால் உணர்ந்து. உன்னிரு தாள் இறைஞ்சும் = உன்னுடைய. இணையில் திருவடியை, மன மொழி மெய்களால் வழிபடும். அவர்கள் இடைஞ்சலை— இறப்பையும் பிறப்பையும், களைவோனே = எளிதில் பிடுங்கி யெறியும் எமது தலைவா! என்றபடி. அறிவை முன்னே வைத்து, அன்பை பின்னே வைத்து, அருணகிரி பாடி யதால் அறிவு சிறந்ததென்பது அறியலாகும். ஆன்மா அறிவிற்கு விஷயமென்பதை இவர் பால் உணரலாம்.

இதை மனதில் வைத்து முக்கரணங்களுக்கும் எட்டாது என்றது சுருதி. இதனால் நித்ய சுத்த புத்த முக்தம் பிரஹ்மம் என்பது தெளிவு. 'பிரகிருதா ஏதாவத்வம்' பிரஹ்மத்தில் பரிச் சின்னமாகக் கூறப்பெற்ற இரண்டு வடிவம். மூர்த்தம் அமூர்த்தம், இவையிரண்டையும் 'நேதி நேதி' என்னும் வாக்கியம் விலக்குகிறது. மூர்த்தத்திற்கும், அமூர்த் தத்திற்கும், சாரமான ஆன்மா பொறிகளுக்குப் புலனுவ தில்லை. பொய்யைப் போக்குவது தான் மெய்யை அறிவதற் குரிய ஞானம். பொய் — பிரபஞ்சம். மெய்—ஆன்மா. இரு நேதி சப்தத்திற்கு இரண்டு விதமாகப் பொருள் கொள்ளி

னும் அமையும். ஒரு நேதி, ஐம் பூதத்தையும் அதன் காரிய ரூப உலகத்தையும் அகற்றுகிறது, மற்றொரு நேதி அதற்குக் காரணமான அவித்தையைப் போக்குகிறதென்பது சாலப் பொருத்தம்.

இவ்வாறு பொருள் கொள்ளாது ஆன்மா அநான்மா வாகிய இரண்டையும் நீக்கிவிட்டதெனின், முடிவில் ''சத்யஸ்ய சத்யமிதி பிராணுவை சத்யம் தேஷாமேஷ சத்யம்'' என்று பி.உ. (2-1-20) வேதம் உரைக்கிறது. சத்யஸ்ய சத்யம் இதி = உண்மை பொருள்களுக்கெல்லாம் ஆன்மா உண்மைப் பொருள். பிராணுவை சத்யம் = பிராணுதிகளும் உண்மை. தேஷாம் ஏஷ சத்யம் = இவையனைத்தினும் ஆன்மா வொன்றே பரம சத்யம். எனவே ஆன்மாவிற்கு நீக்கமில்லை யென்பது இனிது புலனும். சூ. 22.

*அவதாரிகை.*

பிரபஞ்சப் பொருளை நீக்கி விட்டு பிரஹ்ம பொருளை விளக்கியிருக்கிறதே அந்த பிரஹ்மம் ஏன் தெரிகிறதில்லை யென்னும் வினவிற்குப் பதில் சூத்திரம் :-

## சூ[3] ததவ்யக்தம் ஆஹஹி 3—2—23

தத், அவ்யக்தம், ஆஹ, ஹி என்று பிரிக்கவும்.

ப.உ. தத் = ஆன்மா. அவ்யக்தம் = வெளிப்படுகிற தில்லை. (ஏனெனின்) ஆஹ = அருளியிருக்கிறது. ஹி = உறுதி.

வி.உ. பிரஹ்மம். பிரஹ்மமென்றாலும் ஆன்மாவென்றாலும்[1] ஒன்றேதான். தாயும் அன்னையும் போல' 'ஆத்மாச பிரஹ்ம' என்றபடி சங்., பாஷ்யம். தத்பதத்தால் ஆன்மாவை யெடுத்து கொள்ள வேண்டும்.

'ஆன்மா அவ்யக்தம்' வியக்தம் இவ்வுலகம். அவ்யக்தம் பிரஹ்மம். உலகம் ஏன் வியக்தம்? உலகில் உள்ள பொருள் முழுதும் ஒன்றை யொன்று அறிகிறது. ஆன்மா அனைத்தையும் அறிகிறது. அதனால் அது சாட்சி. மேலும், ஐம்புலன்களும் அகிலத்திலிருக்கின்றன, அகிலம் உலகம். ஆன்மாவில் அவைகளில் ஒன்றுமில்லை. நிலத்தில்: கந்த குணம் இல்லையென்றால் நிலந் தோற்றாது. அம்மாதிரி எல்லாப் பொருள்களிலும். அதற்கு உரிய குணங்களுண்டு. ஆகையால் எல்லாம் வியக்தம் — வெளி. ஆன்மாவில் அக் குணங்களில் ஒன்றுமில்லை. எனவே ஆன்மா அவ்யக்தம். தெரிகிறதில்லை. அகிலத்தையும் அறியும் ஆன்மாவை ஆரறிவார்? ஒருவருமறிந்திலர். அதனால் அது அவ்யக்தம். வெளிப்படாதது.

1 3 1
'ஆஹ ஹி' ''நசக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா
3
நாந்யைர் தேவைஸ்தபஸா கர்மணுவா'' மு.உ. (3-1-8) நசக்ஷுஷா க்ருஹ்யதே = ஆன்மாவைக் கண்ணைக் கொண்டு
1
காண இயலாது. நாபிவாசா = (அதை) வாக்கைக்
3
கொண்டும் சொல்ல முடியாது. நஅந்யை: தேவை: =ஏனைய பொறிகளாலும் அறிய மாட்டாது. தபசா கர்மணு வா = தபசைக் கொண்டும், தளர்ந்த வினையைக் கொண்டும் நாட முடியாதென்பது கருத்து. இன்னும், ''ச ஏஷ நேதி நேதி
3 3
இதி ஆத்மா அக்ருஹ்யோ நஹி க்ருஹ்யதே'' பி.உ. (3-9-26) ஸ — ஏஷ = அந்த ஆன்மாவை. நேதி நேதி = இஃது அன்று இஃது அன்றென்று சொல்லி (மதுகாண்டத்தில்) உணர்த்தப் பட்டிருக்கிறது.

அந்த ஆன்மாவை நெல்லு, புல்லு, சட்டி, பெட்டி, நகை, நட்டு, ஆடை, அணிகலம் போல

அடைய முடியாது. இவையெல்லாம் காட்சிப் பொருள். ஆன்மா சாட்சிப் பொருள். அது திருஷ்யமற்றது. உருவப் பொருளைக் கையைக் கொண்டுப் பிடிக்கலாம், ஆன்மா அருவ மாயிருப்பதால் பிடிக்க இயலாது. இதை யாதவக் குமாரன் இனிய குந்திக் குமாரனுக்கு — அவ்யக்தோ அயம் அசி[1]ந்த்[3]யோ அயம் அவிகா[1]ர்யோ அயம் உச்[1]யதே" ப. கீதை. (2-15) (மைத்துனு!) அயம்=இந்த ஆன்மா. அவ்யக்த: = வெளிப் படுகிறதில்லை. அசி[1]ந்த்[3]யம் = எண்ணத்திற்கு எட்டா தது. அவிகா[1]ரி = மாறுதலின்றியது- உச்[1]யதே = (என்று) உரைக்கப்படுகிறது என்றுர். மறைகளால் என்று வருவிக்க வேண்டுமென்பது கருத்து. இதனுல் ஆன்மா அவ்யக்த மென்பது புலனும். சூ. 23.

அவதாரிகை.

பிரஹ்மம் எஞ்சி நிற்கிறதென்பதற்கு சூத்திரம் :-

**சூ. அபி[1]ச ஸம்ராத[4]னே ப்ரத்யக்ஷ அநுமாநாப்[4]யாம்**

அபி, ச, சம்ராத[4]னே, பிரத்யக்ஷ. அநுமானுப்[4]யாம் என்று பிரிக்கவும்-

ப.உ. அபிச = யோகிகள் அந்த அவ்யக்த ஆன்மா வை. சம்ராதனே = தியானம் பண்ணும் பொழுது- பார்க் கிருர்கள். பிரத்யக்ஷ அநுமாஞப்யாம் = சுருதி, ஸ்மிருதி நூல்களால் தெரிய வருகிறது.

வி.உ. நிகில உலகமும் நீங்கிய பிரஹ்மத்தை யோகிகள் பார்க்கின்றனர். எப்பொழுது பார்க்கின்றனர் என்பாயாகில், 'சம்ராத[4]னே' பக்தி, தியானம், பிரணிதானம்

இவைகளை முறையாகச் செய்து வருவது அநுஷ்டானம் எனப் படும். கள்ளமில்லாத மனத்தினுல் உள்ளன்போடு உருகி இறைவனை நினைப்பது பக்தியென்பர். நாம ரூபத்தை மறந்து சச்சிதானந்தத்தில் விருத்தியை விழப்பண்ணுவது தியான மெனப்படும். வேரற்ற மரம் போல் விழுந்து கிடத்தல் பிரணிதானமெனப்படும். இந்த காலம் சம்ராதன காலம். யோகிகள் யோக வேளையில் ஆன்மாவைப் பார்க்கிருர்கள்.

4
எப்படித் தெரிகிறதெனின், பிரத்யக்ஷ அநுமாஞப்யாம் சுருதிக்கு பிரத்யக்ஷமென்றும், ஸ்மிருதிக்கு அநுமானம் என்றும் பெயர். இவையிரண்டு மூலமாக அறியப் படுகிறது.
2 4
அவை :- ''பராஞ்சி கானி வ்யத்திருணத் ஸ்வயம்பூஸ்
4
தஸ்மாத் பராங்பஸ்யதி நாந்தராத்மன். கஸ்சித்தீர:
3
பிரத்யாகாத் மானம் ஐக்ஷத் ஆவிருத்த சக்ஷுः: அமிருதத்வ
4
மிச்சன்.'' ஸ்வயம்பூ: = பரமேசுவரன். காநி = இத்திரியங் களை, பராஞ்சி = வெளிமுகமாக. வ்யதிருணத் = படைத்தார். தஸ்மாத் = ஆகையால். பராங்பஸ்யதி = நாம ரூபத்தை நாடுகின்றனர். ந அந்தராத்மன் = சச்சிதானந்தத்தை நாடுகிறதில்லை. எவனொருவன் முக்தியை அடைய விரும்பி பொறி புலன்களையடக்குகிருனே அவன் கச்சித்தீர: = அவன் வீரன் எனப்படுவன். ஆவிருத்தசட்சு: ஞானி. அமிருதத்வமிச்சன் = மோட்சத்தையடைய விருப்பமுடை
3
யவனுய். பிரத்யகாத்மானம் = அந்தராத்மாவை. ஐட்சத் =
3
பார்க்கிருன் என்பதுகட சுருதியின் கருத்து. ஞானப்ரசாதே ந விசுத்த சத்வஸ்ததஸ்து தம் பஸ்யதே நிஷ்கலம்
4
த்யாயமான: மு.உ. (3-1-8)

ஞாந பிரசாதேன = தத்வ ஞானத்தின் கிருபையால் விசுத்த[4] சத்வ: = தூய மனத்தினனாய். தத:- = அதன்பிறகு தியா யமான: நாமரூபத்தை மறந்து ஆன்மாவை நாடுபவனாய். தம் நிஷ்கலம் = கலம் — கலை — ஐந்து பூதம், பிராணன், சிரத்தை, வீரியம், அன்னம், மனம், தபசு, மந்த்ரம், கருமம். உலகம், நாமம், இந்திரியம் இவை பதினாறும் கலை யெனப் படும். இவையின்றியதால் நிஷ்கலம். கலை — உடல், உருப்புக்கள் இவையில்லாததால் நிஷ்கலம் எனினும் அமையும். தம் — அவ்வகைப் பட்ட ஆன்மாவை, யோகிகள் பார்க்கிறார்கள் என்பதை, பஸ்யதே யென்னும் பதம் உணர்த் துகிறது. இவையிரண்டும் பிரத்யக்ஷ மெனப்படும்.

அநுமானம்:- ''யம் விநித்ரா ஜிதஸ்வாஸா: சந்துஷ் டா: சம்யதேந்திரியா:[3], ஜோதி:[3] பஸ்யந்தி யுஞ்ஜாநா: தஸ்மை யோகாத்மநே நம:'' விநித்ரா: = உறக்கத்தையும், உரிய மோகத்தையும் வென்றவர்கள். ஜிதஸ்வாஸா: = பிராணனை வென்றவர்கள். சந்துஷ்டா: = நிறைந்த மனத் தினர்: சம் யதேந்திரியா: = பொறி புலன்களை வென்றவர் கள். யுஞ்ஜாநா: = மனதை ஆத்மாவில் செலுத்துபவர்கள். தம் ஜோதி: பஸ்யந்தி[3] = அறிவு வடிவ ஆன்மாவை யறி கிறார்கள். தஸ்மையோகாத்மநே நம: = அந்த[3] யோக வடிவ ஆன்மாவிற்கு[4 3] வணக்கம் என்றும், ''யோகிநஸ்தம்[3] பிர பஸ்யந்தி[4 3] பகவந்தம் சநாதனம்'' யோகிந: = அறிஞர்கள். சநாதநம்பகவந்தம் = பழமையாயும், நிலையுள்ளதாயும் உள்ள ஆன்ம சொரூபத்தை. பிரபஸ்யந்தி = உறுதியாக உணர்கிறார்கள் என்றும் உணர்த்துகின்றன. இவை யிரண்டும் அநுமானம் எனப்படும். இதனாலும் அவ்யக்தம் என்ற பதத்தால் ஆன்மா எஞ்சி இருக்கிற தென்பது இனிது புலனும். சூ. 24,

*அவதாரிகை.*

அங்ஙனமாயின் ஜீவனுகிய உபாசகனும், இறைவனுகிய உபாஸ்யனும் வேருகுமே யென்ற கேள்விக்குப் பதில் சூத்திரம்.

## ஸூ. ப்ரகாஸாதி[3] வச்ச அவைசேஷ்யம் ப்ரகாஸஸ்ச கர்மண்[4]யப்யாசாத் 3—2—25

பிரகாஸாதி[3], வத், ச, அவை சேஷ்யம், பிரகாஸ:, ச, கர்மணி அப்யாசாத் என்று, பிரிக்கவும்.

ப.உ. பிரகாஸாதிவத்[3] = சூரியன், சந்திரன், இவர்கள் ஒளி, விரல்கள், கண்ணுடி முதலிய உபாதிகளால் கோணலாகவும் வளைவாகவும் காண்பது போல. பிரகாச: = பரமாத்மா. கர்மணி = தியானம், பஜனை முதலிய வினைகளில் வேருகக் காணப்படுகிருர். அவை சேஷ்யம் = உண்மையில் ஒன்றே. அப்யாசாத் = தத்வமஸ்யாதி வாக்கிய அப்யாசத்தால் அவ்வாறறியப்படுகிறது.

வி.உ[4] ஆராத்யம், ஆராதகன்[4] — இறைவன், இறைஞ்சுபவன் என்னும் குற்றம் வருமே யென்பாயாகில் வாராது — ஒளிகளைப் போல. எங்ஙனம் பிரகாசம், ஆகாசம், சூரியன் இவைகள் முறையாக (அங்குலி) விரல், கமண்டலம், தண்ணீர் முதலிய உபாதியால் பல விதமாய்த் தோற்றினும் தனது இயல்பை விடாதது போல இந்த ஆத்ம பேதமும் உபாதியை நிமித்தமாகக் கொண்டது. இயல்பாக அல்ல. ஏனெனின் உபநிடதங்களில் அப்யாசத்தினுல் அனேக முறை ஜீவனை பிரஹ்மம் என்று பேசப்பட்டிருக்கிறது. ஆகையால் வழிபடுகிறவன் வழிபாடு செய்யப்படுபவ

னென்னும் பேதம் குற்றத்தைத் தராது என்பது உறுதி. சூ. 25,

உரைத்த பொருளை யுறுதிப் படுத்துவதற்காக சூத்திரம் :-

சூ. அதோ அநந்தேன த தா ஹி லிங்கம் 3—2—26

அத:, அநந்தேந, ததா. ஹி, லிங்கம் என்று பிரிக்கவும்.

ப.உ. அத: = உபாதி யொழிந்த பிறகு. (ஜீவன்) அநந்தேந = பரமாத்மாவோடு ஒன்ருகி விடுகிருன். ஏனெனின், ததாஹி லிங்கம் = அவ்வாறு சுருதி ஞாபகப் படுத்துகிறது.

வி. உ. ஆன்மா பரான்மா என்னும் பேதம் இயல்புடையதல்ல. உபாதியுடையது. இதனுல் என்ன தெரிகிறது? அபேதம் உண்மையென்றும், பேதம் இன்மையென்றுந் தெரிகிறது. இந்த பிளவு எது வரையிருக்கும்? பிளவுபடுத்தும் அக்ஞானம் இருக்கும் வரை. அது எது வரை இருக்கும்? ஞானம் வரும் வரை. ஞானத்தால் அது அழிந்த பிறகு அது நிமித்தமாக வந்த அனைத்தும் அழிந்து போகும். அது அக்ஞானம். ஜீவன் என்ன ஆனுன்? பிரஹ்மம் ஆனுன். எப்படித்தெரிகிறது? லிங்கத்தால். லிங்கம்—சுருதி "ஸயோ ஹவைதத்பரமம் பிரஹ்மவேத பிரஹ்மைவ பவதி",, மு. உ. 3-2-9. பிரஹ்மைவ சன் பிரஹ்மாப்யேதி பிரு. உ. 4-4-6 இவை இரண்டு சுருதியும் லிங்கம். யோ = எவன் ஒருவன். தத் பரமம்பிரஹ்ம வேத = அந்த மேலான பிரஹ்மத்தை தனது சொருபமென்று அறிகிருனே. ச = அவன். பிரஹ்மைவ பவதி = அந்த

பிரஹ்ம சொரூபமாக ஆகிருன். இது முந்திய சுருதியின் பொருள் 'ஹ—என்பது அசை'[4] வை—என்பது உறுதி. 'பிரஹ்மைவசன் பிரஹ்மாப்யேதி = பிரஹ்ம சொரூபமாக இருந்து கொண்டே பிரமஹ்மமாகிருன் என்பது பிந்திய யின்சுருதி பொருள். நிற்கிற மலையை நிற்கிறதென்பது போலும் உதயவனே உதிக்கிருன் என்பது போலும் ஆம். இத்ஞல் உபாதி நீங்கிய பிறகு பரிச்சின்னமாகக் காணப் பட்ட ஜீவன் அனந்த வடிவனுகிருன் என்பது இனிது புலனும் சூ. 26

*அவதாரிகை.*

ஆண்டான் அடிமை எனும் தன்மையை தனது மதம் புனிதத்திற்காக அந்நிய மதம் இங்கு ஆராயப்படுகிறது. 'ததஸ்து தம் பஸ்யதே', இந்த வாக்யத்தால் அருவமாகிய ஆத்மாவை த்யானத்தால்[4] வழிபடுகிருனென்று த்யேய[4] மாகிய பரமாத்மாவையும் த்யாதாவாகிய அதாவது தியானம் பண்ணுபவனுகிய ஜீவனேயும்[3] வேறு படுத்தியும், "பராத் பரம் புருஷம் உபைதி திவ்யம்" இது மூலமாக அடையப்படும் பொருளேயும் அடைபவனேயும் வேறு பிரித்து கூறப்பட்டது. இதை விளக்கும் பொருட்டு சூத்திரம்:-

## ௬ உபய[4] வ்யபதேஸாத்[3] து அஹி[1]குண்[3]டலவத் 3—2—27

உபய, வ்யபதே ஸாத், து, அஹி[1]குண்[3]டலவத் என்று பிரிக்கவும்.

ப.உ. அஹி[1]குண்[3]டலவத் = பாம்புருபமாக அபேதமும்[3] குண்டலாதி ரூபமாக பேதமுங் காணப்படுவது போல். உபய வ்யப தேஸாத் = த்யானமும், த்யானம் செய்கின்ற தன்மை

யினுல் பேதமும் தத்வமஸியாகிய பாவத்தால் அபேதமும் சொல்லப்படுகிறது.

வி. உ. பரமேஸ்வரனை சில இடங்களில் நியந்தாவாகவும், ஜீவனை நியம்யகனுகவும், இறைவனை இயக்குபவனுகவும். ஜீவனை இயங்குபவனுகவும், சில இடங்களில் இறைவனை ஆண்டானுகவும் ஜீவனை அடிமையாகவும், இவ்வாறு பேத உபதேசம் காணப்படுகிறது. சில இடங்களில் இதற்கு மாருக ''தத்வமஸி'' ''அஹம் பிரஹ்மாஸ்மி'' ''ஏஷதே ஆத்மா'' என்னும் வாக்கியங்களால் அபேத உபதேசம் காணப்படுகிறது. பேதமும் அபேதமும் ஒரு இடத்தில் காணப்பட்டால் அபேதம் கொள்ளத்தக்கது. பேதம் தள்ளத்தக்கது. ''அஹி குண்டல வத்' அஹி = பாம்பு. பாம்பு நீளமாயிருக்கிறது. பாம்பு வளைந்திருக்கிறது. பாம்பு குண்டலமாயிருக்கிறது. பாம்பு பருத்திருக்கிறது என்ற வாக்கியங்களில் நீளம் முதலிய குண்டலங்கள் பேதமாகக் காணப்படினும் பாம்பு அபேதம் தானே. அது போல ஜீவ வடிவமாகபேதம் காணப்படினும், பரமாத்மா வடிவமாக ஒன்றே என்பது உறுதி. சூ. 27.

உரைத்த பொருளை உள்ளத்தில் உறையும் பொருட்டு சூத்திரம்:-

3

## சூ "பிரகாஸ ஆஸ்ரய வத் வா தேஜஸ்த்வாத்" 3—2—28

3

பிரகாஸ, ஆஸ்ரய வத், வா, தேஜஸ்த்வாத் என்று பிரிக்கவும்.

ப. உ. வா = அதாவது. பிரகாஸ ஆஸ்ரயவத் = ஒளியும். அதற்கு உரிய உறைவிடமான சூரியனும் முற்றிலும் எப்படி பேதமில்லையோ. வத் = அது போல ஜீவனும்,

பரமாத்மாவும் உண்மையில் வேறல்ல. ஏனெனின், தேஜஸ்த்வாத் = இருவரிடத்திலும் ஒளி சமானமானதால். வா = உறுதி.

வி. உ. ஜீவனும் ஈசனும் ஒன்று என்பதற்கு இன்னொரு முறையைக் கையாள்வதற்காக பகவான் வியாசர் சூத்திரத்தில் 'வா' என்றார். ஒளி இருப்பது உதயவனிடத்தில். அதனால் உதயவன் வேறு ஒளிவேறென்று உரைக்க இயலாது.

ஜீவனே யிறைவன் வடிவமென்பதற்கு இனிய சமாதானம் — 'தேஜஸ்த்வாத்' நெருப்பிலும், நெருப்பில் எழுந்த பொறியிலும், ஒளி சமானமாக இருக்கிறது. அது போல் ஜீவனிடத்திலும், தெளிந்த ஈசனிடத்திலும், சேதனம் ஒரு படித்தாக உள்ளது. ஒன்றாகிய சேதனத்தை சிலர் ஈசனென்றும், சிலர் ஜீவனென்றும் செப்புகின்றனர். நீரைத் தண்ணீரென்றும், நீரென்றும், வெள்ளமென்றும் நிகழ்த்துவது போலறிக. சூ. 28,

*அவதாரிகை*

கூறிய சித்தாந்தத்தைச் சீரிய முறையில் செம்மை செய்வதற்காக சூத்திரம் :-

## சூ பூர்வவத்[3]வா 3—2—29

ப.உ. வா = வேறு விதமாகவும். பூர்வவத் = [3] 'பிரகாசாதிவத் அவைசேஷ்யம்' இந்த சூத்திரத்தில் பேதம் கல்பனையென்றும், அபேதம் வாஸ்தவமென்றும் கூறியிருக்கிறது. அது போல இங்கும் அறிய வேண்டும்.

வி.உ. பந்தம், அக்ஞானகாரியம். ஆகையால் ஞானத்தால் முக்தியென்பது விவேகம். பந்தத்தை நித்திய

மாக ஒப்புக் கொள்ளும் பட்சத்தில் முக்தி சாஸ்திரம் வீணுகப்போகும். மறைகள் அபேதத்தை யுண்மையாகச் சொல்லுகின்றன. பேதத்தைப் பூர்வ பட்சமாக மொழிகின் றன் என்று ஊகித்து உணர்க. பேதம் உலகசித்தம், அபேதம் சாஸ்த்ர பிரசித்தம்.

ஆத்மத்வத்தை விரும்பி ஜீவ ஈஸ்வரரிடத்தில் அபேதமும், ஜீவத்வத்தையும் ஈஸ்வரத்வத்தையும் விரும்பி பேதமும் கூறப் பெற்றது என்றறிக. சூ. 29.

*அவதாரிகை.*

கீழே வரும் சூத்திர மூலமாகவும் இந்த சித்தாந் தத்தை யுணரலாம். அஃது :-

## சூ. பிரதிஷேதாச்ச 3—2—30

ப.உ. பிரதி ஷேதாத் = பேதம் முழுதையும் விலக் குகின்றது. ச = உறுதி.

வி.உ. இதனுலும் இந்த உறுதியை உணரலாம். ''நாந்யோ அதோ அஸ்தி திருஷ்டா'' இந்தச் சுருதி பரமாத்மாவிற்கு வேருக சேதனத்தையும், நேதி நேதி,, இந்த சுருதி ஆன்மாவிற்கு வேருக பிரபஞ்சத்தையும் விலக்குகின்றன. இந்த விலக்கு வாக்கிய மூலமாக விலக்கி யது போக மிஞ்சியது பிரஹ்மம் என்பது தெளிவு.

ஆன்மாவிற்கு வேருக திருஷ்டா இல்லையென்பதால் ஆன்மா மட்டும் சேதனம், அந்யம் சேதனமன்று. 'நேதி நேதி' என்ற வாக்கியத்தால் திருஷ்யமில்லை. இந்த வாக்கியம் ஆன்மாவிற்கு அந்யமாக பொருளொன்றுமில்லை யென்று உணர்த்துகின்றது. ''மத்த : பரதரம் நான்யத் கிஞ்சித் அஸ்தி.

ப. கீதை. தனஞ்ஜய! பாண்டவர் ஐவரில் அருஜ¤ன னுக்கு தனஞ்ஜய னென்று பெயர். இப்பெயர் இவனுக்கு இரண்டு காரணத்தால் வந்தது. தனம் — பொருள். இந்த்ர பிரஸ்தத்தில் இராஜ ஸூய யாகம் வளர்க்க பாண்டவர்களுக்கு வியாசர் அநுமதி வழங்கினர். அதை நிறைவேற்றுவதற்கு தருமர் தம்பிமார்களிடம் பொருள் கொண்டு வர ஆணை யிட்டார். அந் நால்வரில் அருஜ¤னன் கொணர்ந்து வந்த தனம் மிக அதிகம். இதனல் இவனுக்கு இந்நாமம் சூட்டப்பட்டது.

மற்ஞெரு காரணம்—தனம், உண்மையான சாதனம். பரமார்த்த சாதனம் உண்மையானதனமென்று உரைக்கப் படும். அவை:- விவேக முதலிய நான்கு சாதனங்கள். நான்கில் முதலாவது சாதனம் அறிவு. அறிவு இவனிடம் மிகுதியாயிருந்தது. இதனல் இவனுக்கு அருஜ¤னன் என்பது பொருந்தியது. இவனது தபமும், தானமும், தருமமும் பரமார்த்தத்துக்குரிய இன்னும் பிறவும் விரும்பிய அளவுக்கு மேலேயிருந்தது. இதனல் இவன் தத்வரீதியால் தனஞ்ஜயனென்று அழைக்கப் பெற்ருன். விளி—ஹே தனஞ் ஜய! மத்த : பரதரம் = எனக்கு வேருக. நஅந்யத் கிஞ்சித் அஸ்தி = அந்நிய பொருள் ஒன்றுமில்லே என்று உத்தமன் உரைத்தான். உத்தமன்—புருஷோத்தமன் என்பது பொருள்

இந்த ஸ்மிருதி வாக்யத்தாலும் பிரஹ்மத்திற்கு வேருகப்பிரபஞ்சம் இல்லேயென்பது தெளிவு.

"தத்[3]ேதத்[3] பிரஹ்ம அபூர்வம் அநபரம் அநந்தரம் அபா ஹ்யம்[3]" பி. ரு. உ அப்படிப்பட்ட இந்த ஆன்மா காரண மின்றியும், காரியமின்றியும், விஜாதீய பொருளின்றியும், அஹம்புறமின்றியும் விளங்குகின்ற தென்பதால் இந்த சித் தாந்தம் நன்கு புலனும். சூ. 30

3
## (7) பராதிகரணம். ஸூ. 31-17

### அவதாரிகை.

இதுவரை சகலபிரபஞ்சமும் இல்லையென்று மறுக்கப்பட்டது. மேலும் பிரஹ்மத்தை நிலை நிறுத்தப்பட்டது.

4
இந்த அதிகரணத்தில் இந்த ஆன்மாவிற்கு மேலாகவோ அந்நியமாகவோ ஒரு பொருள் உளதா அல்லது இலதாவென்று உசாவப்படுகிறது. யாதுகாரணமென்பாயாகில், சுருதியில் மாறுபட்டு மொழிந்திருப்பதால் ஐயமுண்டாகிறது. சூத்திரம்:-

3 4 4 3 3 4
**ஸூ. பரமத: சேதூந்மாந சம்பந்த பேதவ்யபதேஸேப்ய: 3—2—31**

3 4 4 3
பரம், அத: சேது, உன்மாந, சம்பந்த, பேத, வ்யப
3 4
தேஸேப்ய : என்று பிரிக்கவும்.

ப. உ. அத: = இந்த பிரஹ்மத்திலிருந்து. பரம் = வேறுபொருள் உள. எங்ஙனந் தெரிகிறதெனின், நான்கு காரணத்தால் காணப்படுகிறது. அவை:- சேது, உன்மாநம்
3 4 4 3 3
சம்பந்தம், பேதம், வ்யபதேஸ மூலமாக அறியப்படுகிறது.

வி. உ. 'நேதி' வாக்கியங்கள் மூலமாக பிரபஞ்சத்தை நிஷேதம் செய்த போதிலும். சேதூன்மான சுருதிகளால் ஆன்மாவிற்கு வேருகவும், மேலாகவும் பொருள் இருப்தாகத் தெரிகிறது. பிரதிவாதி-இந்த ஆன்மாவிற்கு வேருக ஒரு பொருள் உளது போல் தெரிகிறது. எங்ஙனம் என்
2
பாயாகில், சேது சுருதியால். அது ''அத ய ஆத்மாசேதுர்

வித்[4]திருதி:" சா. உ. (8-4-1) அத[2] = பிறகு. யஆத்மா = இந்த ஆன்மா. சேது = பாலம். வித்[4]ருதி : = இருகரையை யும் தாங்குகின்றது. என்பது சுருதிப்பொருள். இது மூல மாக மொழியப்பெற்ற பிரஹ்மம் பாலமென்று தெரிகிறது. உலகில் பாலமென்னும் சொல் நீரைப்பிரித்து விடும் அணை முதலியபொருளைக் குறித்து வரும். மேலும், பாலம் இரு கரையைப்பொருந்தி நிற்கும். கல், மண், கட்டை, சிமிண்ட் முதலிய சாதனங்களால் கட்டப்பட்டிருக்கும். ஆனால் இங்கு சேது சப்தம் ஆன்மாவைப் பற்றியிருக்கிறது. எனவே உலகத்தில் வழங்கும் பாலம் போலல்லாமல் ஆன்மாவிற்கு அந்நியமாக ஒரு பொருளை உணர்த்தி நிற்கும். ஏனெனின் ''சேதும் தீர்த்வா'' கரையேறி யென்று தரதி சப்தம் கூறப்பட்டிருக்கிறது. நதியைக் கடந்து, கரையை அடைந்து வனத்திற்குச் சென்றான் என்றாற் போல. ஆத்ம சேதுவைக் கடந்து அநாத்ம பொருளை யடைகிறான் என்று தெரிகிறது.

இரண்டாவது உன்மானம், — ''த[3]தேதத் பிரஹ்ம சதுஷ்பாத்'' அப்படிப் பட்ட பிரஹ்மம் நான்கு பாதத்தோடு கூடியது. அஷ்டாஸபம் = பாதம் எட்டு பிளவோடு உடை யது. 'ஷோடஸகலம் பிரஹ்ம' பதினாறு அவயவங்களோடு கூடியது ஆன்மா. உன்மானம் அளவு. இவ்வளவு என்று இசைத்து சொல்லும் குறைந்த அம்சம் கார்ஷாப்பணம். ஒரு ரூபாயில் காற்பங்கு. நான்கு அணா என்ற படி.

பிரஹ்மத்திற்குரிய அளவுகளும், பிரஹ்மத்திற்கு வேறான பொருளை யறிவிக்கின்றது. அது போல ச[1]தா சோம்ய த[3]தா சம்பந்நோ ப[4]வதி" பிரிய குழந்தாய்! த[3]தா = உறக்கத்தில் ச[1]தா சம்பந்நோ = பரமாத்மாவோடு கலந்து. பவதி = ஒன்றாகி விடுகிறது. இது சம்பந்தத்தைக்

குறிக்கிறது. பரமாத்மாவின் நான்கு பாதத்தில் அகில உலகமும் அடங்கியிருக்கின்றது. பிரகாச வத், அநந்தவத், ஜோதிஷ்மத், ஆயதநவத், இவை நான்கும் பிரஹ்மத்திற்கு நான்கு பாதங்கள் நான்கு திசைகளும் பிரகாசமென்னும் பாதத்தில் அடங்கும். நிலம், ஆகாசம் திவிலோகம், சமுத் திரம் இவை நான்கும் அநந்தவான் என்னும் பாதத்தில் அடங்கும். அக்நி, சந்திரன், சூரியன், மின்னல் இவை நான்கும் ஜோதிஷ்மான் என்னும் பாதத்தில் அடங்கும். வாக்கு, மனம், கண், காது இவை நான்கும் ஆயதன வானென்னும் பாதத்தில் அடங்கும். இம்மாதிரி நான்கு பாதத்தோடு கூடியது பிரஹ்மம் என்று தெரிய வேண்டும் என்பது கருத்து.

'சாரீர ஆத்மா, தை.உ. (2-3-1) உடலில் ஒன்றி யிருக்கும் இதுவே ஆத்மா என்பது பொருள். இது — ஜீவன் ''பிராக்ஞேந ஆத்மநா'' இந்த ஜீவன் பரமாத் மாவோடு கலந்தொன்றுகிறுன். இவ் வாக்கியங்களெல்லாம் சம்பந்தத்தைக் குறிப்பிடுகின்றன. சம்பந்தம் இரு பொருள் களில்தான் உண்டாகும். மனிதனுக்கு நகரத்தோடு சம்பந் தம். இதில் மனிதன் வேறு, நகரம் வேறு. அது போல் ஆன்மா வேறு, அது அடையும் பொருள் வேறு என்பது தெளிவு.

2

பேதவியபதேசம் :- ''அதய ஏஷ சூரியமண்டலத் தில் உள்ள பொன்மய புருஷன் காணப்படுகின்றுனே யென்று மொழிந்து விட்டு, 'அதய ஏஷ' இந்த அட்சி மண்டலத் தில் வசிக்கும் புருஷன் என்று பேதப்படுத்திக் கூறியிருக் கிறது. இதனுலும் பொருள் இரண்டென்று இனிது புலனும். இன்னும் பல வாக்கியங்களால் பரமாத்விற்கு மேலாகவும், அந்நியமாகவும் ஒரு பொருள் இருப்பதாகத் தெரிகிறது. சூரியனுக்கு என்ன ரூபமோ அதுவே கண்ணுக்கும் உருவ

மென்றும், இது பல்லவ ராஜ்யம், இது பாண்டிய நாடு, இது சோழ நாடு என்றூற் போல. இம்மாதிரி சேது ஆதி உபதேசத்தால் பரமாத்மாவிற்கு வேருகவும் அந்நியமாகவும் ஒரு பொருளிருக்கிறது என்பது உறுதி. சூ. 31,

அவதாரிகை.

இந்த பூர்வ பட்சி ஆட்சேபத்தை யகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் :-

### ஸூ. சாமாந்யாத்து 3—2—32

ப.உ. சாமாந்யாத் — உலகில் பாலம் நீரை நிறுத்தி வைப்பதற்கு எவ்வாறு ஒரு சாதனமோ, அது போல ஆன்மாவும் உலக மரியாதையைத் தாங்கும் பொருட்டு சமானமாகப் பாலமென்று பகரப்பட்டிருக்கிறது.

வி.உ. து, என்னுஞ் சொல் பிரதி வாதி புகன்றதை போக்கும் பொருட்டு. உண்மையில் ஓர்ந்து பார்த்தால் பிரஹ்மத்திற்கு வேருக ஒரு பொருளை யுண்டென்று சொல்வது பேதமையாகும். அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்றூற் போல.

ஆன்மாவிற்கு வேருக பொருள் இருக்கிறது என்பதற்கு பிரமாணமில்லை. எல்லாப் பொருளும் தோன்றி யழியப்பட்டவை. அவை யனைத்தும் ஆன்மாவிலிருந்து தோன்றி, ஆன்மாவில் இருந்து, ஆன்மாவில் ஒடுங்கி விடுகின்றன என்பது வேதாந்த மரபு. காரியம் காரணத்திற்கு அந்நியமில்லை யென்று அறைகின்றன அருமறைகள். ஆன்மாவிற்கு, வேருக நாசமற்ற பொருள் இல்லை.

''ச[3]தேவ சோம்யேதம் அக்[3]ரா[3]சீத் ஏகமேவ அத்[3]விதீயம்''

சா. உ. (6-2-1) சோம்ய = பிரிய குழந்தாய்! இதம் = நாம

ரூப வடிவ உலகம். அக்ரே[3] = படைப்புக்கு முன்னம் ஏக ஏவ அத்[3]விதீயம் சஜாதிய, விஜாதிய, ஸ்வகத பேதமின்றிய சதே[3]வ ஆசீத் = சத்ரூப பிரஹ்மம் இருந்தது என்பது சுருதிப் பொருள். ஏகமென்றதால் குணமென்று கூற இயலாது. பிரஹ்மம் நிற்குணம். ஒரு குடம் செய்ய வேண்டுமானுல் பல காரணங்கள் வேண்டும். அது போல் உலகத்தை யுண்டு பண்ணுவதற்கும் பிரஹ்மம் நீங்கலாக பல காரணங்கள் இருக்குமோ என்ற ஐயத்தை அகற்றும் பொருட்டு ஏவ என்னும் சொல்லே இசைத்தது சுருதி.

ஒன்றை யறிந்தால் எல்லாம் அறிந்ததாகின்றது என்னும் பிரதிக்ஞா வாக்கியத்தால் ஆன்மாவிற்கு வேருகப் பொருள் இருப்பதற்கு நியாயமில்லே. பிரதிவாதி — சேது ஆதி வாக்கியங்கள் ஆன்மாவிற்கு அந்நிய பொருளிருப்ப தாகக் கூறுகின்றனவே யென்பாயாகில். அது பொருந்தாது. சேது வாக்கியங்கள் பிரஹ்மத்திற்கு வேருகப் பொருள்கள் உண்டென்று சொல்ல இயலாது. சேது ஆன்மாவென்று மொழியப் பெற்றிருக்கிறது. பிரஹ்மத்திற்கு மேலாக ஒன்று இருப்பதாகப் பேசவில்லே. 'சேதுராத்மா' பொதுவாக ஆன்மாவை சேது வென்றது மறை. மேலான ஒரு பொருள் இல்லேயானுல் சேது என்னும் சொல் சித்திக்க மாட்டாது. எனவே மேலான ஒரு பொருளேக் கற்பிக்க வேண்டும். பரமாத்மாவிற்கு வேருக ஒரு பொருளே மேலாகக் கற்பித்தால் அது அனர்த்தத்தில் கொண்டு விடும். அதுவும் பொருந்தாது.

ஆன்மாவை சேது என்று மொழிந்து அதன் பெருமையை அறிவித்திருக்கிறது. சேதும் தீர்த்துவா என் பதற்குப் பொருள் கடப்பதென்பது அருத்த மில்லே, பின்னே, பெற்ருனென்பது பொருள். எல்லா நூலேயும் கரைத்து

குடித்து விட்டானென்ருல் நன்ருகப் படித்து விட்டானென்று தானே பொருள். அது போல் அறிக. சூ. 32,

அவதாரிகை

4
பிரஹ்மத்திற்கு அத்யாத்ம திருஷ்டியில் வாக்கு. மனத்தின் கூருகவும், பிராணன், கண், காது இந் நான்கும் நான்கு பாதங்கள், அதி தெய்வ திருஷ்டியில் ஆகாசத்தின், கூருகவும் அக்நி, வாயு, ஆதித்யன், திசை, இவை நான்கும் பாதம் என்பதற்கும் சூத்திரம் :-

3 4 2 3
**ஸூ· புத்யர்த்த : பாதவத் ஸூ 3—2—33**

3 4 2 3
புத்தியர்த்த :, பாதவத் என்று பிரிக்கவும்.

ப. உ. பாதவத் = எங்ஙனம் பிரஹ்மத்திற்கு அடையாளமாகவும் மதத்தின் உபாசனைக்காகவும் வாக்கு முதலிய கருவிகளைப் பாதமாகக் கற்பனை செய்திருக்கிறதோ அது போல சதுஷ்பாத் பிரஹ்ம என்ற மறைகளில் உன்மான முதலியவை உபாசனையின் நிமித்தமாக உரைக்கப் பெற்று
3 4 2
இருக்கிறது. புத்யர்த்த : = வழி பாட்டு நிமித்தம்.

வி. உ. உன்மானம் — அளவு சேது — அணை. இவையெல்லாம் பிரஹ்மத்திற்கு வேறு என்று பிரதிவாதி விளம்பினுனே, அது முறையன்று, இவைகளை இயம்பியது பிரஹ்மத்திற்கு வேறு ஒரு பொருள் இருக்கிறதென்பதற்காக அல்ல. பின்னை யெதற்காக? 'புத்தியர்த்த :' உபாசனைக்காக பிரஹ்மம் நாலு காலுடையது, எட்டு பிளவு உடையது, பதினறு அவயவங்களுடையது என்றெல்லாம் சொன்னது எவ்விதத்திலும் மனிதனுடைய மனம் பிரஹ்மத்தில் நிலைத்து இருக்க வேண்டுமென்ற ஒரே கருணைதான் சுருதிக்கு,

இதற்காகத்தான் விகாரப் படுத்திக் கற்பனை செய்திருக்கிறது. கற்பனைக் கடந்த ஆன்மாவில் எல்லா மனிதர்களுடைய மனம் செல்ல இயலாது. மதி, மூன்று விதமாக இருக்கிறது -: மந்தம், மத்யமம், உத்தமம். உத்தம மதி நிர்விகார, அநந்த பிரஹ்மத்தில் செல்லும். மற்றைய இரண்டும் செல்ல மாட்டா. எனவே 'பாதவத்'. மனம்,
[4] அத்யாத்மம். ஆகாசம் அதி தெய்வம். இவையிரண்டின் விகாரந்தான் பாதங்கள்.

'பாதவத்' அல்லது பாதம் போல. ஒரு பணத்திற்கு நான்கு காப்பணம் போல். இது எதற்காக, வியவகாரத்திற்காக. எல்லோரும் எல்லா பணத்தையும் சிலவு செய்கிறதில்லை. அவர்கள் நிமித்தம் இந்த கற்பனைப் பயனற்றதாகும். வியாபாரிகளுக்குப் பயனுள்ளதாகும். அது போல் இந்த விகார உபதேசம் மந்த மத்யமனுக்குப் பயனுள்ளதாயும் உத்தமனுக்குப் பயனில்தாயும் ஆம் என்பது கருத்து. சூ. 33.

*அவதாரிகை.*

சம்பந்தத்தையும், பேதத்தையும் நீக்கும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. ஸ்தான[2] விசேஷாத் பிரகாசாதிவத்[3] 3—2—34**

ஸ்தாந[2], விசேஷாத், பிரகாச, ஆதிவத் என்று பிரிக்கவும்.

ப. உ. பிரகாசாதிவத் = ஒளி ஆகாசாதிகளைப் போல. ஸ்தான[2] விசேஷாத் = உபாதியின் சம்பந்தத்தால் ஆன்மாவில் சம்பந்தமும், பேதமும் காணப்படுகின்றன. அது உபசாரம்.

3
வி. உ. 'பிரகாசாதிவத்' இந்த சூத்திரத்தில் சம்பந்தத்தைக் கூறும் வாக்கியத்தையும், பேதத்தைக் கூறும் வாக்கியத்தையும் விலக்குகின்றன. மேலே சொன்ன வாக்கியங்களால் அந்நிய பொருளை யருளியிருக்கிறதென்பது சரியன்று. இடத்தைப் பொருத்து ஒன்றிலும் பல பொருள் காண்பது மரபு.

பரமாத்மாவில் எழுந்து அதிலிருந்து மீண்டும் அதில் ஒடுங்குவதால் சம்பந்தமென்று கூறியிருக்கிறதே தவிர பரிச்சின்ன திருஷ்டியாலல்ல. விசேஷ உபாதியால் தோற்றமும், அது நீங்கியதால் ஒடுக்கமும் உண்டாகின்றது.
2
ஸ்தானமென்பது உபாதி. உபசாரத்தால் வருகின்ற (பேதம்) வடிவம் சொருபத்தால் அல்ல. ஒளிகளைப் போல. இது உவமையுறுப்பு. ஊசி, துளை, பாசம் மூங்கில் இவைகளை நோக்கி ஆகாசம் கூறு கூருகக் காணப்படுகின்றது. அது போல ஆன்மாவில் உபாதியால் பரிச்சின்னங் காணப்படுகின்றது. சூ. 34,

*அவதாரிகை.*

சொல்லிய பொருளைத் தெள்ளி ஆராய்ந்து அறிவிப்பதற்கு அடுத்த சூத்திரம் :-

1
## சூ. உப பத்தேஸ்ச 3—2—35

3 4 4 3
ப. உ. சம்பந்தம், பேதம் முக்கியமில்லை. ஏனெனின் உப
4
பத்தே : = ஸ்வமபீதோபவதி இந்த மறையின் வாக்கியத்தால் பொருத்தமாகின்றது.

வி. உ. பொய்யான சம்பந்தமுண்டாவதால் குற்றமொன்றுமில்லை. சுருதியில் சொன்ன சம்பந்தம் சொரூப

சம்பந்தம், அந்நிய சம்பந்தமன்று. சொரூபத்தை விட்டு விலகி இருக்க இயலாது. நரன் நகர சம்பந்தம் போலன்று. உபாதியால் செய்த சொரூப மறைவால் சம்பந்தம் போல் தோற்றுகிறது. 'ஸ்வமபீதோபவதி' சா. உ. (6-8-1) இச் சுருதி மூலமாகத் தெளிய வருகின்றது. அது போல பேத மும் வேறு பொருளைப் பற்றி வருவதன்று. அவ்வாறு வருமானால் எல்லா மறைகளும் ஒரு இறைவனென்று உரைத்ததற்கு முரணாகும்.

சுருதியும், ஆகாசம் ஒன்று இருப்பினும் இட வேற்று மையால் பேத உபதேசஞ் செய்கின்றது. "யோ அயம் ப[3]ஹிர்[4]தா புருஷாத் ஆகாச: சா. உ. (3-12-7) இந்த மனித உடலுக்கு வெளியே எந்த ஆகாசமோ, "யோ அயம் அந்த: புருஷ ஆகாச:" மனிதனுக்கு உள்ளிலும் அந்த ஆகாசம் என்று மறைகள் ஓதுகின்றன. இதனால் ஒரு ஆகாசம் உபாதியால் பலவாகத் தோற்றுகின்றது என்பது தெளிவு. சூ. 35.

*அவதாரிகை.*

இதுவரை அந்நியர் தருக்கங்களையும், உன்மானாதி பட்சங்களையும் அகற்றி விட்டு தன்னுடைய மதத்தை உறுதிப் படுத்தும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. ததா[2] அந்யபிரதி ஷேதா[4]த் 3—2—36**

ததா[2], அந்ய, பிரதி ஷேதா[4]த் என்று பிரிக்கவும்,

ப. உ. த்தா[2] — அவ்வாறு "ஆத்மா ஏவ அதஸ்[4] தாத்" இந்த வேதவாக்கியத்தில் அந்நிய பொருள் விலக்கப் பெற்றதால் நிலையுள்ள பிர ஹ்மமே எஞ்சியிருக்கின்றது.

வி. உ. எங்ஙனம் சேதுத்வ முதலிய உபதேசத்தால் வேறு பொருளுக்கு அடைவில்லையோ. அது போல் ஆத்மா ஏவ அத[4]ஸ்தாத் என்னுஞ் சுருதி வாக்கியத்தால் கீழேயும் ஆன்மா வென்றதால் மேலேயும் ஆன்மாவென்று தெரிகின்றது. இதனால் தனது பக்ஷத்தை வேறு காரணங்களாலும் உணர்த்துகின்றனர் அந்நிய வஸ்துக்களை யகற்றுவதால் ஆன்மாவிற்கு வேறு பொருள் இல்லையென்று இனிது புலனுகின்றது.

அதனுல் ''ச ஏவ அத[4]ஸ்தாத்'' சா. உ. (7-25-1) அந்த ஆன்மா கீழேயிருக்கிறது. ''அஹமேவ அத[4]ஸ் தாத்'' கீழேயிருப்பதும் நான்தான். சா. உ. (7-25-3) ''சர்வம் தம் பராதா[3]த்[3] யோ அந்யத்ர ஆத்மந: சர்வம் வே[3]த்'' பி. உ. (2-4-6) யோ = எவனுருவன். அந்யத்ர ஆத்மந: = ஆன்மாவிற்கு வேருக சர்வம் வே[3]த = எல்லாப் பொருளேயும் அறிகிருனே. தம் = அவனே. சர்வம் = எல்லாப் பொருளும். பராதா[3]த் = அவமதிக்கின்றன என்பது சுருதிப் பொருள்.

''பிர[3]ஹ்மைவேதம் சர்வம்'' எல்லாம் பிரஹ்மமே. இம்மாதிரியான வாக்கியமெல்லாம்வேதாந்த சித்தாந்தத்தை நன்கு விளக்குகின்றன. மேலும் இதனுல் பரமாத்விற்கு வேறு பொருள் இல்லையென்று உறுதிப்படுத்துகின்றன ஆரணங்கள் — மறைகள். பிரஹ்மத்திற்கு அந்நியமாகப் பிர பஞ்சம் எள்ளளவுமில்லை யென்பது கருத்து. சூ. 36,

*அவதாரிகை.*

சேது ஆதி பதங்களை விலக்கி விட்டு, அந்நியம் என்பதையும் அகற்றி விட்டு ஆன்மா எங்கும் நிறைந்திருக்கிறது என்பதை நன்கு விளக்கும் பொருட்டு சூத்திரம் :-

3 3 3 3 4
**சூ. அநேந சர்வகதத்வம் ஆயாம ஸப்தாதிப்ய:**
**3—2—37**

3 33 3 3
அநேந' சர்வகதத்வம், ஆயாமசப்தாதிப்ய: என்று பிரிக்கவும்.

ப. உ. அநேந = சேதுவாதி உபதேசத்தால். அந்நிய பொருளை இல்லையென்றதால். சர்வகதத்வம் = எங்கும்
33 3 4
நிறைந்த தன்மை சித்திக்கின்றது. ஆயாம சப்தாதிப்ய: =
3
''ஆகாசவத் சர்வகதஸ்ச நித்ய:'' என்ற மறை மொழியால் ஆன்மாவிற்கு வியாபகத்வம் காணப்படுகின்றது.

வி.உ. இந்த மாதிரி சுருதி, ஸ்மிருதி,மேலும் அதிஷ்டானத்தால் கற்பிக்கப்பட்ட உலகம் வியாபகம். வேறு வழியில் சித்திக்கமாட்டாது. அணே, மண் (சிமிண்டு) — சுண்ணம் சூரணம் இவைகளை ஆத்மாவில் ஒப்புக் கொள்ளும் பட்சத்தில் ஆன்மாவிற்கு அற்பத் தன்மை வந்து பொருந்தும். அணே முதலிய பொருள்கள் இயல்பாக பரிமித வஸ்துக்கள் அந்நிய பொருள்களை விலக்காது. ஒரு பொருள் இன்னொரு பொருளோடு வியாபகமாகும். அதனுலும் ஆன்மாவிற்கு ஊனம் வரும். ஊனம் — குற்றம்.

ஆனுல் சர்வகதத்வ 'ஆயாமமென்னுஞ் சொல்லால் ஆன்மாவிற்கு எங்கும் நிறைந்த தன்மைதானுக உணரப் படுகிறது. ஆயாமம் — வியாபகம். யாவான் வா—

எவ்வளவு பூதாகாசமோ அவ்வளவு அந்தராகாசம் என்றும், ஆகாசவத், ஆன்மா ஆகாசத்தைப் போல எங்கும் நிறைந்ததும், நித்யமுமாம். திவிலோகத்திலிருந்தும் ஆன்மா பெரியது. என்றும், ''ஜ்யாயான் ஆகாசாத்'' விண்ணைப்
3 2
பார்க்கிலும் பெரியது என்றும், ''நித்ய சர்வகத: ஸ்தாணுரசலோயம் சநாதந; (ப. கீதை) (2-24) இந்த ஆன்மா நித்தியமாயும், வியாபகமாயும், தூணைப் போன்று திரமாயும், அசைவு இன்றியதாயும், பழமையானதும் ஆம் என்பது கீதையின் திரண்ட பொருள். இம்மாதிரி சுருதிகளும் ஸ்மிருதிகளும் ஆன்மாவை வியாபகமென்று ஒரு முகமாக ஓலமிடுகின்றன. அறிவிக்கின்றன என்பது கருத்து. சூ 37,

2 4
## பலாதிகரணம்.

### அவதாரிகை.

இதுவரை இம்மாதிரி தத்பதத்தின் முக்கியார்த்தத்தை விசாரஞ் செய்து இப்பொழுது தத்பதத்தின் வாச்சியார்த்தம் பலமத உபபத்தே என்னும் சூத்திர வாயிலாகச் சிந்திக்கப் படுகிறது. சூத்திரம் :-

2
## சூ. பலமத உபபத்தே: 3—2—38

2
பலம், அத:, உபபத்தே: என்று பிரிக்கவும்.

ப. உ. பலம் = கருமத்தின் பயன். அத: = இந்த இறைவனால் எல்லோர்க்கும் அடையப்படுகிறது. உபபத்தே: = இதுதான் பொருத்தமாகின்றது.

வி. உ. வியவகார வேளையில் பிரஹ்மத்திற்கு ஏவுதல், இயங்குதல், ஆணையிடுதல், தானம் கொடுத்தல், பலமளித்தல் முதலிய தொழில்கள் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

மக்களுக்கு மூன்று விதமான கருமங்கள் மொழிந் திருக்கின்றன. அவை:- இஷ்டம், அநிஷ்டம், மிஸ்ரம். இவைகளுக்கு முறையே இன்பம், துன்பம், இன்பதுன்பம் பயனாகும். இவ்வினைகள் அனைத்தும் சம்சார விஷயம். இங்கு இம்மூன்று பயன்களையும் கருமங்கள் கொடுக்கின்றனவா அல்லது இறைவன் கொடுக்கின்றானா என்று விசாரிக்கப் படுகின்றது. இந்நிலையில் (வாதி) சித்தாந்தி — பயனை இறைவன்தான் தர இயலும். ஏனெனின், அதுதான் பொருத்தமாயிருக்கின்றது.

அவன்தான் கருமங்கள் அனைத்திற்கும் தலைவன். அவன் ஈசுவரன்: பலவிதமானப் படைப்பும், பலவித துடைப் பும், புதுமையான செயலும் அவனுக்கே யுரியவை. அவன் முற்றறிவுடைய முதல்வன். தேசம், காலம், பொருள் இவைகளுடைய நிறை, அறிவு, ஆற்றல், எல்லாம் அவனை அணுகியிருக்கின்றன. அதனால் ''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' என்றது தேவாரம். பொருள் வெளி.

எனவே அவ்ரவர்கள் வினைக்குத் தக்கவாறு ஆய்வு செய்து பயனை அவரவர்களுக்கு அளிக்க வல்லவன் அரனே. அவ்வாறு உயிருக்கு உரிய பலரூப இன்ப துன்பங்களைக் கொடுக்க கருமத்தால் இயலாது. ஆய்வு செய்யும் அறிவு வினைகளுக்கு இல்லை. ஜட வடிவம் கருமம். அது மட்டுமல்ல. பின்னை? ஒவ்வொரு கணமும் வினைகளுக்கு அழிவுண்டு.

தோன்றி யுடனே அழிகின்ற வினைகள் கர்த்தாவிற்கு காலாந்தரத்தில் பயனை அளிப்பதென்பது பொருந்தாது. இன்மையிலிருந்து உண்மை உண்டாகின்றதென்பது உணர் விலாதத் தன்மை. பிரதிவாதி — கருமம் தான் அழிகின்ற போதே கரும பலத்தை யுண்டு பண்ணி யழிகின்றது. அதை கர்த்தா மற்றொரு வேளையில் நுகருகிறானென்றால் என்னைக் குற்றம் என்பது பிரதிவாதி மதம்.

அதுவும் பொருந்தாது. ஏனெனின், கர்த்தாவோடு சம்பந்தமில்லாத போது கரும பலம் உண்டாவதற்கு நியாய மில்லை. எப்பொழுது ஜீவன் பலவடிவ இன்பதுன்பத்தை அநுபவிக்கின்றனோ அப்பொழுது பலமுண்டாகுமென்பது சாஸ்த்திர மரியாதை. உலகில் அப்பொழுது தான் இன்ப துன்பம் வெளிப்படுகின்றது.

அங்ஙனமாயின் வினையிலிருந்து பலம் உண்டாக வில்லை, வினையிலிருந்து தோன்றிய அபூர்வத்திலிருந்து பயனுண்டாகின்றதென்றால் என்னக் குற்றம் என்பது பிரதி வாதியின் வினா. அதுவும் பொருந்தாது. எதனாலோ வெனின், அபூர்வம் அசேதனம். கல், கட்டை, மண்ணாங் கட்டியைப் போன்றது. சேதன சம்பந்தமில்லாமல் பலனைக் கொடுக்கும் தொழில் அதற்கு இன்மையால் அது இருக்கின்றது என் பதற்குப் பிரமாணமில்லை. அஃது — அபூர்வம். அர்த்தா பத்திப் பிரமாணம் உண்டு என்பாயாகில் அதுவும் பொருந் தாது. ஏனெனின், ஈசுவரனில்லை யென்ற பிறகு அது சித்திக்க மாட்டாது. அஃது அர்த்தாபத்திப் பிரமாணம். இறைவனையேற்றுக் கொள்ளாத இடத்தில் பிரமாணம் இயல் பாக அழிந்து போகின்ற படியால். எனவே பலத்தையளிப் பவன் இறைவன். சூ 38,

மொழிந்த பொருளை முடி பொருளாகக் கூறுவதற்கு சூத்திரம் :-

## ஸூ. ஶ்ருதத்வாச்ச 3—2—39

ப. உ. சுருதிகளில் பலத்தை யளிப்பவன் பரமன் என்று பகர்ந்திருப்பதால் சுருதத்வாத் என்று சூத்திரம் கூறுகின்றது.

வி. உ. கிருதாத்யயே அநுசயவான் என்ற சூத்திரத்தில் ‘தத்ய[3] இஹரமணீய[1] சரணா :, என்னும் சுருதி வாக்

கியத்தால் இறைவனைப் பயன் தருபவன் என்று கொள்ள வேண்டும். ச என்னும் வலியால் வேறு சுருதி :- ''சவா ஏஷ மஹான் அஜ ஆத்மா அந்நாதோ[3] வசுதா[3]ந:'' பிரு—உ. (4-4-24) சவாஏஷ ஆத்மா = அப்படிப்பட்ட இந்த ஆன்மா மஹான் = பெரியது. அஜ: = உற்பத்தியின்றியது அந்நாத[3]: = உணவையுண்பவன். வசுதா[3]ந: = கருமபலங்களை யளிப்பவன் என்பது சுருதிப் பொருள். ''தஸ்ய தஸ்ய அச[1]லாம் ஸ்ரத்[4]தாம் தாமேவ வித[3]தா[4]ம்யஹம்'' ப. கீ. 7-2, (அருஜுனு!) அவரவர்கள் செய்கின்ற சிரத்தை பக்திக்குத் தக்கவாறு நான் அவர்களுக்குப் பயனை அளிக்கின்றேன் என்று வில் வீரனுக்கு சொல்வீரன் சொல்கின்ருன் என்பது கீதையின் பொருள். இவ்விரு வாக்கியங்களாலும் பரம் பொருள் அரும் பொருளைத் தருகின்ற தென்பது தெளிவாகின்றது. சூ. 39,

அவதாரிகை.

ஜைமிநி ஆசா[1]ரியர், இன்ப துன்பங்களை வினைகள் உயிர்களுக்கு அளிக்கின்றன வென்று கூறுகின்றனர்.

## சூ. த[4]ர்மம் ஜைமிநிரதஏவ 3—2—40

த[4]ருமம், ஜைமிநி: அத: ஏவ என்று பிரிக்கவும்.

ப. உ. அதஏவ = சுருதி ஸ்மிருதிகளால். த[4]ர்மம் = வினைகளை. ஜைமிநி: = ஜைமிநி மகரிஷி. பயனையளிப்பதாக ஒப்புக் கொள்கின்றனர்.

வி. உ. இது பூர்வ பட்ச சூத்திரம். ''யஜேத'' இந்த வி[4]தி வாக்கியத்திற்கு யாகம் விஷயமாகும். மகரிஷிகளில்

ஜைமிநி யென்பவர் ஒருவர். அவர் இறைவனே யேற்றுக் கொள்வதில்லே. அவரிடம் உயிர்களுக்கு இன்ப துன்பம் கொடுப்பது யாரென்று கேட்ட போது, அவர் — இருவினே கள் அளிக்கின்றன என்று மொழிந்தனர். அதற்கு அவர் தரும் காரணம் — அதஏவ. அதஏவ என்பதற்குப் பொருள் என்ன? சுருதியும் பொருத்தமும் ஆம். யாகம் சுவர்க்கத்திற்கு சாதனம். ஆகையால் அபூர்வ வாயிலாக வினேகளுக்குப் பலன் உண்டாகின்றது என்பது அவர் மதம்.

இறைவன் வினேயை விரும்பி உயிர்களுக்குப் பலனே அளிக்கிருனு அல்லது தானுக அளிக்கிருனு? இறைவன் தானுகப் பலனே அளித்தால்காரணம் ஒரு படித்தாக இருக்க காரியம் பலவாகக் காணப்படுகின்றது. அங்ஙனமாயின் இறைவனுக்கு சிலரோடு ஸ்நேகமும் சிலரொடு கோபமும் என்னும் குற்றமுண்டாகும். இறைவனிடமும் விருப்பும் வெறுப்பும் காணப்படும். அவ்வாறு ஏற்றுக் கொண்டால் இறைவன் குற்றமற்றவன் என்னும் கூற்றுக்குக் கூற்று வரும். முதற் கூற்று கூறுவது. இரண்டாவது கூற்றுக்கு அழிவு என்பது பொருள்.

இக் குற்றத்திலிருந்து இறைவனே யகற்ற வேண்டு மானுல் கருமத்தைக் கொள்ள வேண்டும். வினேகளே பயனேத் தருகின்ற தென்று சொல்ல வேண்டும். அவ்வாறு உரைக் கில் இறைவனே யேற்றுக் கொள்வதால் யாதொரு பயனு மில்லே. எனவே தருமம் உயிர்களுக்குப் பயனேத் தருகின்ற தென்பது ஜைமிநி மதம். சூ. 40,

*அவதாரிகை.*

இவர் மதத்தை யெளிதில் விலக்கும் பொருட்டு சூத்திரம். இவர் — ஜைமிநி.

3 3 3
## சூ. பூர்வம்து பாதராயணோஹேதுவ்யபதேஸாத் 3—2—4

3 3
பூர்வம், து, பாதராயண:, ஹேது, வ்யப தேஸாத் என்று பிரிக்கவும்,

ப. உ. து = இது பூர்வபட்சத்தைப் போக்குகின்றது.
3 3
பாதராயண: = பாதராயணரென்னும் ஆசாரியர். பூர்வம் = முன்னே சொன்ன இறைவனைப் பயனைத் தருபவனாக மொழி
3
கின்றார். எவ்வாறெனின், ஹேது வ்யப தேஸாத் = சுருதி ஸ்மிருதிகளிலே பயனை அளிப்பவன் இறைவனென்று சொல்லியிருக்கின்றது என்றவாறு.

வி. உ. பாதராயணர் என்பவர் முதலில் மொழிந்த காரணத்தை வைத்து பலனை அளிப்பவன் பரமன் என்று பகருகின்றனர். கரும மாத்திரம் அல்லது அபூர்வ மாத்திரம் பலனைத் தரும் என்பதை து, என்னும் சொல் விலக்குகின்றது. கருமத்தை விரும்பியோ அல்லது அபூர்வத்தை விரும்பியோ பரமன் பலத்தைத் தருகின்றான் என்பது சித்தாந்த பட்சம். இது எங்ஙனம் பொருந்தும் என்பாயாகில் 'ஹேது வியப தேஸாத்' என்றது சங்கர பாஷ்யம்.

தருமத்தையும் அதருமத்தையும் செய்து வைப்பதாலும், பயனைத் தருவதாலும் ஆன்மாவை காரணமாகக் கொள்ளப் பெற்றிருக்கின்றது. சந்தனம், முள்ளு இவைகள் காட்சிப் பொருள். இவைகளால் இன்ப துன்பம் வருமானால் நல்வினை தீவினைகளையேன் விரும்ப வேண்டும்? சுருதியில் சொல்லியிருக்கின்றதே யென்பாயாகில், ஈசுவரனையும், கூறியிருக்கின்றதே. எனவே அவனையேன் ஏற்றுக் கொள்ளக் கூடாது? ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பது கருத்து. ஈசுவரனை யொப்புக் கொள்ளா விடில் மறைகளுக்கு மரியாதை

யில்லாமல் போய்விடும். இறைவனைக் கூறும் சுருதி
4
ஸ்மிருதிகள் :- ''ஏஷஹியேவ சாது கர்ம காரய திதம்
4 4
யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதே ஏஷ உ ஏவ அசாது
4
கர்மகாரயதி தம் யமதோ நிநீஷதே'' ஏஷ = இந்த ஆன்ம
4
தேவன். (யாரை) சாது கர்ம = நல்ல கர்மங்களைச் செய்ய
4 4
வைக்கின்ருனே. தம் = அவனை. யமேப்யோ லோகேப்ய:
= யமலோகத்திலிருந்து. உந்நிநீஷதே = மேலே உயர்த்து
கின்றனன் (என்றும்) ஏஷ = இந்த ஆத்ம தேவன் (யாரை)
4
அசாது கர்மகாரயதி = பாவ கருமத்தைச் செய்ய வைக்
4
கிருனே தம் = அவனை. யமதோ = யமவலையிலிருந்து
நிநீஷதே = கீழே தள்ளுகின்றனன் என்றும் மறைகள்
கூறுகின்றன. கௌஷிதகி - உ. உ-அசை. ஹி — உறுதி.

3 4 4
ச தயா ஸ்ரத்தயா யுக்த: தஸ்யாராதன மீஹதே
4 1
லபதேச தத; காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந். ப. கீ.
4
(7-21) (விஜயனே!) ச = அவன்அந்தமனிதன் தயா ஸ்ரத்
4
தயா யுக்த: =அந்த நம்பிக்கையோடு கூடியவனுய் தஸ்ய =
4
பரமாத்மாவை. ஆராதநம்=வழிபாடு. ஈஹதே=செய்கிருன்.
அவன் செய்த வழிபாட்டிற்குத் தக்கவாறு, விஹி தான்
காமான் தான்=அவைகளுக்கு உரிய பலன்களை. மயாவிஹி
தான் = நான்தான் அளிக்கின்றேன். தத: = என்னல்
கொடுக்கப் பெற்ற பிறகு லபதே என்று கூட்டிக்கொள்ளவும்.
1
அவன் அடைகிருனென்பது பொருள். ச = உறுதி.

எல்லா வேதாந்தங்களிலும் இறைவனுல் தான் சிருஷ்டி யுண்டாகிறது என்று ஓதப்பட்டிருக்கிறது. ஓதுதல் சொல்லுதல். அம்மாதிரி பலனைக் கொடுப்பதிலும் பரமனைக் காரணமாக மொழிந்திருக்கின்றன. வினைகளுக்குத் தக்க வாறு விமலன் உயிர்களைப் படைக்கின்ருனென்றும், வெவ் வேறு விதமான காரியங்கள் காணப்படுகின்றன என்னும் குற்றம் இறைவனைச் சாரமாட்டாதென்றும், நா நாகாரியங் களுக்கு அந்தந்த ஜீவர்கள் கருமமே காரணம் என்பதாலும் குற்றமொன்றும் குருபரனைப் பொருந்தமாட்டாதென்பது கருத்து. சூ. 41.

கல்விச் செருக்கால் கடவுளை விலக்கி கருமமே இன்ப துன்பத்தைத் தருமென்று தருக்கித் திருந்ததாருக வனத் தினர் கதை :-

பூர்வ காலத்தில் இமயமலையருகில் தாருகமென்ருெரு வனம் இருந்தது. அதில் முனிவர் பலர் வாசஞ் செய்திருந் தனர். இவர் யோக நெறிகளில் மிகத் தேர்ந்தவர். நூல் பல கற்று நுண்ணறிவு பெற்று மேன்மையுற்று விளங்கி நின்றனர். தாம் செய்கின்ற வேள்வி முதலிய நல்ல கருமங் களே கருதிய பயன்கள் எவற்றையும் தருமென்று உறுதி யாகத் துணிந்தனர். அதனுல் மற்றொரு கடவுளை வழி படல் வேண்டாமென்று மனச் செருக்குற்று மதியாதிருந்தனர். இங்ஙனமிருந்த இவர்களை உய்வுக்கும் பொருட்டு கண்ணு தற் பரமன் எண்ணினுர். கண்டார் எவரும் காதல் கொள்ளத் தக்க ஒரு புருட வேடந்தாங்கினுர். திருமாலை மோகினி வடிவெடுத்து உடன் வரச் செய்தார். அவ்வனத்தில் புகுந் தார். அம் முனிவர்களையும் அவர் தம் பத்தினிமார்களையும் நிலைகுலைத்து அவர்கள் கொண்டிருந்த செருக்கை அகற்றித்

தெளியவைத்தனர். அவர்களும் தெளிந்தார்கள். தங்கள் சிறுமையை உணர்ந்தார்கள். இறைவனது பெருமையை நினைந்தார்கள். முன்னர் அறியாதிருந்தமையை எண்ணி வருந்தினார்கள். பின்னர் நற்றாள் தொழுதார்கள். நற்பயன் பெற்றார்கள். முற்றும் உணர்ந்து குற்றமற்று நின்று பற்றற்று விளங்கும் ஒப்பற்ற ஒருவன் பொற்றாள் வணங் கலே கற்றதனால் ஆய பயனென்பதை இவர் காட்டி நின்றார். இதனாலும் இன்பதுன்பத்தைத் தருபவன் இறை வன் என்பது இனிது புலனாம்.

மூன்றாவது அத்யாயத்தின் இரண்டாவது பாதம்.

முற்றிற்று.

## மூன்றுவது அத்யாயத்தின் மூன்றுவது பாதம்.

இவண் பரவித்தை யபரவித்தையின் குணங்களைப் பற்றி விசாரஞ் செய்யப்படுகின்றது. இவண்-இங்கு.

4
### (1) சர்வ வேதாந்த பிரத்யயஅதிகரணம். சூ. 1-4

இரண்டாவது பாதம் வரை அறிய வேண்டிய பிரஹ்மத்தை அறிவிக்கப் பெற்றது. இப்பொழுது ஒவ்வொரு உபநிஷத்துக்களிலும் உரைக்கப் பெற்ற உபாசனைகள் ஒரு விதமா அல்லது பலவிதமா வென்று பரிசீலிக்கப்படுகிறது.

ஆதி யந்தம் இலதாயும், பேதரஹிதமாயும், உப்புக் கட்டியைப் போல ஞான கட்டியென்றும் பிரஹ்மத்தைப் பேசியிருக்க, இப்பேதவிசாரம் எவ்வாறு வந்தது ஏனெனின், பிரஹ்மம் ஒன்று, அதற்கு உருவமும் ஒன்று. வினைகள் பலவாறு. அது போல பிரஹ்மம் பலவாறு என்பது வேதாந்தத்திற்கு உடன்பாடன்று.

3 1 3 3
### சூ. சர்வவேதாந்த ப்ரத்யயம் சோதநாத் யவிசேஷாத் 3—3—1

1 3 3
சர்வ வேதாந்த பிரத்யயம், சோதநாதி, அவிசேஷாத் என்று பிரிக்கவும்.

3
ப.உ சர்வ வேதாந்த பிரத்யயம்=எல்லா உபநிடதங்களிலும் கூறிய உபாசனை வெவ்வேறன்று. (ஏனெனின்)
1 3
சோதநாதி அவிசேஷாத் = விசாரஞ் செய்து பார்க்கும் பொழுது உபாசனைகளனைத்தும் சமானமாக இருக்கின்றன.

வி: உ: சென்ற பாதத்தில் தத்பத த்வம் பத் விசாரஞ் செய்யப் பெற்றது. இங்கு மனத்தூய்மை வாயிலாக அகண்டார்த்த ஞானத்திற்காக சகுண உபாசனையைப் பற்றி ஆயப்படுகிறது. பூர்வ பட்சத்தில் உபாசனைகள் வெவ்வேறு. சித்தாந்த பட்சத்தில் ஒன்று. அத்வைத ஆன்மாவில் உபாசனை வேறு வேறு விதமாக இருக்க இயலாது. ஒவ்வொரு விக்ஞானத்திற்கும் ஒவ்வொரு பொருள் இருக்குமானல் ஆன்மா வொன்றென்பதில் நம்பிக்கை யுண்டாக மாட்டாது. விக்ஞானம் — உபாசனை. எனவே ஒவ்வொரு உபநிடதங்களிலும் விக்ஞானம் வேறு என்று ஐயங் கொள்ளலாகாது. சோதனைத் அவிசேஷாத் ஒன்றென்றும் உரைக்க இயலாது. சோதநா — கருமம். அவிசேஷம் — பொதுவாக.

பிரஹ்ம ஞானம் கரும ஞானத்திற்கு வேறு. கரும ஞானம் விதியைப் பற்றியிருக்கிறது. பிரஹ்ம ஞானம் வஸ்துவைப் பற்றியிருக்கின்றது. இவ்வாறு 'தத்து சமந்வயாத்து' என்னும் சூத்திர உரையில் ஆசாரியாள் அருளியிருக்கின்றனர். 'அங்ஙனமாயின் இந்த விசாரம் சித்தாந்தியாகிய நீர் ஏன் செய்கிறீர் என்பாயாகில், சி. இங்கு கூறப்பட்ட விக்ஞான பேதத்தின் விசாரம் சகுண பிரஹ்மத்தின் விஷயம். பிராணதி உபாசனை விஷயம். எனவே யொரு குற்றமுமின்று.

இங்கு கருமத்தைப் போல உபாசனையிலும் பேதம் பொருந்தும். ஏனெனின், உபாசனையும் கரும ரூபந்தான் இதற்குப் பயன் திருஷ்டப் பலனும் அதிருஷ்டப் பலனுமாம். அவ் வுபாசனை நிஷ்காமமாயின் உண்மை ஞானத்தின் வாயிலாக கிரம முக்தி ரூப் பலத்தை யளிப்பதாகவும் கூறியிருக்கிறது. ஆதலின் அஃது ஒவ்வொரு வேதாந்தத்திலும் ஒன்றுக இருக்கிறதா அல்லது வெவ்வேருக இருக்கிறதா வென்று சிந்திக்கப் படுகிறது.

இங்கு பூர்வ பட்சித் தருகிற தருக்கத்தை மொழி கின்றது. எதிரி அந்நிய வேதாந்தத்தில் விதித்த விக் ஞானத்தில் தைத்திரீயகம், வாஜ சநேயகம், கௌஷீதகம் சாட்டியாயனம். இவையெல்லாம் வேறு வேறு நாமங்கள். பஞ்சாக்னி வித்தை, பிராண வித்தை, தகர வித்தை, வைஸ்வானர வித்தை இவை யெல்லாம் ஒன்றுக் கொன்று

3 3 3 4 3

வெவ்வேறு இது ''நாநா சப்தாதி பேதாத்'' (3-3-58) என்னுஞ் சூத்திரத்தில் உரைக்கப்படும்.

பூர்வ பட்சி — விஸ்வதேவனுக்கும் அமிட்சா — யாகத்தில் கொடுக்கும் ஒருவித உணவு. வாஜி·தேவனுக்கு வாஜி — அது ஒரு உணவு என்ற வாக்கியத்தில் உருவ பேதம் கரும பேதத்திற்குக் காரணம் என்று கூறப்பட்டிருக் கின்றது.

சில கிளைகளை யோதுபவர்கள், பஞ்சாக்னி வித்தை யில் ஆருவது அக்னியைும் சொல்லுகின்றனர். சிலர் ஐந்து மட்டும் அருளியிருக்கின்றனர். இது போல் பிராண சம்வாத இடத்தில், சிலர் வீரியமில்லாமல் வாக்கு ஐந்தென்றும், வீரியத்தோடு வாக்கு ஆறென்றும் சொல்லியுள்ளனர். இதனுல் ஒவ்வொரு வேதாந்தங்களிலும் உபாசனை வேறு வேறு என்றனர். எதிரி—வாதி அஃது பொருந்தாது.

ஏனெனின், அந்தந்த வேதாந்தங்களில் அந்தந்த உபாசனையே பொருந்தும். சோதநாதி அவிசேஷாத், என்று ஆசாரியாள் அருளியிருக்கின்றனர். சோதனு — புருஷ முயற்சி. எல்லா இடங்களிலும் 'ஜுஹ்யாத்' என்பது பொதுவாக உள்ளது. இந்நியாயப்படி விக்ஞானம் ஒன்றென்பது உறுதி.

*அவதாரிகை.*

இங்கும் சில விஷயங்களை விவாதித்து அதற்குப் பரிகார ரூபமாக சூத்திரம் :-

4 3 1

**ஸூ. பேதாந்நேதி சேந்நைகஸ்யாமபி** 3—3—2

4

பேதாத், நேதி, சேத், ந, ஏகஸ்யாம், அபி, என்று பிரிக்கவும்.

ப. உ. இதிசேத் = இவ்வாறு சொல்லுமிடத்து.
3 4
பேதாத் = திரவ்யம் தேவதை இவைகளின் பேதத்தால் யாகமும் வேற்றுமையாகக் காணப்படுகிறது. அது போல அறி பொருள் வேற்றுமையால் (அறிவும்) உபாசனையும் வேற்றுமையாகின்றது. ந = அஃது பொருந்தாது. ஏனெனின், ஏகஸ்யாமபி = ஒரே உபாசனையிலும் குண பேதங்கள் காணப்படுகின்றன.

வி. உ. வாஜ சநேயி உபநிடதங்களை யோதுகின்றவர்கள் பஞ்சாக்னி வித்தையை சொல்லுமிடத்து ஆருவது அக்னியைக் கூறியிருக்கின்றனர்கள். சந்தோகர்கள் ஐந்தென்றே அறைந்திருக்கின்றனர். இங்ஙனம் ஐந்தென்றும், ஆறென்றும் அருளியிருக்க, எவருடைய மதத்தில் அஃது குணமோ, எவருடைய மதத்தில் அஃது குணமில்லையோ, இவையிரண்டிற்கும் ஏக விக்ஞானம் எப்படிப் பொருந்தும்?

இம்மாதிரி பிராணனைப் பற்றி விசாரிக்குமிடத்தும், சிறந்த பிராணனிலிருந்து அந்நிய வாக்கு, கண், காது, மனம் இந்நான்கையும் சந்தோகர்கள் கூறுகின்றனர். "ரேதோவை பிரஜாபதி:" என்று மொழிந்து வீரியத்தை

யும் சேர்த்து வாஜ சநேயிகள் ஐந்தென்று அருளுகின்றனர்.

''ரேதோவை யிரஜாபதி: பிரஜாயதே ஹ்பிரஜ்யா பசுபிர்[4]

ய ஏவம் வேத[4]'' ரேதோவை பிரஜாபதி: = வீரியந்தான் பிரஜாபதி:. ய: = எவனொருவன் ஏவம் வேத = இந்த மாதிரி அறிகிறனே, அவன் பிரஜயா = புத்திர பாக்கியத் தோடும், பசுபி: = தனதான்யங்களோடும். ஜாயதே = உண்டாகிருனென்பது மந்திரத்தின் கருத்து. பிரு. உ. (6-1-6)

ஆவாப = விடுவது. உத்வாப = எடுப்பது என்ற பேதத்தால் வேத்ய பேத முண்டாகிறது. எங்ஙனம் திரவ்ய தேவதை பேதத்தால் யாகம் பேதமாகின்றதோ அது போலறிக. சி. அங்ஙனமாயினும் குற்றமொன்றுமில்லை. ஏனெனின் ஒரு உபாசனையிலும் குண பேதங்கள் பொருந்தும். அக்னி ஆறெனபது பொருந்தாது. வாஜ சநேயி, சாந் சாந்தோக்யம் இரண்டிலும் அக்னியென்னும் ஞானத்தால் உபாசனையில் பேதமுண்டாக மாட்டாது. அதிராத்திரம் என் பது ஒரு யாகம். அதில் ஷோடஸீ என்பது ஒரு பாத்திரம். அதை யெடுத்தாலும் எடுக்காமல் போனலும் அந்த யாகத் திற்குப் பேதம் உண்டாவதில்லை. அக்னி ஐந்தென்பதில் ஐயங் கொள்ளலாகாது. ஐந்தென்னும் தொகை உபாசனை நிமித்தமாகக் கற்பனை செய்யப்பட்டிருக்கிறது. அது அநு வாதரூபம். விதிரூபமன்று. எனவே உபாசனையில் பேதமன்றென்பது தெளிவு. சூ. 2,

## அவதாரிகை.

இன்னும் இதைப் பற்றிப் பேசப்படுகிறது. அதர்வண வேதிகள் உபாசனைக்காக சிரோ விரதம் — சிரசில் நெருப் பைத் தூக்கி சும்பப்து அவர்கள் மரபு. அதற்கு சிரோ விரத மென்றுப் பெயர். அதனாலும் உபாசனையில் பேதம் இல்லை யென்பதற்காக சூத்திரம்.

**ஸூ ஸ்வா[4]த்யாயஸ்ய ததாத்[2]வேநம: ஹி சமாசாரே[1] அதி காராச்ச சவவச்ச தந்நியம் 3—3—3**

ஸ்வாத்யாயஸ்ய, ததாத்வேந, ஹி, சமாசா[1]ரே, [4]அதிகாராத், ச, சவவத், தந்நியம: என்று பிபுக்க்ஷிம்.

ப. உ. ஸ்வாத்யாயஸ்ய=இந்த சிரோ விரதத்தைப் படிக்கின்ற மாணவர்க்கு உரிய தருமமாகும், வித்தையின் தருமமல்ல. ஹி = ஏனெனின், சமாசாரே = வேத விரதத் தைப் பற்றி உபதேசிக்கப் பட்டிருக்கின்றது. ததாத் வேந = அஃது ஸ்வாத்யாயத்தின் தரும ரூபமாகச் சாற்றப் பட்டிருக் கின்றது. அதிகாராத் = ''நைதத் அசீரண விரதோ [4]அதீதே'' இஃது அதற்குப் பிரகரணம். ச = இம்மாதிரி. சவவத் = யாகத்திற்குச் சமானம். தந்நியம: இஃது அதர் வண வேதத்தைப் படிப்பவர்களின் நியமமாகும்.

வி. உ. சிரோ விரதம், அதர்வணத்தைக் கற்கின்ற வர்க்கு உடன்பாடு. சாந்தோக்கியத்தைப் படிப்பவர்க்கன்று. இதனல் பேதமென்று பூர்வபட்சி சொன்னதை இங்கு வாதி கண்டிக்கிறுர். இந்நியமம் கல்விப் பயில்வதற்காக, உபா சனைக்காக அன்று. இது எங்ஙனந் தெரிகிறதென்பாயாகில், இந்த மாதிரி அத்யயன ரூப தருமத்திற்காக ஆசாரத்தை அருளும் வேத விரதத்தை விதிக்கும் சூத்திரத்தில் கூறி யுள்ளன. இவ்வாறு அதர்வண வேதத்தைப் படிப்பவர்கள் அருளியுள்ளனர். அவர்கள் தரும் மொழிகள் ''நைதத் அ'சீர்ண விரதோ [4]அதீதே'' சிரோ விரதத்தைக் கொள்ளாத மக்கள் அதர்வண வேதத்தைப் படிக்க இயலாது என்று பகர்கின்றனர். இதில் வருகின்ற 'ஏதத்' சப்தத்தாலும்,

அத்யயன மென்னும் சொல்லாலும், இஃது கல்வி பயில் வதற்கு உரிய தருமமாகும் என்று உணர்த்தப் பட்டிருக் கின்றது.

'தேஷாமேவைதாம்' எவனொருவன் முறைப்படி சிரோ விரதத்தை நடத்தி வந்தானோ, அவனுக்கு இந்த பிரஹ்ம வித்தையைச் சொல்ல வேண்டும் என்று பிரஹ்ம வித்தை யைக் கேட்பது என்றதால் வித்தை யொன்றென்று நிறுவப் படுகிறது. ஆகலின் எல்லா கிளைகளிலும் பிரஹ்ம வித்தை யொன்றுதான்.

'சவவச்ச' இஃது எடுத்துக்காட்டைக் குறிக்கிறது. சௌரிய ஆதி ஏழு ஓமத்திற்கு மற்றைய மறைகளில் 3 உரைத்த மூன்று வித அக்னி — தக்ஷிணாக்னி, கார்ஹபத்ய அக்னி, ஆஹ்வினீய அக்னி. இவைகளோடு கூடிய தொடர்பு இல்லாததாலும், அதர்வணத்தில் சொன்ன ஏகரிஷி என்னும் பெயருடைய நெருப்புடன் கூடி தொடர்பு உண்டானதாலும் இந்த அவனங்கள் அதர்வணிகளுக்குத் தான் என்று உறுதி செய்யப் பெற்றிருக்கின்றது. இம் மாதிரி தருமம் ஸ்வாத் யாயத்திற்காக. எனவே 'ஏதாம்' என்றது பிரஹ்ம வித்யாம், என்று பரிசீலித்திருக்கிறது. பிரஹ்ம வித்தையைப் பற்றிய அவனமும் ஆதர்வணிகர்களுக்காகத்தான். ஆகவே வித்யா ஒன்றென்பது உறுதி.

வேதங்களும் உபாசனை. அல்லது வித்தை யொன் றென்பதை யுணர்த்துகின்றன:- 'சர்வே வேதா... எல்லா வேதங்களும் எந்த பொருளை யறிவிக்கின்றனவோ, இம் மாதிரி வாக்கியங்களால் வித்தை வேதாந்தத்தில் ஒன்றென்று உணர்த்தப் பெற்றிருக்கிறது. 'பேத தர்சனம் பிறவிக்குக் காரணம்'' என்று சங்கர சரிதாமிர்தத்தில் பேதத்தை நிந்தித்திருக்கிறது. இதனாலும் வித்தை யொன்றென்பது உறுதி. சூ. 3,

அவதாரிகை.

கூறிய பொருளை சீரிய முறையில் செப்புவதற்காக அடுத்த சூத்திரம் :- செப்புதல் — சொல்லுதல்.

## 3 1
## தூ· தர்ஸயதிச 3—3—4

ப.உ. மேலும் 'சர்வே வேதா:' இந்த மாதிரி எல்லா வேதாந்தங்களிலும், வித்தையொன்றென்று த3ர்ஸ யதி = அறிவிக்கின்றது.

வி. உ. 'வே3த்யைகத்வ உபதே3ஸாத்' என்கின்றது சங்கர பாஷ்யம். ''சர்வே வே3தா ய3த்பத3ம் ஆமநந்தி'' க. உ. (2-15) ரிக்கு முதலிய நான்கு மறைகளும் யத் ப3தம் = பிரஹ்ம பதத்தை. ஆமநந்தி = அருளுகின்றன என்பது வேதப் பொருள். ''ஏதம் ஹி யேவ ப3ஹ்1ருச் மஹ2தியுத்தே மீமாஸ3ந்த ஏதம் அக்4நெள அத்வர்ய ஏதம் மஹ2ாவிரதே ச2ந்3தோ3கார என்று மொழிந்திருக்கிறது. ஏதம் = இம்மாதிரி இதைப் பற்றி. ப3ஹ்1ரிச: = ரிக்வேதி, மஹ2ான் உக்தத்தில் — (உக்2தம் — பிராணன்.) ஆராய்கின் றனர். என்ன ஆராய்கின்றனர். — அத்4வரியுரென்பவர் அக்னியிலும், சந்தோகர் இதை மகா விரதத்திலும் விசாரஞ் செய்கின்றனர்.

இவை நீங்கலாக ''மஹ3த் ப4யம் வஜ்ர முத்3யதம்'' க.உ. (6-2) அந்த பிரஹ்மம் மிகுந்த பயங்கர வடிவ

ஆயுதத்தை கரத்தில் வைத்திருக்கிறது என்று கடவல்லியில் கழறப் பட்டிருக்கிறது. தைத்திரீயத்தில் பேத தரிசனம் நிந்தைக்குக் காரணமென்று பரிசீலிக்கப் பெற்றிருக்கிறது.

3 3
அஃது:- யதா ஹி யேவ ஏஷ ஏதஸ்மின் உதரமந்தரம் குரு
2 4 2 4 3
தே, அத தஸ்ய பயம் பவதி தத்வேந பயம் விது ஷோ
3
அமந் வாநஸ்ய" தை.உ. (2-7-1) யதா ஹி யேவ ஏஷ = எப்பொழுது இந்த அக்ஞாநி. ஏதஸ்மிந் = இந்த தன்னந்
3
தனியான ஆன்மாவில். உதரம் அந்தரங் குருதே = சிறிதள வேனும் பேதம் — ஆன்மா வேறு அதனினின்று நான் வேறு என்று எவன் பார்க்கிறானோ. அவனுக்கு அச்ச முண்டாகி றது. அந்த ஆன்மா, பேத தர்சி அறிஞனுக்கு பயத்திற்கு
1
நிமித்தமாக இருக்கின்றது. இவ்வாறு பேத தரிசனம் நிந் தைக்குக் காரணமென்று தைத்திரீயத்தில் பேசப் பெற்றிருக் கிறது.

மேலும், யஸ்து ஏதமேவம் பிராதேஸ மாத்திரம்
4
அபிவிமானம் ஆத்மானம் வைஸ்வாநரம் உபாஸ்தே" சா.உ. (5-18-1) என்று இயம்பப் பெற்றிருக்கிறது. மன்னன் அஸ்வபதி உத்தாலகர் சம் வாதத்தில், அரசன் — ய: =
3
எவன். ஏதம் = இந்த வைஸ்வானர ஆன்மாவை. பிராதேஸ
4
மாத்திரம் = அபிவிமானம் = இதுதான் நான் என்னும் அபி மானத்திற்கு விஷயமான ஆன்மாவை, வைஸ்வானரன் என்று. உபாஸ்தே = வழிபடுகின்றானோ, அவன், எல்லா உலகங்களிலும் எல்லாவுயிர்களிலும் அன்னத்தை யுண்கிறான் என்று அஸ்வபதி யென்னும் வேந்தன் உத்தாலகர்க்கு ஓதி னன் என்பது சுருதிப் பொருள்.

இவ்வாறு இங்குச் சிந்திக்கப் படுகிறது. இம்மாதிரி எல்லா உபநிடதங்களிலும் உபாசனை ஒன்றென்று உணரப்படுகின்றன. சூ. 4,

4
2- உபசம்ஹார அதிகரணம்.

அவதாரிகை.

வருகின்ற சூத்திரம் பிரயோஜன சூத்திரமென்று பெயர்.

4 3 4 1
**சூ. உபசம்ஹாரோ அர்த்தாபேதாத் விதிசேஷவத் சமாநேச**
**3—3—5**

4 3 4
உபசம்ஹார அர்த்தா பேதாத், விதி சேஷவத், சமா
1
நேச என்று பிரிக்கவும்.

4
ப.உ. விதி சேஷவத் = எங்ஙனம் எல்லா இடங்களிலும் ஹவனங்கள் ஒன்ருனதால் அதனுடைய மிஞ்சிய குணங்களும் ஒன்ருகி விடுகின்றனவோ, அவ்வாறு, சமாநே = உபாசனையிலும், குணங்களையும் ஒடுக்கிக் கொள்ள
2 4 3
வேண்டும். அர்த்தா பேதாத் = உபாஸ்யனுடைய குணத்திலிருந்து, அடையப்பட்ட உபாசனை வடிவ பொருளை எல்லா கிளைகளிலும் ஒன்றேதான். அபேதம் — ஒன்று.

வி.உ. சகல விக்ஞானங்களிலும், எல்லாவிதமான வேதாந்த பிரத்யயம், பிரத்யயம்—உபாசனை. சித்தியான பிறகு வேறு கிளைகளிலும், உபசம்ஹாரம்-ஒன்றென்று உணர்த்தப்படுகிறது. எதனுலோவெனின், பொருள் ஒன்று. இரு இடங்களிலும் விக்ஞானம் ஒன்றேயாம். எனவே குணங்களுக்கு உபசம்ஹாரம்—ஒடுக்கம் கொள்ளப்பட்டிருக்கிறது.

'விதி சேஷவத், என்றது சங்கர பாஷ்யம். விதிக்குச் சமானம். எங்ஙனம் விதிக்கு அங்கபூத அவன முதலிய தருமங்களுக்கு அக்னி ஹோத்ர கருமம் எல்லா இடங்களிலும் ஒன்றுதான். அதுபோல பயனைத் தருகின்ற உபாசனை களுக்கும் ஒற்றுமையிருப்பதால் அவைகளுக்கும் முடிவு ஒன்றுதான். எனவே விக்ஞானம் எங்கும் ஒன்றென்றே கொள்ள வேண்டும். இந்த பிரயோஜன சூத்திரத்திற்கு விரிவு 'சர்வாபேதாத்' என்னும் சூத்திரத் தொடக்கத்தில் துவக்கப்படும். சூ. 5.

2 4
அந்யதாத்வ அதிகரணம்

*அவதாரிகை.*

எவ்வாறு வேத்யம் ஒன்றானதால் பிரஹ்மவித்தையும் ஒன்றே, அவ்வாறு பிரஹ்மவித்தையின் அண்மையில் கூறப்பெற்ற சகுண வித்தையும் எல்லா கிளையிலும் ஒன்றுதான். முந்திய அதிகரணத்தில் வித்தையைக் கூறும் வாக்கியங்களில் பொதுவாக இருப்பதால் உபாசனை யொன்றென்று உணர்த்தி யிருக்கின்றது. இப்பொழுது இங்கு அதற்கு அபவாதஞ் செய்கின்றது.

2 3 3 3
**சூ. அந்யதாத்வம் ஸப்தாதிதி சேந்ந அவிசேஷாத் 3—3—6**

2 3 3
அந்யதாத்வம், ஸப்தாத், இதி, சேத், ந, அவி சேஷாத், என்று பிரிக்கவும்.

3 3 3 3
ப.உ. ஸப்தாத் = ''த்வம் ந உத்காய'' = இந்திரன் முதலிய சுரர்கள் வாக்கு தேவதையை யழைத்து, ''ஏ வாக்கே! அசுரர்களை வென்று நாங்கள் வெற்றி பெற நீ,

3 3
உத்கானம் செய்வாயாக!'' வென்று கூறினர். ''தம்
3 2
உத்கீதம் உபாசாஞ்சக்ரிரே'' இம்மாதிரி உத்கீத உபாசனம்
2
செய்தனர் என்ற மறைமொழியால். அந்யதாத்வம் = உபாசனையின் பேதங் காணப்படுகின்றது. இதிசேத் = இவ்வாறு சொன்னால். ந = அஃது பொருந்தாது. ஏனெனின், அவிசேஷாத் மறைகளின் விருப்பத்தில் விசேஷம் ஒன்றுமில்லை. ஆகையால் வித்தையில் வேற்றுமையில்லை.

1 3
வி.உ. வாஜசநேயி உபநிடதத்தில், ''தேஹ தேவா ஊச்சு:'' தே—தேவர்கள். ஊச்சு: = சொன்னார்கள். என்ன சொன்னார்கள்? ஹந்த = ஆச்சரியம். அசுரான் =
3 2
அசுரர்களை ''யக்ஞே = யாகத்தில். உத்கீதேன = உத்கீதத்தினல், அத்யயாம் இதி=வெல்லுவோமென்று சொன்னார்கள் என்று கூட்டுக. பி.ரு-உ. (1—3—1) ''தேஹவாசம்
3 3
ஊச்சு: த்வம் ந உத்காய'' பி.ரு.-உ. (1—3—2) இதற்குப் பொருள் முன் மொழியப்பட்டிருக்கிறது.

வாக்கு மிக நல்லதென்று கூறிற்று. இப்படித் தொடங்கி, வாக்கு முதலிய அமுக்யப் பிராணன் அசுரருடைய பாவத்தால் பீடிக்கப்பட்டன, என்று நிந்தை செய்து, பிறகு முக்கிய பிராணனிடம், தேவர்கள் எங்கள் நிமித்தம் உத்கான கருமத்தைச் செய் என்று உரைத்தனர். மிக நன்றென்று பிராணன் கூறி அவர்களுக்காக உத்கான கருமத்தைச் செய்தது. இவ்வாறு முக்கிய பிராணனை யொப்புக் கொள்கின்றனர். அதுபோல சாந்தோக்கியத்திலும் மேலே கூறிய முறை போல கூறியிருக்கிறது. சுயநலத்தின் அழுந்தி இந்திரியாதிகள் பாவத்தால் பீடிக்கப் பெற்று துன்புற்றன வென்று நிந்தையும், பிராணன் சுயநலமில்லாமல், அசுர

பாவத்தால் பீடிக்கப் பெருமையின் அதனை வந்தித்தும் இருக்கின்றன.

பிருஹதாரண்ணியத்திலும், சாந்தோக்கியத்திலும் ஒரே மாதிரி பிராணனை வாழ்த்தியிருக்கின்றது. இதனல் பிராண வித்தையை விதித்திருக்கின்றன, என்பது தெளிவாகின்றது. இங்கு முன்னே மாதிரி ஐயம் எழுகின்றது. என்ன ஐயம்? வித்தை வேறு வேருக உள்ளதா அல்லது ஒன்ரு என்று. உன்னுடைய நிலையென்ன? முந்திய நியாயம் போல் வித்தை யொன்று. இதுதான் என்னிலை.

ஆனல் உபக்ரமத்தின் வேற்றுமையால் வித்தையின் வேற்றுமை காணப்படுகிறது. உபக்ரமம்—துவக்கம். எல்லா இடங்களிலும், சாமாந்யமாக கூறப்பட்டிருக்கிறது. எவ்வாறு, சுரர் அசுரர்களுடைய யுத்தத்தில், அசுரர்களை வெல்லும் பொருட்டு சம்வாத ரூபம் உத்கானம் உபந்யாசஞ் செய்யப்பட்டிருக்கிறது. இவைகளில் பொறிகளுக்கு நிந்தையும் பிராணனுக்குப் புகழும் புகலப்பட்டிருக்கிறது.

அஃதன்றியும் (பாஷாண்ம்) கல்மண்ணுங்கட்டித் திருஷ்டாந்தத்தால் பிராணனுடைய பேரும் புகழும் பராக்ரமமும், அசுரருடைய அழிவும் வாஜசநேயி, சாந்தோக்கியமென்னும் இருகிளையிலும் உரைக்கப் பெற்றிருக்கிறது. ஆகையால் வித்தை ஒன்றென்பது உறுதி. சூ. 6.

அவதாரிகை.

பலவித மாறுபாடுகள் காணப்படுவதால் வித்தையொன்றென்று உரைக்க இயலாது என்பதற்கு பதில்.

**சூ. நவாபிரகரண பேதாத்பரோவரீயஸ்த்வாதிவத்** [4 3 3]
**3—3—7**

ந, வா, பிரகரண பேதாத், பரோவரீயஸ்த்வாதிவத் என்று பிரிக்கவும்.

3
ப.உ. பிரகரண பேதாத் = விஷய வேற்றுமையால். நவா வித்தையில் வேற்றுமையில்லை. பரோவரியஸ்த் வாத்திவத் = எல்லாவற்றிலும் மேலானது உத்கீத உபாசனைக் குரிய ஓங்காரமென்று உரைக்கப் பெற்றதால்.

வி.உ. இங்கு வித்தை யொன்றென்பது உறுதி. எங்ஙனம் பொருந்தும்? என்பாயாகில் பிரகரண பேதத்தால். பிரகரணத்தில் என்ன பேதம் என்பாயாகில், பூ. ''ஏஷ
3 3 2
பரோவரீயாந் உத்கீத : '' இந்த ஓங்காரம். எல்லாவற்றை யும் எண்ணும் போது பரோவரியான்—மேலானது. உத்கீதத் தை ஓங்காரத்தோடு இணைத்து சாந்தோக்கியத்தில் கூறி யிருக்கிறது. உத்கீதத்தைப் பிராணனோடு ஒப்பிட்டு பிராணனை உயர்வாக வாஜசநேயத்தில் மொழிந்திருக்-கிறது.

இரு இடத்திலும் உத்கீதத்தை யோங்காரத் தோடிணைத்து ஓங்காரத்தை உயர்வென்றும், அதை பிராணனோடு இணைத்து பிராணனை உயர்வென்றும் கூறியிருப்பதால் பிரகரண பேதத்தால் என்று பூர்வபட்சி சொன்னான். வாதி நவா—இந்த பேதத்தால் வித்தையில் வேற்றுமை வராது. வாஜசநேயி உபநிஷத்தில் பிராணன் உபாஸ்யன், சாந் தோக்கியத்தில் ஓங்காரம் உபாஸ்யம்.

சாந்தோக்கியத்தில் உத்கீதபக்திக்கு அவயவம் ஓங்காரம். வாஜசநேயில் உரைத்த உத்கீதத்திற்கு அவயவம் பிராணன். அங்கு ஓங்காரஞ் சிறந்தது. இப்பேதத்தால் வித்தையில் பேதம் வரும் என்பதற்குக் காரணமில்லை, என்பது துணிபு. சூ. 7,

அவதாரிகை.

பெயர் மாற்றத்தால் உபாசனை மாற்ற முண்டாகும் என்பாயாகில் பதில் சூத்திரம் :-

1 3 3
**சூ சம்க்ஞாதஸ் சேத்ததுக்தம் அஸ்திதுததபி 3—3—8**

சம்க்ஞாத:, சேத், தத், உக்தம், அஸ்தி, து, தத், அபி, என்று பிரிக்கவும்.

ப.உ. சேத் = சொல்லப் போனால். சம்க்ஞாத: = இரண்டிடத்திலும் பெயர் வடிவத்தில் வேருக இருப்பதால் உபாசனை வேறு என்பாயாகில். தத் = அதற்குப் பதில். உக்தம் = முந்திய சூத்திரத்தில் உரைக்கப் பெற்றிருக்
3
கிறது. அஸ்தி து ததபி = வேறு ரூபத்தில், அக்னி ஹோத்திராதி கருமம் வெளிப்படையென்பாயாகில், அதற்கும் காடக உபநிஷத்தில் கூறப்பட்டதால் அந்த கருமத்திற்கு காடக மென்று பெயர்.

வி.உ. பெயர் ஒன்ருக இருப்பதால் வித்தையும் ஒன்றென்பது உறுதி. எங்ஙனம் பொருந்துமெனின், இரண்டிடத்திலும் உத்கீத மென்னும் ஒரு சொல்லே வந்திருக்கிறது. வேற்றுமை யென்பதை முன்னமே விரட்டியிருக்கிரேும்.
1 4 3
"ந கர்சன பிதாஸ்தி" ஒரு பேதமும் இல்லையென்பது சுருதிப் பொருள். எவ்வாறு சம்வர்க்க வித்தை, முதலிய இடங்களில் கூறப்பட்டிருக்கிறதோ அது போல என்று அறிக. சூ. 8,

4
(4) வியாப்தி அதிகரணம் சூ. 9

*அவதாரிகை.*

இங்கு உத்கீதத்திற்கும், அட்சரத்திற்கும் சாமா நாதி கரண்யம் — ஒன்ருக இருப்பதால், அத்யாசம், அப வாதம், ஏகத்வம், விசேஷணம், இவைகளுக்கு தோற்றமிருப் பதால் எது சிறந்தது. என்பதற்கு சூத்திரம்.

## சூ. வ்யாப்தேஶ்ச[1] சமஞ்ஜசம் 3—3—9

வ்யாப்தே;[1], ச, சமஞ்ஜசம் என்று பிரிக்கவும்.

ப.உ. வியாப்தே: = (ரிக், யஜுர், சாமம் என்னும் இம் மூன்று வேதங்களிலும்) ஓங்காரத்தை வியாபக மென்று விளம்பப் பெற்றிருக்கிறது. இங்கு எந்த ஓங்காரத்தை வழி படவேண்டுமென்று எண்ண முதிக்கின்றதோ, அங்கு உத்கீத அவயவ ஓங்காரத்தை வழிபட வேண்டுமென்று விசேட படுத்திக் கூறியிருக்கிறது.

சமஞ்ஜசம் = இதுவே பொருத்தம். (அத:) ஆகை யால் அத்யாசமும், அபவாதமும் அகற்றப் படுகின்றன.

வி.உ. அத்யாசம் — ஒன்றை மற்றொன்ருகக் கூறு வது. கயிற்றைப் பாம்பென்பது போல. சிவலிங்கத்தில் சிவன் புத்தியும், சாளி கிராமத்தில் விஷ்ணு புத்தியும் அத்யாச மென்று அறையலாகும். இஃது விஷ்ணு ஆதி புத்தியால் விலகுவதில்லை. இஃது — அத்யாசம். அது போல் ஓங்காரத் தில் உத்கீதம் அத்யாசமா அல்லது உத்கீதத்தில் ஓங்கார புத்தி அத்யாசமா? இவண் முன் மொழிந்தது பொய்யென்று உறுதி செய்த பின்னர் பின் மொழிந்த நிச்சயம் எதுவோ அஃது அபவாத மெனப்படும்.

எங்ஙனம் தேகம், இந்திரியம், புத்தி ஆதி கூட்டங் களில் ஆத்ம புத்தி அத்யாசமோ அங்ஙனம் தத்வமசி, என்

னும் வாக்கியத்தால் எழுந்த ஞானம் அதை நீக்குவதால் அந்த ஞானம் அபவாதமெனப்படும். இந்த ஞானம், ஆத்மாவில் ஆத்ம புத்தியை வைப்பதற்குக் காரணமாகின் றது.

திசைஞானமில்லாததால் திக்கு மயக்க முண்டா கிறது. அது திசைஞானத்தால் நிவிர்த்தியாகின்றது. அதுபோல் இங்கு அட்சர ஞானத்தால் உத்கீத புத்தி ஒழிந்து போகின்றதா, அல்லது உத்கீத ஞானத்தால் அட்சரபுத்தி நிவிர்த்தியாகின்றதா வென்று ஐயம் எழுகின்றது.

ஏகத்வம்—ஒன்றென்னுந்தன்மை அபின்ன. அர்த்தத் தில் உபயோகிக்கப்படுகின்ற சொல். ஏகத்வம். எங்ஙனம் விப்ரன், பிராமணன், பார்ப்பார், வேதியர் என்னும் சொல் போல. விசேஷணம்—உத்கீத மென்னும் விசேஷணம் வேத வியாபி ஓங்காரமென்னும் அட்சரத்தை யடையும் பொருட் டும், உத்கீத கருமத்தை விசேடிக்கும் பொருட்டும் கொள்ளப் பட்டிருக்கிறது. நீலநிறமுள்ள தாமரையைக் கொண்டுவா என்றபடி இங்கும் உத்கீதத்தையும் ஓங்காரத்தையும் இணைத்து உபாசிக்க வேண்டும்.

வியாப்தே : சமஞ்ஜசம், பரமாத்மா எங்கும் நிறைந்த பொருள், நிறைந்த அறிவுடையது, நிறைந்த வலிமை யுடையது. ஆகையால், பிரஹ்ம சம்பந்தி வித்தையின் பெயர்கள் வேறு வேருக இருந்த போதிலும், ஒன்றென்னும் தன்மைக்கு ஊனம் வராது. ஊனம்—குற்றம். எல்லா உபாசனைகளுக்கும் உத்தேசியம் பிரஹ்மம் ஒன்றேயாம். உத்தேசியம்—நாம் பெறுகின்ற பொருள். ஒவ்வொரு உப நிடதங்களிலும், ஒவ்வொரு விதமாகக் கூறிய போதிலும் பரமாத்மாவென்னும் முடிவு ஒன்றென்பது உறுதி. சூ. 9.

*அவதாரிகை.*

வித்தையின் ஒன்றென்னுந் தன்மையையும் வேறு என்னுந் தன்மையையும் விசாரிப்பதற்கு, பிரகரணம், நாமம், இவைகள் விரும்பப்படுகிறதா இல்லையா என்பதற்கு சூத்திரம் :-

4 3 4
5) சர்வாபேதாதி கர்ணம். சூ. 10

4 3
**சூ. சர்வாபேதாத் அந்யத்ரேமே 3—3—10**

சர்வாபேதாத், அந்யத் ர, இமே யென்று பிரிக்கவும்.

ப.உ. சில கிளைகளில் கூறப்பெற்ற, இமே = வசிஷ்ட்டத்வாதி குணம். அந்யத்ர = வேறு கிளைகளிலும் கொள்ளப்படுகின்றது. சர்வாபேதாத் = ஏனெனின், எல்லாகிளைகளிலும் விக்ஞானத்திற்கு அபேதம் அருளப் பெற்றிருக்கிறது.

வி.உ. வாஜசநேயி, சாந்தோக்கிய உபநிடதங்களில் பிராணனுடைய சம்வாதத்தில் சிறந்த குணங்களோடு கூடிய பிராணனை வழிபட வேண்டுமென விளம்பப்பட்டிருக்கிறது. அதில் வாக்கு, கண், காது முதலிய உறுப்புக்களும் வசிஷ்டத்வாதி குணங்களோடு கூடியதென்று உரைக்கப்பட்டிருக்கிறது. முடிவில் வாக்கு முதலிய உறுப்புக்கள் அனைத்தும் தங்களை பிராணனுக்கு அர்ப்பணித்திருக்கின்றன.

விசாரஞ் செய்து பார்க்கும் பொழுது ஆத்மா எல்லா பொருள்களோடும் அபின்னமாக இருக்கின்றது. எனவே சர்வரூபம் என்கின்றது ஆரணம். ஆதலின் அதனுடைய உண்மையை யுரைப்பதில் வேற்றுமையில்லை. ஆகையால் பெயராலும், பிரகரணத்தாலும், சொல்லாலும், பேதத்தை

நிறுவ இயலாது. எல்லாப் பெயரும் ஆன்மாவிற்குப் பொருந்தும். சகல பிரகரணங்களிலும் ஆன்மா வந்திருக்கிறபடியால். பிரகரண பேதத்தால் பேதமுண்டாவதற்கு இடமில்லை.

வர்ணனை பேதத்தாலும் பேதம் வருவதற்கில்லை. நிகில வர்ணனைகளும் ஆத்மாவைத்தான் வர்ணிக்கின்றன. நிகிலம்—எல்லாம். பிரஹ்ம வித்தைக்கு வேருக மொழியப் பட்ட வித்தைகள். எந்த வித்தைக்கு பிரஹ்மத்தைப் பற்றிப் பேச வேண்டுவதில்லையோ அந்த வித்தைகளுக்கு ஒன்றுக்கொன்று ஒற்றுமை, அல்லது வேற்றுமையை உணர்த்தும் பொருட்டு, பிரகரணம், பெயர், சொல் முதலியவை தேவைப்படுகின்றன. ஆகையால் ஒரு கிளையில் உரைக்கப் பெற்ற தருமங்களை யெல்லா கிளைகளிலும் உபசம்ஹாரஞ் செய்ய வேண்டும். உபசம்ஹாரம்—வருவித்து கொள்வது. சூ. 10,

3 3 4
(6 ஆநந்தாதி அதிகரணம். சூ. 11-13

*அவதாரிகை.*

3
''ஆநந்தோ பிரஹ்ம'' இம்மாதிரி பிரஹ்மத்தோடு இணைத்து ஒரு வேற்றுமையில் ஆனந்தத்தையும் அருளி யிருப்பதால் இந்த ஆநந்தத்வாதி குணங்கள், ஜடத்வ. துக்கத்வ, மித்யாத்வங்களை நீக்கும் பொருட்டு உரைத்திருக் கிறதென்பதற்கு சூத்திரம் :-

3 3 4
**சூ. ஆநந்தாதய : பிரதானஸ்ய 3—3—11**

3 3 4
ஆநந்தாத்ய:, பிரதானஸ்ய என்று பிரிக்கவும்.

4 3 3
பிரதாநஸ்ய = பிரஹ்மத்தின் ஆநந்தாதய: = ஆனந்தத்வாதி தருமங்கள் எல்லா இடங்களிலும் உபசம்ஹாரம் பண்ண வேண்டும். (ஏற்றுக் கொள்ள வேண்டும்) என்பது குறிப்பு.

வி.உ. ஆன்ம சொரூபத்தை அருளப்பட்ட மறைகள் பல. அவையனைத்திலும் பிரஹ்மம் ஆனந்த வடிவம், விக்ஞான வடிவம், எங்கும் நிறைந்தது, எல்லாம் ஆனது என்று அருளியிருக்கிறது. இவையனைத்தும் ஆன்மாவின் தருமங்கள். இங்கு ஐயம் எழுகின்றது. ஐயமென்ன? ஆன்மாவின் தருமங்கள் எத்தனை யிங்கு மொழியப் பட்டிருக்கின்றனவோ அத்தனையும் கொள்ள வேண்டுமா அல்லது சிலவற்றைக் கொள்ள வேண்டுமா என்பது ஐயம். வாதி. மறைகளில் விபாகஞ் செய்த போதினும் பிரதான வடிவ பிரஹ்மத்தின் தருமங்கள் எல்லாவற்றையும் கொள்ள வேண்டும். ஆனந்தாதி குணங்கள் அனைத்தும் பிரஹ்மத்திற்கு உரியவை. எனவே எல்லா இடத்திலும் எல்லா தருமங்களையும் கொள்ள வேண்டுமென்பது தான் கருத்து. என்ன காரணமென்பாயாகில், எல்லா தருமங்களோடு ஆன்மாவிற்கு அபேதம் இருக்கிறது. ''அனைவர்களும் பிரமமென்று அகமகிழ்ந்தேனம்மே'' என்கின்றது வேதாந்த ரத்னம். பொருள் வெளி. பிரதான வடிவ பிரஹ்மம் எங்கும் பின்னமன்று.

இந்த மாணக்கன் நெருப்பு, என்றால் சுடுபவன் என்று அருத்தமல்ல. பின்னை, படிப்பதில் சுறுசுறுப்பானவனென்று பொருள். இச் சுறுசுறுப்பான தருமம் அவனுக்கு வேறன்று. ''சிம்ஹோ மாணவ:, என்று சொல்லுமிடத்து மாணவன் சிங்கமென்று பொருளல்ல. பின்னை. சிங்கத்தைப் போன்ற தேஜையுடையவன் என்று தான் பொருள். இத்

தேஜ் அவனுக்கு அந்நியமா? இல்லை. அது போல ஆனந்த முதலிய தருமங்கள் ஆத்மாவிற்கு வேறன்று என்பது துணிபு.

அசத்தை யகற்றும் பொருட்டு சத்தையும், ஜடத்தை யகற்றும் பொருட்டு சித்தையும், துக்கத்தைத் துடைக்கும் பொருட்டு ஆனந்தத்தையும் அருளுகின்றன ஆரணங்கள். ஆரணம் — மறை. ஆகலின் ஆனந்த முதலிய தருமங்கள் முழுதும் பிரஹ்மத்திற்கு சொரூபமென்று எண்ண வேண்டும். சூ. 11.

*அவதாரிகை.*

அங்ஙனமாயின் பிரிய மோத ஆதி தருமங்களும் எல்லா இடங்களிலும் கொள்ள வேண்டி வருமே, ஏனெனின், தைத்திரீய உபநிடதத்தில் ஆனந்தமய ஆன்மாவிற்கு உரை கூறுமிடத்தில் = ''தஸ்ய பிரியமேவ சிர:'' = அந்த ஆனந்த வடிவ் ஆன்மாவிற்கு பிரியம் சிர: — தலையென்றும்,
3 3 3 3
மோதோ தக்ஷிண: பக்ஷ: பிரமோத உத்தர பக்ஷ:, ஆநந்த ஆத்மா பிரஹ்ம புச்சம் பிரதிஷ்ட்டா என்று தைத்திரீயம் சாற்றுகின்றது.

தைத்திரீயத்தை யோதுவது தித்திப்லிபறவை. தன்னைப் போல பிறரையும் நினைப்பது தரணியில் மரபு. ஆனந்தமய ஆன்மாவை யப்பறவை இவ்வாறு அருளுகின்றது. தஸ்ய = அந்த ஆனந்தமய ஆன்மாவிற்கு. பிரியமே
3
வசிர: = பிரியம்—விருப்பு. அதுவே சிர: = தலை. மோதோ
3 3
தக்ஷிண: பக்ஷ: = மிகுந்த பிரியம் வலது சிறகு. பிரமோத உத்தர பக்ஷ: = மிகமிக பிரியம் இடது சிறகு. ஆனந்த ஆத்மா = ஆனந்தமே ஆன்மா — உடலுக்கு மத்திய பாகம். பிரஹ்ம புச்சம் = பிரஹ்மம் வால். பிரதிஷ்ட்டா = பிடிக்கும் இடம்.

விரும்பிய பொருளை நினைப்பது பிரியம், அதை நேரில் பார்ப்பது மோதம், அதை யநுபவிப்பது பிரமோதம் எனினும் அமையும். பிரஹ்மமே ஜீவனுக்கு ஆதாரமாயிருப்பதால், அதைப் பற்ற வேண்டுமென்பதால் பிரதிஷ்டா என்றது சுருதி. ''பற்றுகப் பற்றற்றான் பற்றினை'' என்கின்றது குறள். எங்கும் நிறைந்த ஆன்மாவிற்கு எதனோடும் விருப்பும் வெறுப்பும் இன்மையால் பற்றுதலும் விடுதலும் இல்லை. எனவே ஆன்மா பற்றற்றான் எனப்படுகிறது. அவ்வகை ஆன்மாவைப் பற்றுகிற பொழுதில் அகில பற்றுகளும் அற்று விடுகின்றன. அதனால் பற்றற்றான் பற்றினைப் பற்றுக என்றார் தமிழ் பாவலர். இக்கருத்தை வைத்துதான் பி ர ஹ்ம புச்சம் பிரதிஷ்டா என்றது சுருதி. இதற்குப் பதில் சூத்திரம்:-

3 1
**ஸூ. ப்ரிய சிரஸ்த்வாத் யப்ராப்திருபசய**
4 3
**அபசயௌ ஹி பேதே 3—3—12**

பிரிய, சிரஸ்த்வாதி, அப்ராப்தி; உபசய, அபசயௌ
4 3
ஹி, பேதே என்று பிரிக்கவும்.

ப.உ. (ஒரு கிளையில் கூறிய) பிரிய சிரஸ்த்வாதி அப்ராப்தி: பிரிய சிரஸ்த்வாதி தருமங்களை யெல்லா இடங்களிலும் ஏற்றுக் கொள்ள இயலாது. ஹி = ஏனெனின், பிரியம், மோதம், பிரமோதம் இவைகளும், ஆனந்தமும் ஒன்றுக் கொன்று போக்தாவை நோக்கும் பொழுது சிறுத்தலும் பெருத்தலும் புத்தியின் தருமமாகின்றன. இவை
4 3
பேதே = வேற்றுமையில்தான் உண்டாகின்றன. பிரஹ்மம் ஒன்று. ஆகையால் அதனுடைய தருமங்களாகா.

வி.உ. 'தைத்திரீயத்தில் மொழிந்த பிரியத்வாதி தருமங்கள் வேறிடத்திற்குப் பொருந்தாது. இஃது ஜீவனை

முன்னிட்டு உபசிதம்[1] — பெருத்தலும், அபசயம் சிறுத்தலும் உண்டாகின்றன. இந்தப் பெருத்தலும் சிறுத்தலும் பேத முண்டான பிறகே தோற்றக்கூடும். பேதமில்லாத நிலையில் மேலே சொன்ன நாநாத்வம் உண்டாவதற்கு நியாயமில்லை.

ஏகமேவ அத்விதீயம்[3], என்னும் மறை மொழியால் பேதமென்பது அற்பமுமில்லை. அங்ஙனமிருக்க உபசயம் அபசயமென்பது எங்ஙனம் பொருந்தும்? பொருந்தாதென்பது பொருள். மேலும் பிரியமோத முதலிய தருமங்கள் பிரஹ்மத்திற்கல்ல, பின்னை கோசத்தின் தருமங்களாம். இதை 'ஆநந்தமயோ அப்யாசாத்[1]' என்னும் சூத்திர உரையில் மொழிந்திருக்கின்றோம் என்கின்றது சங்கர பாஷ்யம்.

இந்த கற்பனை சித்தத்தைச் சேதனத்தில் வைப்பதற்காகச் செய்யப்பட்டது. ஞானத்திற்காக அல்ல. உபாசனையின் பொருட்டு பிரிய சிரஸ்த்வாதி தருமங்கள் பொருந்தும். உபாசனையில் பேதமிருக்கின்றது. உபாஸ்யம் — நாம் விரும்பும் தெய்வம் ஒன்று. எங்ஙனம் ஒரு அரசனுக்கு இரு பெண்கள் இரு மருங்கிலும் நின்று ஒருத்தி சத்திரத்தையும் — குடையையும், மற்றொருத்தி சாமரத்தையும் பிடித்து வீசிக்கொண்டும் இருக்கிறார்களோ அதுபோல் உபாசனை வேறாக இருந்தாலும் உபாஸ்யம் (வழிபடும் தெய்வம்) ஒன்றென்பதில் சிறிதளவேனும் ஐயமில்லை.

உபசய[1] அபசய[1] என்னும் பேத வியவகாரம் சகுண பிரஹ்மத்திற்குப் பொருந்தும், நிற்குண பிரஹ்மத்திற்குப் பொருந்தாது. எனவே யொரு கிளையில் உரைக்கப் பெற்ற சத்யகாமத்வாதி குணங்கள், அல்லது பிரிய சிரத்வாதி தருமங்கள் எல்லா கிளைகளுக்கும் இசையாது. ஒவ்வா தென்பது உறுதி. சூ. 12.

அவதாரிகை.

கூறிய பொருளை சீரிய முறையில் விளக்குவதற்கு அந்நிய சூத்திரம் :-

## ஸூ. இதரேது அர்த்த ஸாமாந்யாத் 3—3—13

இதரே, து, அர்த்தஸாமாந்யாத் என்று பிரிக்கவும்.

ப.உ. இதரேது = ஆனந்தாதி தருமங்களை, யெல்லா இடங்களிலும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனின், அர்த்தஸாமாந்யாத் = உரைக்கப் பெற்ற பிரஹ்மம், எல்லா இடங்களிலும் ஒன்ருயிருப்பதால்.

வி.உ. து என்னும் சொல் ஆட்சேபத்தை யகற்று கின்றது. உபநிடதங்களுக்கு விருப்பமென்ன? ஒன்ருகிய பிரஹ்மத்தை யுரைப்பதில் தான் விருப்பம். அதற்காக ஆங்காங்கு ஆன்மாவை சத்தென்றும் சித்தென்றும், ஆனந்த மென்றும் அருளியிருக்கின்றன. இந்த தருமங்களெல்லாம் ஆன்ம ஞானத்தை மக்களுள்ளத்தில் உண்டாக்க வேண்டு மென்ற ஒரே நோக்குடன் ஆன்மாவிற்குப் பல இலக்கணங் கள் பகரப் பெற்றிருக்கின்றன. எங்கும் எல்லா தருமங்களும் பிரஹ்மத்தை யறிவிக்கும் பொருட்டென்பது உறுதி. சூ.13,

### (7) ஆத்யாநாதிகரணம். சூ. 14-85

அவதாரிகை.

அர்த்தமுதலியவைகளிலும் (பரத்வம்) மேலான தன்மை யொப்புக் கொள்ள வேண்டும் என்பதற்குப் பதில் சூத்திரம்.

## ஸூ. அத்யாநாய ப்ரயோஜநாபாவாத் 3—3—14

ஆத்யாநாய, பிரயோநாபாவாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆத்[4]யாநாய = தியான்த்தின் நிமித்தமாகவும் (பிரஹ்ம ஞானத்தின் பொருட்டாகவும்) பரத்வம் கூறப் பெற்றிருக்கிறது. அதனுல் பிரயோஜநாபாவாத் = வேறு பயனென்றுமில்லே.

வி.உ. கடோப நிஷத்தில் ''இந்திரியேப்[4]ய: பராஹ் யர்த்தா அர்த்தேப்[4]யஸ்ச ப[1]ரம்மந: மநஸஸ்து பராபுத்[4]தி: (1-3-10)'' என்று மொழிந்திருக்கிறது. பொறிகளேப் பார்க்கிலும் வி ஷ ய ங் க ள் மேலென்றும், அர்த்தங்களே நோக்கும் பொழுது மனம் மேலென்றும், மனதை யெண்ணும் போது புத்தி பெரிதென்றும், மொழிந்திருக்கிறது. க.உ. இவண் ஐயம் உண்டாகிறது. இவண் — இங்கு. என்ன ஐயம்? அர்த்த முதல் மகதத்துவம் வரை எல்லாம் மேலானதா அல்லது ஆன்மாவே மேலானதா வென்று சந்தேஹமுண்டா கிறது. இக்கேள்வி யெதற்காக எழுகின்றது? அனேத்தையும் (பரம்) மேலென்று மொழிந்திருப்பதால் என்க.

எல்லாவற்றையும் பரம் என்று பொருள் கொண்டால் வாக்கியத்தில் வேற்றுமைக் காணப்படும் என்று சித்தாந்தி கேட்பாயாகில் அஃது பொருந்தாது. ஏனெனின், அநேக வாக்கியங்கள் பொருந்துவதால் குற்றமொன்றுமில்லே. எனவே மந்திரத்தில் வந்த ஒவ்வொரு பதத்திற்கும் பரத்வம் பொருந்தும் என்பது பூர்வ பட்சம். கி. இவ்வாறு உரைத்த பின்னர் சமாதானம் — மேற்கூறிய எல்லாவற்றையும் பார்க் கிலும் ஆன்மா ஒன்றே (பரம்) மேலானது. அதைத் தான் சுருதியும் அவ்வாறு மொழிகின்றது. ''மஹத: பரம் அவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ:பர': என்கின்றது. சமஷ்டி புத்திதத்வத்திலிருந்து அவ்யக்தம் — பிரகிருதி பரம், பிரகிருதியிலிருந்து புருஷன் பரன் — மேலானவன் என்றும், அதற்கு மேல் ஒருபரம் இல்லேயென்றும் மறை யருளுகின்றது.

இங்ஙனமிருக்க, எல்லாவற்றையும் பரம் என்று பகர்வதால் பயனென்றுமில்லை. ''ஸாகாஷ்டாஸ பராகதி: யென்ற மறைக்கும் முரணாகும். ஆகையால் புருஷவடிவ ஆன்மாவே மேலானதென்பது மறை முடிவு. மற்றவைகளைப் பரத்வமாக ஏற்றுக் கொள்வதால் பயன் ஒன்றையும் காணோம், சுருதிகளில் கேட்கவுமில்லை.

ஆன்மாவை[1] பரமென்று அறிவதால்[2] முக்திக் கிட்டுகிறது. ''நிசாய்ய தன் மிருத்யு முகாத் பிரமுச்யதே'' என்கின்றது சுருதி. ஆத்மாவை தனது சொருபமாக நன்றாக அறிந்தவன் மரணத்திலிருந்து விடுபடுகிறானென்று மறைமொழிகின்றது. வரம்பு கடந்த பரத்வம் மனம் ஆன்மாவில் கவியும் பொருட்டு.

பொறிகளைச் சிந்திக்கின்ற மனிதன் பத்து மன்வந்தரம் நிலைத்திருக்கின்றான், என்றும் பூதங்களை விசாரிக்கின்ற மனிதன் நூறாயிர வருடம் வசிக்கின்றான் என்றும், புத்தியை எண்ணிப் பார்க்கின்றவன் பத்து நூறாயிர வருடம் இருக்கிறானென்றும் அவ்யக்த தத்வத்தை ஆராய்பவன் இலக்ஷவருடம் வாழ்கிறானென்றும், ஆன்மாவை ஆராய்பவர்கள் அவர்கள் வாழ்க்கைக்கு அளவேயில்லை யென்றுங் கூறியிருக்கிறது. இவ்வாறு விஷ்ணு புராணத்தில் விளம்பியிருக்கிறது. இதனாலும் ஆன்மா பரம் என்பது இனிது புலனாம். பிரவாகரூபமாக மொழிந்தது தத்வ ஞானத்திற்காக. பிரவாகம் — ஒன்றன் பின் ஒன்று. சூ. 14,

அவதாரிகை.

''தத்[3] விஷ்ணோ: பரமம் பதம்[3]'' ''புருஷாந் நபரம்

கிஞ்சித்'' என்ற வாக்கியங்களாலும் உணரலாம் என்பதற்கு சூத்திரம்.

3 3
## ஸூ. ஆத்ம சப்தாச்ச 3—3—15

3 3
ஆத்ம சப்தாத், ச, என்று பிரிக்கவும்.

3 3
ப.உ. ஆத்ம சப்தாத் = (மறைகளில்) ஆன்மா என்று கேட்கப் படுகிறது. ஆகையால் இந்த வாக்கியமெல்லாம் ஆன்மாவை முக்கியமாகக் கொண்டிருக்கின்றன. 'ஏஷ ஸ.வேஷு' என்ற சுருதியில் ஆத்மா என்னுஞ் சொல் அருளப் பெற்றிருக்கிறது.

வி.உ கீழே சொல்லப் போகிற விதத்தாலும் பொறி அர்த்தம், மனம், இந்த பிரவாகத்திற்கு ஆன்மஞானம், ப்ரயோஜனம் அன்றி வேறு வொன்றுமில்லை யென்பது தெளி
4 3 3
வாகின்றது. ஏனெனின், "ஏஷ சர்வேஷு பூதேஷு கூடோத்
3 3 4
மா நபிரகாசதே த்ருஸ்யதே து அக்ரயா புத்த்யா சூட்ச்
3 4
மயா சூட்சம தரிசிபி:" க.உ. 3-12 ஏஷ ஆத்மா = இந்த
4 3 3
ஆன்மா. சர்வேஷு பூதேஷு கூட: = சகல உடல்களிலும் மறைந்திருக்கிறது. (ஆகையால்) ந பிரகாசதே = வெளிப்
3
படையாகத் தெரிகிறதில்லை. த்ருஸ்யதே = தெரியவும் செய்
3 4
கிறது. யாருக்கு? சூட்சம தரிசிபி: = நுணுக்கமான அறிவு வுடையவர்களுக்கு. ஞானிகளுக்கு என்றவாறு. எதனுல்
3 4
அவர்கள் அறிகிருர்கள்? அக்ர்யா புத்யா சூட்சமயா = கூர்மை யான நுண்ணிய அறிவால் என்றவாறு தத்துவ ஞானிகள் கூர்மையான மதியைக்கொண்டு அறிகிருர்கள் என்பது மறை

யின் திரண்ட பொருள். இங்கு ஆன்மா வென்ற சொல் வந்திருக்கிறது. ஆகலின் ஈண்டு ஆன்மா வென்ற சொல் புருஷரூப பரமாத்மாவைக் குறிக்கின்றது.

இதனுல் புருஷனுக்கு அந்நியமானவை யனைத்தும் அனுத்மா எனப்படுகின்றன. ஆத்மாவில் சாதாரண புத்தி நுழையாது என்றும், நுணுக்கமான உணர்வுதான் அதைப் பெறுமென்றும், அதனுடைய ஞானத்திற்காகப் பொறி புலன்களை யடக்க வேண்டுமென்றும் ஆரணத்தில் அருளி யிருக்கின்றது. எனவே ஆத்யானத்தை விதிக்கின்றது. இதற்கு விரிவுரை 'ஆநுமானிக்க மென்னும்' சூத்திர உரை யில் காணலாம்.

இம்மாதிரி மறை மொழிகளால் வேறு வேறு கருத்துக்களையும், வேறு வேறு முறைகளையும் ஆன்மாவில் அறிவிக்கின்றன. வேறு பொருள்களில் இல்லை. ''ஸோஅத்[4]வந: பாரமாப்நோதி தத்[3] விஷ்ணோ: பரமம்பத[3]ம்'' க.உ. (3-9)
ஸோஅத்[4]வன: = இந்த சம்சார வழியிலிருந்து கரையேறி பாரம் ஆப்நோதி தத் விஷ்ணோ: பரமம்பத[3]ம் = எங்கும் நிறைந்து தங்கியிருக்கும் முக்தியென்னும் சீரிய நிலையைப் பெறுகிருன் என்பது மறையின் பொருள். பிறவிப் பெருங் கடலிலிருந்து கரையேறி விஷ்ணோ: பரமம்பதம்=விஷ்ணு வின் பரமபதத்தை அடைகிருன் என்பது கருத்து. அவா எழுந்த பொழுதில் பொறி புலன்களைத் தாண்டித் தாண்டி விஷ்ணு பதமென்னும் முக்தியை அடைந்தான் என்கின்றது சுருதி. சூ. 15,

18, ஆத்ம க்[3]ருஹீத்[4]யதி கரணம். சூ. 15-16

அவதாரிகை.

ஆன்மாவென்னும் சொல் பிரஹ்மத்தையும் குறிக்கும் ஹிரண்ய கருப்பனையும் குறிக்கும். ஆகையால் இங்கு ஐய முண்டாகிறது. பிரஹ்மத்தைக் குறிக்காது என்பதற்குப் பதில் சூத்திரம்:-

**சூ. ஆத்மக்ருஹீதி இதரவத் உத்தராத் 3—3—16**

ஆத்மக்ருஹீதி:, இதரவத், உத்தராத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆத்மக்ருஹீதி: = ஆன்மா வென்னுஞ் சொல்லால் பரமாத்மா கொள்ளப் படுகின்றது. வேறு பொருள் அல்ல. ஏனெனின், இதரவத் — வேறு வஸ்துவைப் போல. உத்தராத் = மேலே வருகிற வாக்கிய விசேஷணங்களால் ஆன்மா என்பதால் பரமாத்மா வென்று கொள்ள வேண்டும்.

வி.உ. ஐதரேய உபநிடதத்தில் ''ஆத்மாவா இதம் ஏகஏவ அக்ர ஆசீத் ''நாந்யத்கிஞ்சந மிஷத்'' ச ஈட்சத லோகாந்நு சிருஜா இதி' என்று மொழிந்திருக்கிறது. ஐ.உ. (1-1) இதம் = நாம ரூப கரும வடிவ உலகம். ஆத்மா = ஆன்மாவாக இருந்தது. எப்போது? படைப்புக்கு முன்னம், நகிஞ்சந மிஷத் = ஆன்மாவைத் தவிர செயல் படும் பொருள் ஒன்றுமில்லை. ச ஈட்சத = அஃது ஆலோசனை செய்தது. அஃது — ஆன்மா, என்ன ஆலோசனை? உயிர்களையும் உலகங்களையும் படைக்க வேண்டும் என எண்ணியது. ச இமான் லோகான் அசிருஜத = அந்த ஆன்மா. அம்ப:- திவி லோகத்தையும், மரீச்சி — அந்தரிட்ச உலகத்தையும், மரம் — மண்ணுலகத்தையும், ஆப: = பாதாலத்தையும் படைத்த தென்று பகர்கின்றது. சுருதி.

எதிரி:- இவ்வாக்கியத்தில் ஐயமெழுகின்றது. இங்கு ஆன்மா என்று சொன்னது பரமாத்மாவையா அல்லது வேறு ஒரு பொருளேயா? இங்கு ஆன்மா வென்று சொன்னது பரமாத்மாவைக் குறிக்காது. ஏனெனின், அந்வயம் அவ்வாறு பார்க்கும் பொழுதில் தெரிகிறது. வாதி, வாக்யாந்வயம் பரமாத்மாவிற்கு முற்றிலும் பொருத்தமாகக் காணப்படுகிறதே, என்ன காரணம் என்பாயாகில், படைப்பிற்கு முன்னம் ஆத்மா ஒன்றென்று உறுதிப் படுத்தப் பட்டிருக்கிறது. மேலும் எண்ணி, பார்த்து, படைத்ததாகவும் சுருதி சொல்லியிருக்கிறது. எதிரி — இஃது பொருந்தாது. ஏனெனின்? பரமாத்மாவை இங்கு கொள்ளின் உலகத்தை படைத்ததாக உரைத்திருக்கிறது. இறைவனை சிருஷ்டிப்பவனுக ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில் உலக உற்பத்திக்கு முன்பதாக பூத உற்பத்தியைச் சொல்லியிருக்க வேண்டும். அவ்வாறு அருளக்காணோம். உலகமென்றது? பூதங்களுடைய வடிவ விசேஷந்தான். குடம் மண்ணின் வடிவம் போல. அதுபோல 4 'அதோ அம்ப:' இங்கு அம்ப என்று சொன்னது திவி லோகத்திற்கு மேலேயுள்ள உலகத்தை.

இம்மாதிரி சுருதி அம்ப ஆதிபதத்தினுல் உலகத்தைக் குறிப்பிடுகின்றது. எனவே உலக படைப்பு இறைவனைப் பற்றியுள்ள வேறு தெய்வத்தால் உண்டாயிருக்க வேண்டும். இவ்வாறு சுருதிகளிலும், ஸ்மிருதிகளிலும் தெரிய வருகிறது. இன்னும், 'ஆத்மை வேதம்' என்று அருளியதால் படைப்புக்கு முன்னம் இவ்வுலகம் புருஷ வடிவ ஒரு ஆன்மாவாக இருந்த 2 தென்று தெரிகிறது. ''சவை சரீரி பிரதம: ''என்ற வாக்கியத்தால்பிரஜாபதியைக் கொள்ள வேண்டும்.

இஃதல்லாமலும் இவ்விசித்ர படைப்புக்குக் காரணம் பிரம்மா வென்றும், பிரஜாபதி வீரியத்தைப் படைத்தாரென்றும்,

ஆன்மாவென்றும், அருளியிருக்கின்றது. பிரஜாபதி ஆன்மா, அல்லது ஹிரண்யகர்ப்பன் முதலியோர்கள் சேதனமானதால் நினைத்து, பார்த்து, படைக்க இவர்களாலும் இயலும்.
4
இன்னும் 'தாப்யோ:' படைத்தவன் — உயிர்களுக்காக பசுவைக் கொணர்ந்தான், குதிரையைக் கொணர்ந்தான், மனிதவடிவ உடலைக் கொணர்ந்தான் என்றெல்லாம் மொழிந்திருக்கிறது. இதனுல் இறைவன் நீங்கலாக பிர்ம்மா சிருஷ்டி கர்த்தா என்கின்றது பூர்வபட்சம்.

சித்தாந்தி —இது முறையன்று. ஏனெனின், இவண் ஆன்மா வென்னுஞ் சொல்லால் இறைவனைத்தான் கொள்ள வேண்டும். அந்நிய வாக்கியத்தைப் போல.அன்னிய வாக்கிய
3
மென்ன? ''தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந:'' என்ற வாக்கியம். இஃது என்ன சொல்கின்றது? இஃது ஆன்மாவிலிருந்து அகிலமு முண்டாயின என்று இயம்புகின்றது. இங்கு ஆன்ம பதத்தால் ஈசனை கொண்டிருக்கிறது.

ஆன்மா வென்னுஞ் சொல்லுக்கு முக்கிய பொருள் கிடைக்காது போகுமாயின் வேறு ஆன்மாவைக கொள்ள வேண்டுவது தான், முக்கிய ரூபமாக பரமாத்மா இருக்கும் பொழுது ஹிரண்ய கர்ப்பனை கொள்வதில் என்ன நியாய மிருக்கிறது; பூத சிருஷ்டியை சொல்லாது ஒழியினும், பூதங்களை யுண்டு பண்ணிய பிறகு உலகத்தைப் படைத்தது என்று பொருள் கொள்ள வேண்டும். இவ்வாறு கொள்ளின் குற்றம் ஒன்றும் வராது. எனவே யிங்கு ஆன்மாவென்ற சொல்லால் பரமாத்மா என்பது உறுதி. சூ. 16.

*அவதாரிகை.*

மேலே சொன்ன விஷயத்தில் எழுந்த ஐயத்தை அகற்றி சித்தாந்த பட்சத்தை மீண்டும் திடப்படுத்தும்

பொருட்டு சூத்திரம்;-

**சூ. அந்வயாத் இதி[1] சேத்ஸ்யாத் அவதா[4]ரணாத் 3—3—17**

அந்வயாத், இதி[1], சேத், ஸ்யாத், அவதா[4]ரணாத் என்று பிரிக்கவும்.

ப.உ. இதிசேத் = ஒருவேளை நீ சொல்வாயாகில். அந்வயாத் = வாக்கியங்களை விசாரிக்கும் பொழுது. பரமாத் மாவை யொப்புக் கொள்ளவில்லை யென்று கூறுவாயாகில். ஸ்யாத் = பரமாத்மாவைத் தான் கொண்டிருக்கிறது. எங்ஙனமெனின்? அவதாரணாத் = சுருதிகளில் ஆன்மாவை யொன்றென்று உறுதி செய்திருக்கிறது. எனவே இங்கு ஆன்மாவைக் கொள்ள வேண்டும்.

வி.உ. பிரதிவாதி — வாக்கிய அந்வயத்தைப் பார்க்கும் பொழுதில் இறைவனைக் குறிக்கவில்லை. அந்வயம் — பொருத்தம். ஆகையால் இறைவனைக் கொள்ளும் விஷயத்தைத் தள்ள வேண்டும். இது பிரதிவாதியின் மறுப்பு. வாதி — ஸ்யாத்—அது பொருந்தாது. எதனாலோ வெனின், அவதாரணமென்னுஞ் சொல்லால் இறைவனை யேற்றுக் கொள்ள வேண்டுமென்பது இனிது புலனாகும். "ஆத்மாவா இதம்[3] ஏகஏவ அக்ர்ஆசீத்" "பிரக்ஞானம் பிரஹ்ம" இவ்வாறு தொடங்கி முடிக்கும் பொழுதும் ஆன்மாவையும், பிரஹ்மத்தையும் இணைத்து ஒன்றென்று உரைத்திருப்பதால் அவதாரண மென்பது உறுதியை யுணர்த்துகின்றது.

இவ்வாறு பொருள் கொள்ளாவிடில் அவதாரண மென்னும் சொல் பயனற்றுப் போகும். ஐதரேயத்தில் உலக சிருஷ்டியை யோதியிருந்த போதிலும் தைத்திரியத்தில் பூத சிருஷ்டியைப் புகன்றிருக்கிறது. புகலுதல். சொல்லுதல்.

இக் கேள்விச் சாந்தோக்கியத்திலும் வந்திருக்கிறது. எங்ஙன மெனின்? ''தத்தேஜோ அசிருஜத'' என்னுஞ் சுருதி வாக்கியத்தில், அந்த சத்தென்னுந் தேவதை முதலில் நெருப்பையும் அதன் பின் நீரையும், அதன் பின்னர் நிலத்தையும் படைத்தது என்ற வாக்கியத்தில், ஐம்பூதமிருக்க மூன்று பூதம் எவ்வாறு படைத்தது என்ற கேள்விக்குப் பதில்.

தைத்திரிய முறைப்படி மேலேயுள்ள இரண்டு பூதங்களைப் படைத்த பிறகு ஏனைய மூன்று பூதங்களையும் படைத்ததென்று பொருள் கொள்ள வேண்டுமென்று ஆசாரியாள் அருளியிருக்கிறார்கள். அந்த நியாயத்தை யிங்குங் கொள்ள வேண்டும். ஒரு சுருதியில் கூறிய முறை சீர் கெடுமானால் அதற்குத் தகுந்த சுருதியைக் கொண்டு சீர்படுத்துக் கொள்வது சாலச் சிறந்தது.

இன்னும், இறைவன், படைத்த உயிர்களுக்கு பசுவைக் கொணர்ந்தார், குதிரையுடம்பை படைத்தார் என்றெல்லாங் கூறியிருக்கிறது. இதற்கு தக்கவாறு பொருள் கொள்ள வேண்டும். இதை கொள்ளாமல் வேறு பொருளைக் கொள்வோமானால் புருஷார்த்தம் ஹீனமாய்ப் போகும். புருஷார்த்தம் — மோட்சம். பயனற்றுப் போகுமென்பது கருத்து.

மறைகளுக்கு அது விருப்பமன்று. பிரஹ்மமும் ஆன்மாவும் ஒன்றென்பதில் தான் விருப்பம். மேலும், அம்ப ஆதி உலகங்களை யுண்டுபண்ணி அதற்குரிய அக்னி முதலிய உலக பாலர்களையும் படைத்து, அவர்களுக்கு உபதேசஞ் செய்து, பொறிகளுக்கும் அவைகளுக்குரிய தேவதைகளையும் சிருஷ்டித்து, அவைகள் வசிப்பதற்கு இடமாகிய உடலையும் உண்டு பண்ணி, நாமில்லாது போனால் இவர்கள் எங்ஙனம் வாழ முடியும் என்று எண்ணி, இவ்வுடலில் நுழைந்தாரென்று மொழிந்திருக்கிறது.

''ச ஏதமேவ'' அந்த பரமேஸ்வரன் படைத்த சரீ ரத்தில் உள்ள சிரசைப் பிளந்து உள்ளே பிரவேசித்தான்
3 4 4
என்று மறைகள் மொழிகின்றன. இன்னும் 'யதி' வாசாபி வியாகிருதம்' நான் இல்லாமல் வாயினல் பேச முடியு மாஞலும், பிராணனுல் பிராண வியாபாரம் செய்த போதிலும் கரண வியாபாரங்களை விசாரஞ் செய்து, அதன் பிறகு நான் யாரென்று எண்ணி அதன் பின்னர் புருஷ வடிவ ஆன்மாவை பிரஹ்ம சொரூபமென்று எண்ணியது. இம்மாதிரி ஜீவனை பிரஹ்ம வடிவமென்று உறுதி செய்தது.

மேலும் ''ஏஷ பிரஹ்மா ஏஷ இந்த்ர...'' என்ற படி. இவர் பிரஹ்மா, இவன் இந்திரன் என்பது மறையின் பொருள். இவ்வாறு மகாபூதங்களோடு எல்லா பேதக் கூட்டங்களைத் துவங்கி, எல்லா உயிர்களும் ஞானத்தை தனக்கு நேத்திரமாகக் கொண்டும், ஞானத்தில் நிலைத்திருந் தும், வியவகாரத்திற்குக் காரணம் என்றும், சகலமும் ஒடுங்கும் இடம் ஞானமென்றும், முடிவில் பிரக்ஞானம் பிரஹ்ம மென்றும் மொழிந்திருக்கிறது. இஃது அனைத்தும் ஜீவனை பிரஹ்மமென்று செப்புகின்றன. எனவே இங்கு ஆன்மசப்தத்தால் பரமாத்மாவைக் கொள்ள வேண்டும் இதற்கு வேறு விதமாகவும் பொருள் கொள்ளலாம். அஃது எங்ஙனமெனின்? ஆன்மாவென்னும் சொல்லால் இறைவனைத்தான் கொள்ள வேண்டும்.

எதுபோல வெனின்? வேறுவிதம் போல. சேஷ வாக்கி யத்தால். வாஜசநேயி உபநிடதத்தில் ஆன்மா எது வென்று மன்னன் ஜனகன் வினவ, யாக்ஞ வல்க்யர்—எப்பொருள் பிராணனுக்குள்ளிருக்கும் புத்தி விருத்தியினுள்ளே விக்ஞான மயவடிவ புருஷன் ஜோதி என்று தொடங்கி, அதை மீண்டும் சகல பற்றிலிருந்து விடுபட்டதென்றும் உறுதி செய்து பிரஹ்ம மென்று உரைத்திருக்கிருர். இதனுலும், 'உத்தராத்'

என்னும் வாக்கிய வலிமையாலும் ஆன்மா வென்னுஞ் சொல் லால் பரமாத்வைக் கொள்ள வேண்டுமென்பது குறிப்பு. சூ. 17

## 9) காரிய ஆக்கியான அதிகரணம்[4]

### அவதாரிகை.

இந்த பிரகரணத்தில் ஆன்மாவிலிருந்து ஆகாச முதலிய பூதங்களின் தோற்றத்தைக் கூறிவிட்டு, அதன்பிறகு பூமியிலிருந்து ஓஷதி, ஓஷதியிலிருந்து அந்நம், அன்னத்தி லிருந்து புருஷன் உண்டாயினுன் என்று மொழிந்தது. அதன் பிறகு இப்புருஷன் அன்னரசமயன் என்றும் உரைத் தது. இம்முறையாக ''சத்யம் ஞாநமநந்தம் பிரஹ்ம'' இவ்வாக்கிய வாயிலாகக் கூறிய பிரஹ்மமே யிங்கு அன்ன ரசமய புருஷனு அல்லது வேறு ஒன்ரு என்றதற்குப் பதில் சூத்திரம் :-

## சூ. காரியாக்யாநாத்[2] அபூர்வம் 3—3—18

காரியாக்யாநுத்,[2] அபூர்வமென்று பிரிக்கவும்.

ப.உ. அபூர்வம்=இப்புருஷன் பிரஹ்மமன்று. ஏனெனின்? காரியாக்யாநாத்=இப்புருஷனே பிரஹ்மத்தின் காரிய வடிவமென்று உரைத்திருக்கிறது.

வி.உ. ''சுரோத்ரியா அசிஷ்யந்த'' வேதமோதுபவர் கள் ஆசமனஞ் செய்து உணவு உண்கிறுர்கள். என்பது சுருதிப் பொருள். இவ்வாக்கியம் அன்னத்திற்கு ஆவரணத் தைக் கூறுகின்றது. ஆவரணம்- ஆடை. பிராண வித்தையின் அங்க ரூபமாக அபூர்வத்தை விதிக்கிறது. காரியாக்யாநுத்

3
— ''த்விஜோ நித்யம் உபஸ்பர்சேத்'' வேதியன், உண்ணும் போது ஆசமனம் செய்ய வேண்டும் என்றது ஸ்மிருதி வாக்கு. இந்த விதி மூலமாக அன்ன சுத்தி நிமித்தம் ஆசமனஞ் செய்வது அன்னத்திற்கு ஆடைபோல. இஃது அநுவாத ரூபம்.

பிருஹ்தாரண்யம், சாந்தோக்கியங்களில் பிராணசம்வாதம் வந்திருக்கிறது. பிராணசம்வாதமென்னது? பொறிகளும் மனமும் தங்களை பிராணனுக்கு அர்ப்பணித்து விட்டன. அவைகளைக் கூப்பிட்டு பிராணன் — எனக்கு அன்னமும் ஆடையுமளியுங்கள் என்று சொல்ல, வாக்கு முதலிய கருவிகள் — ஹேபிராணன்! பிரம்மன் முதல் நாய் வரை யுண்கிற உணவு உனக்கு உரித்தாகுக, இது போல் மறையவர்கள் உணவுக்கு முன்னும் பின்னும் ஆசமனஞ் செய்வது உனக்கு ஆடையாகுக!" என்று கூறின. இதற்கு பிராணசம்வாதமென்று பெயர்.

கிம்மே யந்நம் கிம்மே வாச: என்று வினவிய பிராணனுக்கு உள்ளக்கிளர்ச்சியும், வெளியில் மகிழ்ச்சியும், வந்தது. சில இடங்களில் ஆசமனம் அன்ன சுத்திக்காகவும், சில இடங்களில் வஸ்த்திரத்திற்காகவும் என்று சிலர் செப்புகின்றனர். ஏனெனின், இவை யிரண்டிற்கும் அவை யிரண்டும் பொருந்துகின்றன. இங்கு திடீரென அன்ன விசாரம் வந்தது தவளைப் பாய்ச்சல் என்னும் நியாயமென்று அறிக. ''அன்னவிசாரம் அதுவே விசாரமென்று அடிகளார் அருளியதும் அதுவே. ''சர்வம் பிராணஸ்ய அன்னம்'' அனைத்தும் பிராணனுக்கு அன்னமென்பது கருத்து. சூ 18,
4

## 10 சமாநாதிகரணம். சூ. 19

### *அவதாரிகை.*

இடையில் வந்த அன்ன விசாரத்தை முடித்து முறை

யாக வந்த உபாசனையின் ஒற்றுமையைக் கூறுவதற்கு சூத்திரம்—

1 4 3

## சூ. சமாந ஏவம் ச அபேதாத் 3—3—19

1 4 3

சமாநே, ஏவம், ச, அபேதாத் என்று பிரிக்கவும்..

ப.உ. சமாநே = வேறு வேறு கிளைகளில் வித்தை என்றது போல' ஒரு கிளையில் பலவித உபாசனைகளும்

4 3

ஒன்றென்று உணர வேண்டும். எங்ஙனமெனின்? அபேதாத் = அறிய வேண்டிய பொருள் ஒன்ருக இருப்பதாலும், குண உபசம்ஹாரம் — ஒற்றுமையான குணங்களை வருவித்துக்கொள்வதாலும் என்றறிக.

வி.உ. வாஜசநேயி கிளையில் அக்னி ரகஸ்ய சாண்டில்ய பெயரையுடைய வித்தை தெரிகிறது, அதில் ''ச: ஆத்மாநமுபாஸீத'' இந்த மநோமய பிராண சரீர ஒளிமய ஆன்மாவை வழிபட வேண்டும் என்று கேட்கப் படுகிறது. அதே மறையில் மற்ருெரு இடத்தில் 'விரீஹிர்வா யவோவா, நெல்லின் வால்போலும், யவை யென்பது ஒரு வித தான்யம். அதைப்போன்றும் ஆன்மா நுண்ணிய தென்றும், அஃது எல்லோர்க்கும் சுவாமி, அதிபதியென்றும் அருளியிருக்கிறது. இங்கு ஐயமுண்டாகிறது. இவ் விரண்டிடத்திலும் கூறிய உபாசனையும், குணங்களும் ஒன்ரு அல்லது வெவ்வேரு என்பது ஐயம். உனக்கு எங்ஙனந் தெரிகிறதெனின், இரண்டும் வெவ்வேறென்பது என் மதம்.

1

அஃது பொருந்தாது, ஏனெனின், ஆசமேத், என்னும் வாக்கியம் விதியல்ல. விஷ்ணு யாகஞ் செய்ய வேண்டும் என்பதற்குச் சமானம் அநுவாதம். எங்ஙனம் ''அக்நி ஹோத்ரம் ஜுஹோதி'' இந்த அக்னி ஹோத்ர வாக்கியத்

3 4
தில் ஹோமரூப கருமம் விதி ''தத்நா ஜுஹோதி'' என்னும் வாக்கியமும் விதியென்று சொல்லலாகாது. அதுபோல வித்தையிலும் பேதமில்லை.

சி. மீண்டும் மொழிகிறார்—வேறு வேறு கிளைகளில் வித்தையின் அபேதமும், குணஉபசம்ஹாரமும் காண்பது போல மனோமயத்வாதி குணங்களோடு கூடிய பிரஹ்மம் ஒன்றென்பது உறுதி. உபாஸ்ய பொருள் எங்கும் ஒன்றே தான். வித்தையொன்ருயிருப்பதால் குணங்களைப் பேதப் படுத்துவதற்கு ஒரு நியாயமும் இல்லை. எனவே யிங்கு ஒரு கிளையிலும் வித்தை யொன்றென்றும் குணஉபசம்ஹாரஞ் செய்ய வேண்டுமென்பதும் தெளிவு. சூ. 19,

3 4 4
## (11) சம்பந்த ,அதிகரணம் 20-21

*அவதாரிகை.*

பிருஹ்தாரண்ய உபநிடதத்தில் ''சத்யம் பிரஹ்ம, என்று தொடங்கி' 'தத்,யத்,தத், சத்யமசௌ, எது சத்யமோ அது ஆதித்யன், எது ஆதித்ய மண்டலத்தில் இருக்கிறதோ அது பிரஹ்மமென்று மொழிந்ததற்கு சூத்திரம் :-

3 4
## சூ. சம்பந்தாத் ஏவம் அந்யத்ராபி 3—3—20

சம்பதாத், ஏவம், அந்யத்ர, அபி என்று பிரிக்கவும்.

3
ப.உ. சம்பந்தாத்=ஒரு கி ளை யி ல் கூறப்பெற்ற சாண்டில்லிய வித்தையில் ஒரு வித்தையின் தொடர்பால் ஒன்றுக்கொன்று குணோபசம்ஹாரம் முன்மொழிந்திருக் கிறது. ஏவம்=அம்மாதிரி. அந்யத்ராபி=வேறு இடங்களி லும், குணஉபசம்ஹார முண்டாகக் கூடும்.

வி.உ. சூரிய மண்டல வியாபி புருஷனும், வலது கண்ணிலிருக்கும் புருஷனும் முறையே அதிதெய்வ புருஷனென்றும் அத்யாத்ம புருஷனென்றும் சொல்லப்படும். இவையிரண்டும் சத்தியரூப பிரஹ்மத்திற்கு வியாஹிருதி ரூபம். அஹம்—இஃது உபநிஷத்திற்கு அத்யாத்ம ரஹஸ்ய ரூபம். அஹ: இது அதி தெய்வ ரஹஸ்ய ரூபம்.

இங்கு ஆதித்ய பதத்தால் ஆதித்திய மண்டலங் கொள்வதில்லை, ஆனால் அம்மண்டலத்தில் வாழும் புருஷ வடிவ ஆன்மாவைக் கொள்ள வேண்டும். அவன்தான் அத்யாத்மமென்னும் வலது விழியில் இருப்பவன். இந்த புருடனுக்கு பூ, என்பது தலையாகவும், 'புவ:' என்பது தோளாகவும், 'சுவ:' என்பது காலாகவும் மொழியப்பட்டிருக்கிறது. இவ்வாறு கழறுவது வியாகிருதி. இஃது உபநிடதத்தில் வரப்பட்ட தேவதைகளின் ரஹஸ்யப் பெயர்கள். இரண்டு இடங்களிலும் ஒரே மாதிரி வந்ததால் வித்தையை யொன்றென்றே யுணர வேண்டும். இதற்கு அவிபாகமென்று பெயர். விபாகம்—வேறு. அவிபாகம் ஒன்று.

இரண்டும் ஒரு வித்தைக்கு விஷயமாகையால் உபாசனை யொன்றென்று உணர்வது சாலச்சிறந்தது. தொடக்கத்தில் ஒற்றுமையிருப்பதால் முடிவிலும் ஒற்றுமையென்பது உறுதி. இன்னும் இவ்வொற்றுமையை அதிதெய்வத்திலும் அத்யாத்மத்திலும் கொண்டு வரவேண்டும். ஏனெனின், சத்யவித்தை யொன்றாக இருப்பதால். வனத்தில் வாழும் ஆசிரியர் தருமம் இனத்தில் வாழும் ஆசிரியரிடத்திலுங் காணப்படுகின்றது. அவ்வாறு இரு உபநிடதங்களிலும் ஒருவிதமாகக் கூறியிருப்பதால் ஒன்றென்று உணர்வதால் ஒருகுற்றமும் இல்லை சூ. 20,

*அவதாரிகை.*

இரு இடங்களிலும் இருவிதமாகக் கூறி இருப்பதால் முறையன்று என்பாயாகில் பதில் சூத்திரம் :-

## சூ. நவா விசேஷாத் 3—3—21

ந, வா, விசேஷாத், என்று பிரிக்கவும்.

ப.உ. நவா = இரு உபநிடதங்களின் இரு இடங்களிலும் கூறிய பொருள்கள் பொருந்தாது. ஏனெனின், விசேஷாத் = உபாசனைகளுக்கு அதனுடைய இடத்துடன் தொடர்பு உண்டாகிறது.

வி.உ. இடவிசேடத்தால் குற்றமில்லை. இடவிசேடமென்ன? ''தஸ்யோபநிஷத், அந்த ஆதித்ய புருடன் பெயர் அஹ:, என்றும், ''தஸ்யோபநிஷதஹம், அவ் விழியிலிருக்கும் புருடன் பெயர் அஹம்என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. இதுதான் இடவிசேடம். இன்னும் ''யஏஷ ஏதஸ்மிந்'' இவன் இந்த சூரிய மண்டலத்தில் இருக்கும் புருஷன், இவ்வாறு ஆதிதெய்வீக புருடனைக்கூறிவிட்டு, இவனுக்கு, அஹ:, என்று நாமம் சுருதியுணர்த்துகின்றது. அதன்பிறகு ''யோஅயம்..., என்று மொழிந்து வலது நேத்திரத்தில் இருக்கும் அவனை, அஹம், என்று மறை மொழிகின்றது. 'தஸ்ய, என்னும் சொல் சமீபத்தை யறிவிக்கின்ற சர்வநாம மென்னுஞ்சொல். ஆகையால் உபாசனையொன்று என்பதில் ஐயமென்ன, ஒன்றுமில்லை யென்பது உறுதி. சூ 21

*அவதாரிகை.*

கூறிய பொருளை நிலைநிறுத்தும் பொருட்டு சூத்திரம் :-

3 1
சூ. தர்ஸயதிச 3—3—22

3
ப.உ. தர்ஸயதி = (மறைகள்) அறிவிக்கின்றன. என்ன அறிவிக்கின்றன? இரவி மண்டலத்திலிருக்கும் புருஷனும் நேத்திர மண்டலத்திலிருக்கும் புருஷனும் ஒன்றென்று உணர்த்துகின்றன.

3
வி.உ. தஸ்யைதஸ்ய ததேவரூபம்'' கதிரவன் வடிவமும், கண்ணுக்குள் இருக்கும் புருஷ வடிவமும் ஒரு வடிவ மென்பதை அச்சுருதி யருளுகின்றது. இம்மாதிரி தருமத்தின் முறை. சூரியனின் பருவம், அதாவது இறக்கை யெதுவோ அதுவே நயனத்திலிருக்கும் புருஷனின் இறக்கை யாம். ''யந்நாம தந்நாம'' எது அதற்குப் பெயரோ அதுவே இதற்கும் பெயராம். எனவே இவையிரண்டு உபநிடதத்தின் கருத்து ஒன்றென்பது உறுதி. சூ. 22,

*அவதாரிகை.*

பிரஹ்மத்திற்கு நிறைந்த வீரியமும் மேலுலகம் வரை வியாபகமும் என்னும் மகிமை மறைகளில் அருளியிருக்கிறது. அவைகளோடு பிரஹ்மத்திற்கு சம்பந்தமிருப்பதால், எல்லா வித்தையிலும் ஒற்றுமையுள்ளதா இல்லையா என்பதற்கு சூத்திரம் :-

4 3 1
சூ. சம்பிருதி த்யுவியாப்தி யபிசாத : 3—3—23

சம்பிருதி, த்யு, வியாப்தி, அபி, ச, அத: என்று பிரிக்கவும்.

4 3
ப.உ. சம்பிருதி த்யு வியாப்தி = உலகத்தைத் தாங்கும் தன்மையும், உலகத்தில் நிறையுந் தன்மையும்,

பிறவுமுள்ள பெருமைகள். அதாவது, விபூதி—சாண்டில்லிய வித்தையில் உபசம்ஹாரம் செய்யக் கூடாது என்றும், சொல்லியிருக்கிறது. அதஸ்ச=ஏனெனின், ஆ ய த ன முதலியவைகளுக்கு சம்பந்தமிருக்கிறது. ஆயதனம்—இடம்.

எங்ஙனம் சாண்டில்ய வித்தையில் பிரஹ்மத்தைப் பற்றிப் பேசுமிடத்து அதன் பெருமையையும் பேசியிருக்கிறது :- உலகத்தைத் தாங்குகிறது என்றும், எவ்வுலகிலும் நிறைந்திருக்கிறதென்றும் கூறியிருக்கிறது. ''அங்கிங்கெனுதபடி யெங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி'' என்று தாயுமானரும் சாற்றியிருக்கிறார். இன்னும் உலகேத்த நின்ற நாளோ என்றபடி. இவையெல்லாம் இறைவன் பெருமையைப் பேசுகின்றன. ''ஏஷம ஆத்மா அந்தர்
3
ஹிருதயே'' இந்த ஆத்மா எனது இதயத்தில் இருக்கின்றதென்று சொல்லி பிரஹ்மம் இதயமென்னும் இடத்தில் இருப்பதாக அறிவிக்கிறது.

3
இதுபோல் தஹரவித்தையில் ''தஹரம் புண்டரீகம் வேஸ்ம'' என்று கூறி இதயத்தையே அதற்கு இடமாக மொழுந்திருக்கிறது. உபகோசல வித்தையில் கண்ணையிடமாக மொழிந்திருக்கிறது :- ய ஏஷோ அட்சிணி புருஷோ திருஸ்யதே'' இந்த ஆன்மா விழியில் தெரிகிறது என்றபடி ஆங்காங்கு உடலுக்குள் ஆன்மாவிற்கு பல இடங்களை உபநிடதங்களில் மொழிந்திருக்கின்றன. இதற்கு அத்யாத்ம ஆய தனமென்று பெயர்.

இங்ஙனம் இருப்ப இவ்விபூதியனைத்தும் அதிதெய்வத்தைச் சேர்ந்தது. அவ்விபூதி அத்யாமத்தில் எவ்வாறு சேர்ந்தது என்பது கேள்விக்குறி. இஃதன்றியும்

ஜ்யாயான் திவோ[3] = மேலுலகத்திலிருந்தும் ஆன்மா பெரியது:
ஜ்யாயான் ஏப்யோ[4] லோகேப்ய[4]:,, இவ்வுலகங்களிலிருந்தும் ஆன்மா பெரியதென்பது மறையின் பொருள்.

''யாவான்வா அயம் ஆகாஸ: தாவாந்வா அயம் அந்தராகாஸ:...,, சா. உ (8-1-3) என்கின்றது. எவ்வளவு பௌதிக ஆகாசமோ அவ்வளவு இதயத்தில் இருக்கும் ஆகாசமென்பது வேதத்தின் பொருள். திவி உலகமும் பிருதிவியும் இவையிரண்டும் இதற்கு இடையில் நிலைத்திருக்கின்றன. இம்மாதிரி சோடசகலம் என்னும் பிரஹ்ம வித்தையும் இருக்கிறது. இருப்பினும் வித்தையில் பேதமென்பாயாகில், பிரஹ்மத்திற்கு சம்பந்தமிருப்பதால் பொருந்தும். பிரஹ்மம் ஒன்றுருய் இருந்தாலும் விபின்ன உபாசனை செய்வதால் ஒரு குற்றமும் இல்லை. விபின்னம் —வேறு வேறு. அப்படி முறையிருக்கிறது. எனவே சாண்டில்ய வித்தையில் கூறிய குணபேதங்களுக்கு உபசம்ஹாரம் இல்லையென்பது குறிப்பு. சூ. 23

### (13) புருஷ வித்யா அதிகரணம்

*அவதாரிகை.*

சாந்தோக்யத்தில் தாண்டி, பைங்கியினுடைய ரஹஸ்ய பிராஹ்மணமென்னும் இடத்தில் புருஷவித்தை யென்று மொழிந்திருக்கிறது. அதன் முறையை இங்கு உரைப்பதற்கு சூத்திரம் வருமாறு :-

## சூ. புருஷ வித்யாயாமிவ[3] சேதரேஷாம்[1] அநாம்நாநாத் 3—3—24

புருஷவித்யாயாம், இவ, ச, இதரேஷாம், அநாம் நாநாத் என்று பிரிக்கவும்.

ப. உ. புருஷ வித்யாயாமிவ = தாண்டி ஆதி புருஷ வித்தையில் புருஷனை எங்ஙனம் யக்ஞ வடிவமாகக் கற்பனை

செய்யப்பட்டடிருக்கிறதோ அதுபோல் இதரேஷாம்=தைத்திரீய புருஷவித்தையில், அநாம்நாநாத் = கூறவில்லை, தாண்டி, பைங்கி ரஹஸ்யத்தில் கூறிய புருஷதருமத்தை அங்கு கொள்ளலாகாது.

வி. உ. ''புருஷோயக்ஞஸ்தஸ்ய'' சா. உ (3-16-1) புருஷன் யாகவடிவம் அவனுடைய இருபத்துநான்கு வயது காலையில் செய்யும்யாகம், அவனுடைய நாற்பத்துநான்கு ஆயுள் மதியயாகம், அவனுடைய நாற்பத்தெட்டு வயது மாலையாகம் என்று நவின்றிருக்கிறது.

உணவு முதலிய காரியத்திற்காக தீக்ஷை முதலியவை கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அங்கு ஆசீர்வாதமும், மந்திர பிரயோகமும் பிற தருமமும் அருளப்பெற்றிருக்கிறது. இவையனைத்தும் தைத்திரீயத்தில் சாற்றப்படவில்லை. அவண் வேறு விதமாக அருளியிருக்கிறது. அவை :-தஸ்யைவம்
3
விதுஷோ,, அவ்வாறு அறிந்த புருஷனுடைய யாகவடிவ ஆன்மா யஜமானன், சிரத்தை மனைவி என்பது ஆரணத்தின் பொருள். இவ்வநுவாக்கு மூலமாக புருஷயக்ஞம் கற்பிக்கப்படுகிறது. இங்கு ஐயமுண்டாகிறது, என்ன ஐயம்? புருஷதருமத்தை அந்நியகிளையில் அருளியிருக்கிறதே அவைகளை தைத்திரீயத்தில் ஒப்புக்கொள்ளக்கூடுமா அல்லது கூடாதா என்பது ஐயம். பூர்வபட்சத்தில் குணஉபசம்ஹாரஞ் செய்ய வேண்டும் என்பது செய்யக்கூடாதென்பது சித்தாந்தபட்சம்.

ஆன்மாயஜமானன், சிரத்தை மனைவி, உடம்புவிறகு குச்சி, மார்பு வேதி—யாகஞ் செய்யும் இடம், ரோமம் வெளியில் உள்ள நாணற்புல், வேதம் முட்டி, சிகை, இதயம் யூபம், நடுவில் நிறுத்தப்படும் ஒரு வித மரக்கட்டை, ஆசை நெய், கோபம் யாகபசு, தவசு அக்னி, பொறிபுலன்களை யடக்குதல் தட்சிணை, வாக்கு ஹோதா, பிராணன் உத்காதா,

4
கண் அத்வர்யு, மனம் பிரஹ்மன். இவ்வாறு அநேகவிதம் கற்பனை செய்திருக்கிறது.

வேறு வேறு விதமாகக்கற்பனை செய்ததால் பிரத்ய பிக்ஞானம் உண்டாகிறதில்லை. அது என்கின்ற ஞானம் பிரத்யபிக்ஞானமெனப்படும். சாந்தோக்கியத்தில் ஆயுளில் யாகத்தை கற்பனை செய்திருக்கிறது, தைத்திரீயத்தில் காலத்தில் கற்பனை செய்திருக்கிறது. இம்மாதிரி இரண்டிலும் வேறுபாடு காணப்படுவதால் குணங்களைக் கொள்ள இயலாது

4 3 4
## 14 வேதாத்ய திகரணம்

*அவதாரிகை.*

அதர்வ வேத கிளையிலுள்ள உப நிஷத்து தொடக்-
4 3 4 4
கத்தில் ''சர்வ பிரவித்ய ஹிருதயம் பிரஹத்ய தமநீ:பிரவி
4 4
ருஜ்ய சிரோ அபிபிரவிருஜ்ய திரிதா விப்ருக்த:,, என்-
3
கின்றது மந்திரம். ஹேதேவ! என்னுடைய பகைவன் அங்கங்களை நொறுக்கியெறிவாயாக, இதயத்தைப் பிளப்பாயாக, சிரசை வெட்டு, தலை மண்டையை இடித்துத் தூள் ஆக்குவாயாக, எனது பகைவன் மூன்று விதமாக அழியட்டும், இம்மாதிரி மந்திர சுருதி கூறுகின்றது, தாண்டியென்னும் ரிஷிகள் கூறும் உபநிடதங்களில் முதலில்
3
''தேவ: சவித:,, ஹேவிஸ்வ பிரகாச? உலகத்தை விளக்குபவனே! உலகத்தை யுண்டுபண்ணும் கதிரவனே! நீ வேள்வியையும், அதற்குத் தலைவனையும் தோற்றிவைப்-பாயாக என்று மந்திரத்தில் மொழிந்திருக்கிறது.

சாட்டியாயனி ரிஷிகள் கூறும் உபநிடத ஆரம்பத்தில் ''சுவேதாஸ்வோ'' வெள்ளை குதிரையைத் தனக்கு வாகனமாகக் கொண்ட ''ஹே இந்திரனே! நீ மரகத மணிக்குச்

சமான நிறத்தையுடையவன்,'' என்கின்றது. கடவல்லி, தைத்திரீய உபநிடதங்களின் துவக்கத்தில் ''சந்நோமித்ர'' ஹே ஆதவனே! எங்களுக்கு நலத்தையளிப்பாயாக என்கின்றது. இந்த மந்திரமும், இவைகளில் மொழிந்த வினைகளும் வித்தையில் கொள்ள வேண்டுமா வேண்டாமா என்று ஐயமுண்டாகிறது. பூ.ப. மேற்கூறியவைகளை வித்தையில் கொள்ள வேண்டும். எதனுலோவெனின்? மந்திரத்தையும் வினைகளையும் முக்கிய உபநிடதங்களில் மொழிந்திருக்கின்றன.

சி. அவ்வாறு நீ கூறுவாயாகில் அது பொருந்தாது. இம்மந்திரங்களும் அவ்வினைகளும் வித்தையில் சேர்த்துக் கொள்ள இயலாது. எங்ஙன மெனின்? வேத ஆதி பொருளுக்கு வேற்றுமையிருப்பதால். ஹிருதயம் பிரவித்ய[4] என்று மொழிந்து இருக்கிறது. இதனுல் அம்மந்திரங்களில் அந்த வித்தைகளோடு பொருந்துவதற்கு வலிமையில்லை. இந்த மந்திரம் அபிசார விஷயம். அபிசாரம் என்பது ஒருவிதமான எதிரியைக் கெடுக்கும் தொழில். பகைவனுடைய எல்லா அங்கங்களும் அழிந்து போகட்டுமென்னுந் தன்மை.

ஒரு பொருளை உறுதி செய்யும் பொருட்டு ஆறு பிரமாணங்களை கரும காண்டிகள் கொண்டிருக்கின்றனர். சுருதி[3] லிங்க வாக்ய பிரகரண ஸ்த்தான[2] சமாக்யானும் சமவாயே[3] பாரதௌர்பல்யம் அர்த்த விப்ரகர்ஷாத்'' ஜை, சூ. (13-3-13) சுருதி, லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்த்தானம், சமாக்யானம். இவ்வாக்கியங்களில் முன்னுள்ளதை நோக்கும் பொழுது பின்னுள்ளது பலம் குறைந்ததாகும். சுருதியை எண்ணும் பொழுது ஏனைய அனைத்தும் வலிமையின்றியதென்பது தெளிவு. இது கர்ம காண்டிகள்

கையாளும் விதம். எனவே இங்கு குணங்களை யேற்றுக் கொள்ள இயலா தென்பது துணிபு. சூ. 25,

## 15 ஹாந்யதி கரணம்[4]

**ஸூ. ஹாநௌது உபாயந சப்த சேஷத்வாத் குஸாத் சந்தஸ்துதி உபகானவத்தத் உக்தம் 3—3—26**

ஹா நௌ, து, உபாயந சப்த சேஷத்வாத், குஸாத் சந்தஸ்துதி உபகாநவத், தத், உக்தம் என்று பிரிக்கலாம்.

ப.உ. ஹாநௌ = (ஞானியின் பாவம்) அழிந்து போகும். து = ஆனால் பாவம் மட்டும் அழிந்துபோகுமென்று கூறியிருக்கிறது. இருப்பினும் ஞானியின் உடைமையை அவர்கள் புத்திரன் உறவினர்கள் எடுத்துச் செல்வர் என்று எண்ணவேண்டும். ஏனெனின் உபாயனம் என்னும் சொல் எஞ்சி நிற்பதால் என்றறிக. மேலும் உபாயனசப்தம் ஹான சப்தத்திற்கு அங்கமாக நிற்கிறது. குசா சந்தஸ்துதி உப கானவத் = என்று அறியவும். ததுக்தம் = அவ்வாறு அருளி இருக்கிறது.

அல்லது ஹானன சப்தம் விதூனன அர்த்தத்திலுங் கொள்ளலாம். எங்ஙனமெனின்? விதூனனம் என்னும் சொல் உபாயனம் என்னுஞ் சொல்லுக்கு அங்கமாயிருப்பதால். ''அஸ்வ இவரோமாணி'' குதிரை எவ்வாறு தனது ரோமத்தில் படிந்த புழுதியை உதறுகின்றதோ, அவைகளை உதறித் தன்னைப் புனிதப் படுத்திக் கொள்கின்றதோ அது போல ஹார்த பிரஹ்ம ஞானத்தால் தரும அதர்ம ரூப பாவத்தை நீக்கிவிட்டு, ராகுவின் வாயிலிருந்து விடுபட்ட நிலாவைப்

போல எல்லா இடருக்கும் இருப்பிடமான காயத்தை விட்டு கிருத கிருத்யனுவாய் என்பது தாண்டிச் சுருதியின் கருத்து. தாண்டிச் சுருதி — சாந்தோக்ய உபநிடதம்.

அது அதர்வண சுருதியில் "வித்வான் நாமரூபாத்[3] விமுக்த: பராத்பரம் புருஷம் உபைதி[3] திவ்யம்" என்கின்றது. வித்வான் = ஞானி. நாமரூபாத் விமுக்த: = நாம ரூப கரும வடிவ உலகத்திலிருந்து விடுபட்டு, பராத்பரம் புருஷம் திவ்யம் உபஏதி = வியஷ்டி பிரபஞ்சம் அபரம். சமஷ்டி பிரபஞ்சம் பரம் மாயை. பராத். இத்தனைக்கும் பிரஹ்மம் வேருனதால் பராத்பரம் எனப்படும். எங்குந் தங்கி நிறைந்திருப்பதால் புருஷன். ஒளிமயமானதால் திவ்யம். இந் நிலையில் உள்ள பிரஹ்மத்தின், உபஏதி = அறிஞன் அதை அடைகிருன் என்பது ஆரணத்தின் பொருள். அதர்வணம் இவ்வாறு அறைகின்றது.

"தஸ்ய[3] புத்ரா தாயம் உபயந்தி" என்கின்றது சாட்யாயனி சுருதி. தஸ்ய = ஞானியினுடைய, புத்ரா: = புதல்வர்கள் அல்லது மாணவர்கள். தாயம்[3] = பொருள்களை உபயந்தி = அடைகிருர்கள்.

ஏவம் சிலர் — வித்வான் தேகத்தை விடும் பொழுது அவனுடைய புண்ணியத்தை உறவினர்களும், பாவத்தைப் பகைவர்களும் பெறுகிருர்கள் என்கின்றனர். சிலரென்றது கௌஷிதகி உபநிஷத்தைக் கையாண்டவர்களை. இந்த விளம்பிய வாக்கியத்தில் சில இடத்தில் பாவ புண்ணியங் களைத் தியாகஞ் செய்ததாகவும், சில இடத்தில் அவர் களுடைய உறவினரும், பகைவரும் பகிர்ந்து கொண்டு போனதாக மொழிந்திருக்கிறது. இன்னும் சில இடங்களில் இரண்டையுமே உரைத்திருக்கின்றன. இங்கு எழுகின்றது சந்தேகம்.

சி. ''ஹாநத்து இதி'' இந்த சுருதியில் ஹாநௌ என்னும் சொல்லால் உபாயநத்திற்கும் பொருந்தும். ஏனெனின், உபாயனமென்று சொன்னது ஹாநத்திற்கு சேஷ வக்கியமாகும். கௌஷிதகி ரஹஸ்யத்தில் உபாயன மென்னும் சொல் ஹாயனமென்னும் சொல்லுக்கு சேஷ வாக்கியமாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. ஆதலின் மற்றைய மறைகளில் ஹாயனமட்டும் வரைந்திருந்த போதிலும் உபாயனத்திற்குத் (அநுவிருத்தி) — தொடர்பு கொள்ளப் பட்டிருக்கிறது. — ஹானம் — விடுவது. உபாயனம் — கொள்வது.

'உபாயனசப்த சேஷத்வாத்' உபாயனசப்தம் ஹானத்திற்கு அங்கம். குசம் — கட்டையில் நாணற்புல்லைக் கட்டிவைப்பது. குசா, சந்தம், ஸ்துதி, உபகானத்திற்குச் சமானம் இம்மாதிரி உபமானம் கொள்ளப்பட்டிருக்கிறது. ''குசா வானஸ்பத்யா;'' ஏகுசே! நீ வனஸ்பதியிலிருந்து தோன்றியிருக்கிருய். நீ என்னைக் காப்பாயாக. என்று மொழிந்திருக்கிறது. 'ரித்விக்கு உபகானஞ்செய்க, என்பது பொது விதி, சாமாந்ய சுருதி. அத்வர்யு: உபகானஞ் செய்யக் கூடாது இது விசேஷசுருதி அத்வர்யு:—ரிக்-வேதத்தை யோதுபவன். இவ்வாறு சாமான்ய விதியை விசேஷ விதி தடை செய்யும்.

இன்னும், விதூநனம் என்னுஞ் சொல்லால் அசை-
4
வைக் கொள்ள வேண்டும். தூஞ் — தாதுவிற்கு பாணிணிய அநுசாரம் இப்பொருள்தான் சிறந்தது. ''அஸ்வ இவ
4
ரோமாணிவிதூய பாபம்,, சா. உ. (8-13-1) குதிரை தனது ரோமத்தில் படிந்திருக்கும் புழுதியை எவ்வாறு உதறு-கின்றதோ அவ்வாறு ஞானிதனது பாவத்தைப் போக்கிக் கொள்கிருனென்பது சுருதிப் பொருள். எனவே ஹான மென்னும் சொல்லால் உபாயனத்தையும் கொள்வதால் குற்ற மொன்றுமில்லை. சூ. 26,

4
## (16) சாம்பராய அதிகரணம்.

*அவதாரிகை.*

பல வித்தையில் ஒரு வித்தை பர்யங்கவித்தை. இவ் வித்தையைப் போதிப்பவர் கௌஷிதகி யென்பவர்கள். அவர்கள் கூறுவதாவது—

4 2
**ஸூ. சாம்பராயே தர்தவ்ய அபாவாத்ததாஹி அந்யே 3—3—27**

4 2
சாம்பராயே, தர்தவ்யாபாவாத், ததா, ஹி, அந்யே என்று பிரிக்கவும்.

ப. உ. சாம்பராயே=உடலை விடும்பொழுதில் பாவ புண்ணியம் அற்றுப்போகின்றன, தர்தவ்யாபாவாத்= ஞானிகளுக்கு இடையில் அடைய வேண்டுவது ஒன்றுமில்லை. ஹி=ஏனெனின், அந்யே=வேறுகிளைகளை யோது பவர்கள்
4
அவ்வாறு கூறுகிருர்கள். ''அஸ்வ இவ ரோமாணி விதூய
2
பாபம்,, என்பது அவர்கள் திருவாக்கு. ததா என்னும் சொல் அவ்வாறு அறிவிக்கிறது.

வி.உ. பிரம்மதேவன் தனக்குரிய தங்கக் கட்டிலில் அமர்ந்து உறங்குவது வழக்கம். அதைப் பற்றிப் பேசும் வித்தை பர்யங்க வித்தை. அதை ஓதி யுணர்ந்தவர்கள் கௌஷிதகியெனப்படுவர். தேவயான வழியாக பர்யங்கத்தில் இருக்கும் பிரமதேவனையடைய வேண்டுமென்று செல்பவர்கள் உபாசகர்கள். இவர்களுடைய புண்ணியபாவங்கள் இடைவழி யில் இல்லாமல் போகிறதென்று கௌஷிதகிகள் மொழி கிருர்கள். எங்கு மொழிகிருர்கள்? பர்யங்க வித்தையில்.

3 2 3 3
‘‘ஏதம் தேவயாநம் பந்த்தாநம் ஆசாத்ய அக்நி லோகம்
3 2
ஆகச்சதி,, கௌ.உ (1-3) ச = அவன். ஏதம் = இந்த.
3
தேவயாநம் = பந்த்தானம் = தேவயான மார்க்கத்தை.
3 3 2
ஆசாத்ய = அடைந்து. அக்நிலோகம் ஆகச்சதி = அக்கினி
உலகத்தில் வந்து சேருகிறான் என்று கூறி—

3 2 3
ச ஆகச்சதி விரஜாம் நதீம் தாம் மநசைவ அத்யேதி
3 4
தச்சுகிருததுஷ்கிருதே விதூநுதே, கௌ.உ1-4) ச=அவன்
3 2
விரஜாம் நதீம்=விரஜா என்னும் நதியை. ஆகச்சதி =
அடைகிறான். தாம்=அதை மநசாஏவ மநதினால் அத்யேதி
=தாண்டுகிறான். தத்சுகிருததுஷ்கிருதே = அவனுடைய
4
புண்ணிய பாவங்களை. விதூநுதே=தியாகம் செய்து விடு
கிறான் என்பது சுருதியின் கருத்து. இங்கு சுருதியநுசாரம்
அந்த புண்ணிய பாவங்கள் இடைவழியில் அழிந்து விடு
கின்றன என்று அறிய வேண்டும். அல்லது உடலில்
இருந்து விடுபட்ட உடனே ஞானத்தின் வலிமையால்
பாவ புண்ணியம் பற்றாது பறந்து போகின்றன என்று
மறைகள் பகருகின்றன என்று அறிக. அதை அறிவிக்கும்
பொருட்டு ‘தர்த்தவ்யாபாவாத், என்று சூத்திரத்தில்
சாற்றப்பட்டிருக்கிறது.

தத்வ ஞானத்தால் பிரஹ்மத்தை அடைய விருப்பமுள்ள புருஷனை இன்பதுன்பம் அணுகுவதில்லை. அவன் உடலோடு ஒருவியிருந்தாலுஞ்சரி, அல்லது அதனோடு மருவியிருந்தாலுஞ்சரி. இதை உணர்த்தும் பொருட்டு — ‘‘உத்க்ராமந்தம் ஸ்த்திதம் வாபி’’ என்று கீதையில் சொல்வீரன் வில்வீரனுக்குச்சொன்னான். உடலை விட்டு ஏகினாலும், உடலோடிருந்தாலும் அவன் அவைகளோடு அணுகான்

என்பது கீதையின் கருத்து. அவனியில் அடைய வேண்டு வது அவனுக்கு என்ன இருக்கிறது, ஒன்றுமில்லை யென்பது உறுதி.

ஸ்ரீராமன் இலங்கைக்குச் செல்வதற்காக சேது கரையை அடைந்தான். கடல் அரசனை அழைத்தான். அவன் வரவில்லை. வருந்தியழைத்தும் வராததைக் கண்டு தனது கோதண்டத்தை யெடுத்தான். கடலை நோக்கி விடுத் தான். கடல் நீர் வற்றியது. கடலரசன் கலங்கினுன். கடலில் உள்ள ரத்தினங்களை வாரியெடுத்து வள்ளல் இராமனிடம் வந்தான். வணங்கித் தான் செய்தத் தவறை யுணர்ந்தான். தாளில் விழுந்து மன்னிக்க வேண்டும் மாதவா என்று மன்ருடினுன். இராம பாணம் கடலை வற்றச் செய் தது. ஞானபாணம் பவக்கடலை வற்றச் செய்யும் என்பதில் என்ன ஐயம், ஒன்றுமில்லை யென்பது உறுதி.

வினைகள் ஒழியாமல் உத்தரமார்க்கம் உண்டாக மாட்டாது. உத்தர மார்க்கம் — தேவயான வழி. சகுண வித்தையில் தேவயான வழி பயனுடையது. நிர்க்குண வித்தையில் பயனுடையதன்று. வாழை, நண்டு, சிப்பி, வேய் பயனையளிக்கின்றபோது தானும் அழிந்து போவது வழக்கம். அது போல் வித்தையும் பயனை அளிக்கும் பொழு தில் அதுவும் அழிந்து போவது இயல்பு. வேறு இடத்தில் உள்ள பொருளையடைய வேண்டுமானுல் வழி நடக்க வேண்டும். நம் சொரூபத்தையறிவதற்கு வழி தேவை யில்லை. பிரஹ்ம வித்தைக்கு அழிவில்லை யென்பது கருத்து.

ஆகையால் ஞானி குதிரையைப் போல் தனது பாவ புண்ணியத்தை உதறிவிடுகிருனென்பது திண்ணம். எனவே உடல் விழுமுன் நல்வினைத் தீவினைகளை வென்று விடுகிருன் என்பது கருத்து. இதனுல் மற்றைய தாண்டி, சாட்டி யாயனி, கிளைகளை யோதியுணர்ந்த உத்தமர்கள் குதிரை

யுவமானத்தைத் தருகிறுர்கள். ஆகலின் உடலை விடுமுன்னர் வினைகளை விட்டு விடுகிறுர்கள் என்பது சூத்திரத்தின் கருத்து. சூ. 27,

*அவதாரிகை.*

கூறிய பொருளில் பூர்வ பட்சியின் ஐயத்தை யெழுப்பி சமாதான சூத்திரம் :-

2 3 4 4

## சூ. சந்தத உபயாவிரோதாத் 3—3—28

2 3 4

சந்தத: உபய அவிரோதாத் என்று பிரிக்கவும்.

2 3

ப. உ. சந்தத:= உயிருடன் வாழும் மனிதன் தனது இச்சையால் ஞானத்தைப் பயில முடியும். ஆகையால் அவனுடைய வாழ்நாளில் கருமங்கள் அழியவும் முடியும். உபய அவிரோதாத்=விரோதம் இன்மையால். (எங்கு விரோதமில்லை யென்பாயாகில்) தாண்டி, சாட்டியாயனி யென்னும் ஈரிடத்திலும் என்று உணரவும்.

வி.உ. தேகத்திலிருந்து வெளியேறிய மனிதன், தேவயான வழியாகச் செல்லும் அவனுடைய புண்ணிய பாவங்கள் உடலை விடுமுன்னர் அழியுமாகில், முயற்சி வேண்டுவதில்லையென சங்கிக்கலாகாது. ஏனெனின், பாட கிரமாத்து அர்த்தக்கிரமம் பலவான், எனவே யம நியம முதலிய முறைகளைச் செய்வதால் குற்றமொன்றுமில்லை. இங்ஙனம் பொருள் கொள்ளின் தாண்டி, சாட்டியாயனி சுருதிகளுக்கு விரோதம் வருவதற்குக் காரணமில்லை.சூ.28,

3 4

### (17) கதேரார்த்த வத்வாதிகரணம்

*அவதாரிகை*

ஒருவேளை உத்தர மார்க்கமாக பிரஹ்ம லோகம் போகாமல் இங்கேயே ஆன்மாவை யடைகிருன் என்ருல் என்ன குற்றம் என்பதற்குப்பதில்.

3 2 4 2 2 4
**ஸூ. கதேரர்த்தவத்வம் உபயதாந்யதா ஹி விரோத:**
**3—3—29**

3 4 2 2
கதே:, அர்த்தவத்வம், உபயதா, அந்யதா, ஹி,
4
விரோத: என்று பிரிக்கவும்.

ப.உ. கதே:=தேவயான வழிக்கு அர்த்தவத்வம் பயனுண்டாகும் பொழுது. உபயதா= இரண்டிடத்திலும் பிரித்துப்பார்த்தால் பொருந்தும். சகுணவித்தையில் தேவ யான வழியுண்டு, நிற்குணவித்தையில் அது இல்லை. அந்யதா=தேவயான வழியை யெங்கும் பயன்படுத்திக் கொண்டால். விரோத:=வித்வான் புண்ணிய பாவத் திலிருந்து விடுபடுகிருன் என்னும் மறைக்கு விரோத முண்டாகும். ஹி=உறுதி.

வி.உ. சில இடங்களில் புண்ணிய பாவத்தின் விடு தலையின் முன்னிலையில் தேவயான வழிக்கு மறையின் பிரமாணமுளது. சில இடத்தில் இல்லை. ஆகவே இவண் ஐயமுண்டாகிறது. விட்டவர் அனைவரும் உத்தர வழியாகச் செல்லுந்தன்மையுடையவர்களா, அல்லது பிரித்து சிலர் செல்பவர்கள், சிலர் செல்ல முடியாதவர்கள் என்று கொள்ளவா? எவ்வாறு ஹாயனத்தில் உபாயனத்திற்கு அநு விருத்தியுண்டாகிறதோ அவ்வாறு தேவயானத்திற்கும் அநுவிருத்தி யுண்டாக வேண்டும். அநுவிருத்திதொடர்பு.

சி. இவ்வாறு பூர்வபட்சிப் புகன்ற பின்னர் பதில்- சில இடங்களில் தேவயான வழிக்குப்பயன் உண்டு, சில இடங்களில் பயனில்லை எல்லா இடங்களிலும் பயன் உண் டென்று சொல்ல இயலாது. அங்ஙனம் கூறுமிடத்து புண்ணிய பாவத்தை விட்டு விட்டு முக்தியை யடைகிருன் என்ற வேதவாக்குப் பொய்த்துப் போகும். மேலும்

சென்றடையாதத்திருவுடை இறைவனை சென்று அடைவ தென்பது சிறப்பன்று. பிரஹ்மலோகம் கதியுடையது, பிரஹ்மம் = கதியின்றியது செல்லாதது, ஆகையால் நிற் குணவித்தையில் கதி பயனற்றதாகுமென்று நாங்கள் பகருகிறோம். சூ. 29,

அவதாரிகை.

உரைத்த பொருளையுள்ளத்தில் உறைப்பதற்கு சூத்திரம்,

## சூ. உபபந்நஸ்தல்லக்ஷணார்த்தோபலப்தேர் லோகவத் 3—3—30

உபபந்ந:, தல்லக்ஷணார்த்த, உபலப்தே:, லோகவத் என்று பிரிக்கவும்.

ப.உ. உபபந்ந: = செல்லும் தன்மையை விசாரித்து பார்த்தால் (கதி) செல்லும் தன்மை பொருந்தும். தல் லக்ஷணார்த்த உபலப்தே: = ஏனெனின், கதிக்குக் காரணமான பொருள் சகுண வித்தையில் பொருந்துகின்றது. லோகவத் = எவ்வாறு உலகத்தில் ஒரு கிராமத்தில் வாழும் மக்கள் அன்னிய கிராமத்திற்குப் போக விரும்பினால் வழி தேவைப் படுகிறதோ அது போலறிக. ஆனால் போக விரும்பாத வர்க்கு அது தேவையில்லை. அது — வழி, அம்மாதிரி இங்கும் கொள்ள வேண்டும்.

வி.உ. சில இடத்தில் சிலருக்கு வழி தேவைப்படு கிறது சிலருக்கு அது தேவையில்லை. இங்ஙனம் இருவித மாக இசைப்பதால் குற்றமொன்றுமில்லை. இவ்வாறு பர்யங்க வித்தையில் பகர்ந்திருக்கிறது.

மேலும் பிரஹ்ம லோகத்திலும் பல இடங்களுக்குச் சென்றதாக மொழிந்திருக்கிறது. இதற்கெல்லாம் மார்க்கம் விரும்பப்படுகிறது. ஆனால் தத்வ ஞானத்திற்கு அவை தேவையா என்றால், தேவையில்லை. அவை — மார்க்கம். எதனாலோ வெனின்; ஆன்மாவை யொன்றென்று உணர் பவன், ஆப்தகாமன் — பெற வேண்டியதைப் பெற்றவன். தொலைவில் துன்பங்களைத் தொலைத்தவன். சகலகிலேசங் களிலிருந்து விடுபட்டவன். அறிவால் அறியாமையை அகற்றியவன். ஞானமென்னும் நல்ல நெருப்பால் நல்வினை தீவினைகளை எரித்து நீருக்கினவன். இவ்வகைப்பட்ட புண்ணிய சீலனுக்கு கமனகமனம்-போக்கு வரவு பொருந் தாது. "போக்கும் வரவும் புணர்வுமிலா புண்ணிய னே," என்று புகன்றார் மணிவாசகப் பெருமான். போக்கும் =போதல், உடலை விட்டு ஒருவுதல். வரவும்=வருதல் = உடலைப் பெற்று புவிக்கு வருதல். மற்றவை வெளி. இதனாலும் ஞானிக்கு கதி தேவையில்லை யென்பது தெளிவு கதி — செல்லுந்தன்மை

ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குச் செல்ல வேண்டுமானால் மார்க்கம் வேண்டும், உடலில் உள்ள நோயை யோட்டி ஆரோக்கியம் பெற வேண்டுமானால் வழி நடக்க வேண்டுவதில்லை- இதை லோகவத், என்ற சொல் உணர்த்துகின்றது. இம்மாதிரி இங்கும் கொள்ள வேண்டும். இதைப் பற்றி நான்காவது அத்தியாயத்தில் நன்கு அறிவிக்கப்படும். சூ. 30

4

## 18, அநியம அதிகரணம்

### *அவதாரிகை.*

சகுண வித்தையில் கதி சுருதி வருகின்றது, நிர்குண பிரஹ்ம வித்தையில் கதி சுருதியில்லை யென்று முந்திய பிரகரணத்தில் மொழிந்திருக்கிறது, அது சரி. அவை பர்யங்கவித்தை, உபகோசலவித்தை, பஞ்சாக்கினிவித்தை,

தகரவித்தை. அந்நிய வித்தையில் கதி சுருதியில்லை. அவை:- மதுவித்தை, சாண்டில்யவித்தை, ஷோடசகலவித்தை, வைசுவானரவித்தை. இங்கு ஐயமுண்டாகிறது. எதில் கதி சுருதி வருகின்றதோ அதில் மட்டும் நியமமுண்டா, அல்லது அந்நிய வித்தையிலும் நியமம் இல்லாமல் எல்லா வித்தை யிலும் வருமா என்பது எனது ஐயம்.

4 3 3
**சூ. அநியம : சர்வாசாம் அவிரோத: சப்தா**
4
**நுமாநாப்யாம் : 3—3—31**

4 3 3 3
அநியம:, சர்வாசாம், அவிரோத:, சப்த அநுமாநாப்யாம் என்று பிரிக்கவும்.

பூர்வபட்சி — நியமம் உண்டாகிறது. எந்த வித்தை யில் கதி சொல்லப் படுகிறதோ அங்குதான் அது சொல்லப் படவேண்டும், ஏனெனின், பிரகரணம் என்பது நியமமுடை யது. எந்த வித்தையில் கதி சொல்லவில்லையோ அங்கு கதி காணப்படுமானால் அது சுருதி விருத்தமாகும்.

சி. பூர்வபட்சி யிவ்வாறு மொழிந்ததும், அது முறை யன்று. கதி நியமமன்று, பின்னை அநியமம். நியமம் இல்லையென்பது பொருள். இந்த தேவயான மென்னும் பெயரையுடைய கதி (அப்யுதய) சம்சார போகத்தை யளிப்பதான இது சகுண வித்தை யனைத்திலும் இருக்க வேண்டுமென்னும் நியமம் இல்லை. எனவே பிரகரணத்தில் என்னைக் குற்றம். இங்கு சப்தமும் அநுமானமுமிருக்கின்றன. சப்தம்-சுருதி. அநுமானம்-ஸ்மிருதி. இதுதான் இதற்குப் பொருள்.

3 3
எங்ஙனம் 'தத்ய இத்தம் விது:' அங்கு இவ்வுலகத்திற்கு வரவேண்டுமென்னும் அவாவுள்ள அதிகாரி இல்லறத்தார்

பஞ்சாக்கினி வித்தையை அறிகிறார் என்னும் சுருதி- பஞ்சாக்கினியை வழிபடுவதற்காக தேவயான வழியைக்

1

கூறி, ''யேசஇமே,, எவர்கள் வானப்பிரஸ்த்தர்களாக இருந் தாலும் சரி, துறவியாயிருந்தாலும் சரி, நம்பிக்கை, தபசு இவை யிரண்டோடும் கலந்த சகுண பிரஹ்மத்தை வழி படுவானானல், அவர்களுக்கும் அவ்வழிபாடு, மார்க்க ஞானத்தை அளிக்கிறது. இஃது எங்ஙனந்தெரிகிறதென் பாயாகில், இவ்வழியிவர்களுக்கேயுரியது. மறைகளில் (இவர்களுக்குத்தான் இதைப்பற்றி இயம்பப்படுகிறது).

3 3

''வித்யயாததா ரோஹந்தி,, உபாசனையினால் பிரஹ்ம லோகத்தையடைகிறார்கள் என்பது ஆம்நாயம் - வேதம். இங்கு செல்பவர்க்கு இச்சைகள் ஒழிந்து விடுகின்றன. தக்ஷிண வழியில் செல்பவன் அங்கு செல்வதில்லை. தக்ஷிண வழி-பித்ருயானமார்க்கம். அவித்வான்,-உபாசனையில்லாத தபஸ்வியவர்களும் செல்வதில்லையென்று மற்றய வேதங்கள் வரைகின்றன. நம்பிக்கை, தபசு முதலிய குணங்களோடு கூடிய இல்லறத்தவர்கள் செல்கிறார்கள் என்பது எளிது புலனும்.

தேவயான வழி பித்திருயான வழியிவை இரண்டை யும், அல்லது இவையிரண்டில் ஒன்றையாவது பற்றாதவன் மூன்றாவது வழி, வேதத்தில், வெறுத்து தள்ளப்பட்டது, நிந்தநீயமார்க்கத்தில் செல்பவன். பாம்பு, பல்லி, தேள், நட்டுவக்காலி, புழுபூச்சி முதலிய ஈனயோனியை அடைவ தாக ஆரணம் அருளுகின்றது. ''திரிதியஸ்யபந்த்தா;

2 3

என்பது மறைமொழி ''அத யஏதௌபந்த்தாநௌ நவிது:

3 3 3 3 3

தே கீடா: பதங்கா யதிதம் தந்த சூகம்,,பிரு.உ.(6-2-16)

2
அத = தேவயான பித்திருயான மார்க்கத்தை மொழிந்த பின்னர். யே = எவர்கள். ஏதௌ பந்தாநௌ = மேலே
3
இரு வழியையும், நவிது: = அறியவில்லேயோ. தே =
3
அவர்கள். கீடா: = புழுவாகவும், பதங்கா = விட்டுப்பூச்சி
3 3 3 3
யாகவும் யதிதம்தந்த சூகம் = இவ்வாறு கூறப்பட்டப் பாம்பு, பல்லி, தேள், கொசுகு முதலிய கொடிய யோநியில் பிறந்து மாய்ந்து மடிவரேயென்கின்றது மாமறை.

இதனுல் விசேஷ வழிபாட்டால் பிரஹ்மலோக அடைவு உண்டாகுமென்பது உறுதி.

இதைப் பற்றிக் கீதையும் மொழிகின்றது.

3 3
சுக்ல கிருஷ்ணே கதிஹ்யேதே ஜகத: ஸாஸ்வதேமதே,
ஏகயா யாத்யநாவிருத்திம் அந்யயா வர்த்ததே புந: 11
, ப.கீ. 8-26

சுக்ல கிருஷ்ணே=தேவையான வழியும், பித்ருயான வழியும், யாருக்கு? உபாசகருக்கும் கருமிகளுக்கும். கதீ ஏதே = இவையிரண்டும் முறையாக வழியென்று (தெரிந்து கொள்ளவும்) சாஸ்வதே மதே =பழைமையானவை யென்று மறைகளில் மொழிந்திருக்கின்றன என்பது சாரம். இவை யிரண்டில் ஏகயாயாதி அநாவிருத்திம் = ஒரு வழியாக — தேவையான மார்க்கமாகச் செல்பவன், மீண்டும் திரும்பாத வழி (பிரஹ்ம லோகத்திற்கு,) (உபாசகனும்) அந்யயா ஆவர்த்ததே புந: = பித்ருயான மார்க்கமாக (செல்கின்ற கருமி) புந: — மீண்டும் (சம்சாரத்தை நோக்கி) ஆவர்த்ததே — திரும்புகிருன் என்பது கீதையின் கருத்து. ஒரு வழியில் செல்பவன் — உபாசகன் மேலான கதியையும், மற்ருெரு

வழியில் செல்பவன் கருமி கீழான பிறப்பையும் பெறுகிருனென்பதை கீதையின் பால் இனிது உணரலாம்.

தேவையான வழியை இருமுறை இசைத்ததும், உபகோசல வித்தையிலும், பஞ்சாக்கினி வித்தையிலும் உரைத்ததும், தியானத்தின் நிமித்தம் என அறிக. இதனுல் நியமமில்லை யென்பது தெற்றெனத் தெளிவாம். சூ. 31,

## 19, யாவத் அதி[4]கார அதி[4]கரணம்.

### அவதாரிகை.

வசிஷ்ட்டர், வியாசர் முதலிய அதிகாரம் அடைந்த ரிஷிகணங்கள். இவர்களுக்கு அரிச்சி மார்க்கமாக பிரஹ்ம லோகத்திற்கு அதிகாரமுண்டா, அல்லது இந்த உடலோடு அந்த உலகத்திற்குச் செல்லுகின்ருர்களா என்பதற்குச் சூத்திரம்.

**சூ. யாவத் அதி[4]காரம் அவஸ்த்திதிர் ஆதி[4]காரிகாணும் : 3—3—32**

யாவத், அதி[4]காரம், அவஸ்த்திதி:, ஆதி[4]காரிகாணும் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆதி[4]காரிகாணும் = வியாசர், வசிஷ்டர் முதலியோர்களுக்கு தத்வ ஞானத்தால் எல்லா வினைகளும் நீங்கி, யாவத் அதிகாரம் = பிராரப்த வினையிருக்கும் வரை, அவஸ்த்திதி: = இருப்பு உண்டு.

வி.உ. ஞானிகளுக்கு உடல் நீங்கிய பிறகு மீண்டும் பிறவி உண்டா இல்லையா என்பது சந்தேஹம். தத்வ ஞானத்தால் வினைகள் அழிந்த பிறகு அவர்களுக்கு பிறப்பு

உண்டா இல்லையா என்ற கேள்வி எங்ஙனம் எழக் கூடும் என்பாயாகில், அது முறையன்று. சமைத்த பிறகு சோறு ஆகிவிட்டதா இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை, மேலும் உணவு உண்ட பின்னர் திருப்தி வந்ததா, வரவில்லையா எனும் கேள்வி வராதது போல, தத்வ ஞானத்தால் அக்ஞானமும் அதன் காரியமாகிய பிறப்பும், இறப்பும் நீங்கின பிறகு ஞானிக்கு மீண்டும் ஜென்மம் உண்டா என்ற வினு எழக் கூடாததுதான், ஆனுலும்

புராண இதிஹாசங்களில் பிரஹ்ம ஞானிகளுக்கும் பிறப்பு இறப்புப் பேசப்படுகிறது. ஆகலின் அவர்களைப் பற்றி வினு எழுவதால் யாதொரு குற்றமும் இன்றன அறிக. வேதங்களை முழுதுமுணர்ந்த பகவான் வியாசர் விஷ்ணுவின் ஆணையால் கலிதுவாபர (சந்தி) இடையில் கிருஷ்ண துவைபாயனராக வந்தாரென்று புராணம் புகலுகின்றது என்றும், வசிட்டர் பிரம்மாவின் புதல்வராக இருந்தும் நிமியின் சாபத்தால் உடலை விட்டு ஒருவி, மீண்டும் பிரம்ம தேவன் ஆணையால் மித்திரை வருணன் என்னும் இருவருக்கும் புதல்வனுகப் பிறந்ததாகவும், பிருகு ஆதியிவர்களுக்கும் 'வருண யக்ஞத்தில் உற்பத்தி யென்றும், சநத்குமாரரும் பிரம்மனுடைய மானச புத்திரராயிருந்தும் இறைவன் வரப்பிரசாதத்தால் கந்தவேளாகப் பிறந்ததாகவும், தக்ஷன், நாரதர் முதலியோர்கள் ஞானிகளாயிருந்தும் இவர்களுக்கு ஜென்மம் மொழிந்திருக்கின்றது.

இவ்வாறு சுருதியின் மந்த்ரபாகத்திலும், அர்த்தபாகத்திலும் காணப்படுகின்றன. அங்கும் சிலர் உடலை விடுத்து மற்ருெரு உடலையெடுத்ததாகவும், சிலர் உடலோடிருந்து கொண்டு தனது யோக வலிமையால் வேறு வேறு உடலை யெடுத்ததாகவும், உரைக்கப்படுகின்றனர். ஆனுல் இவர்கள் அனைவரும் தத்வஞானத்தைப்

வழியில் செல்பவன் கருமி கீழான பிறப்பையும் பெறுகிருனென்பதை கீதையின் பால் இனிது உணரலாம்.

தேவையான வழியை இருமுறை இசைத்ததும், உபகோசல வித்தையிலும், பஞ்சாக்கினி வித்தையிலும் உரைத்ததும், தியானத்தின் நிமித்தம் என அறிக. இதனுல் நியமமில்லை யென்பது தெற்றெனத் தெளிவாம். சூ. 31,

## 19, யாவத் அதி[4]கார அதி[4]கரணம்.

*அவதாரிகை.*

வசிஷ்ட்டர், வியாசர் முதலிய அதிகாரம் அடைந்த ரிஷிகணங்கள். இவர்களுக்கு அரிச்சி மார்க்கமாக பிரஹ்ம லோகத்திற்கு அதிகாரமுண்டா, அல்லது இந்த உடலோடு அந்த உலகத்திற்குச் செல்லுகின்ருர்களா என்பதற்குச் சூத்திரம்.

**ஸூ. யாவத் அதி[4]காரம் அவஸ்த்திதி: ஆதி[4]காரிகாணும் : 3—3—32**

யாவத், அதி[4]காரம், அவஸ்த்திதி:, ஆதி[4]காரிகாணும் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆதி[4]காரிகாணும் = வியாசர், வசிஷ்டர் முதலியோர்களுக்கு தத்வ ஞானத்தால் எல்லா வினைகளும் நீங்கி, யாவத் அதிகாரம் = பிராரப்த வினையிருக்கும் வரை, அவஸ்த்திதி: = இருப்பு உண்டு.

வி.உ. ஞானிகளுக்கு உடல் நீங்கிய பிறகு மீண்டும் பிறவி உண்டா இல்லையா என்பது சந்தேஹம். தத்வ ஞானத்தால் வினைகள் அழிந்த பிறகு அவர்களுக்கு பிறப்பு

உண்டா இல்லையா என்ற கேள்வி எங்ஙனம் எழக் கூடும் என்பாயாகில், அது முறையன்று. சமைத்த பிறகு சோறு ஆகிவிட்டதா இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை, மேலும் உணவு உண்ட பின்னர் திருப்தி வந்ததா, வர வில்லையா எனும் கேள்வி வராதது போல, தத்வ ஞானத் தால் அக்ஞானமும் அதன் காரியமாகிய பிறப்பும், இறப்பும் நீங்கின பிறகு ஞானிக்கு மீண்டும் ஜென்மம் உண்டா என்ற வினா எழக் கூடாததுதான், ஆனாலும்

புராண இதிஹாசங்களில் பிரஹ்ம ஞானிகளுக்கும் பிறப்பு இறப்புப் பேசப்படுகிறது. ஆகலின் அவர்களைப் பற்றி வினா எழுவதால் யாதொரு குற்றமும் இன்றன அறிக. வேதங்களை முழுதுமுணர்ந்த பகவான் வியாசர் விஷ்ணுவின் ஆணையால் கலிதுவாபர (சந்தி) இடையில் கிருஷ்ண துவைபாயனராக வந்தாரென்று புராணம் புகலு கின்றது என்றும், வசிட்டர் பிரம்மாவின் புதல்வராக இருந் தும் நிமியின் சாபத்தால் உடலை விட்டு ஒருவி, மீண்டும் பிரம்ம தேவன் ஆணையால் மித்திரை வருணன் என்னும் இருவருக்கும் புதல்வனாகப் பிறந்ததாகவும், பிருகு ஆதி யிவர்களுக்கும் 'வருண யக்ஞத்தில் உற்பத்தி யென்றும், சநத்குமாரரும் பிரம்மனுடைய மானச புத்திரராயிருந்தும் இறைவன் வரப்பிரசாதத்தால் கந்தவேளாகப் பிறந்ததாக வும், தக்ஷன், நாரதர் முதலியோர்கள் ஞானிகளாயிருந்தும் இவர்களுக்கு ஜென்மம் மொழிந்திருக்கின்றது.

இவ்வாறு சுருதியின் மந்த்ரபாகத்திலும், அர்த்த பாகத்திலும் காணப்படுகின்றன. அங்கும் சிலர் உடலை விடுத்து மற்றொரு உடலையெடுத்ததாகவும், சிலர் உடலோடிருந்து கொண்டு தனது யோக வலிமையால் வேறு வேறு உடலை யெடுத்ததாகவும், உரைக்கப்படு கின்றனர். ஆனால் இவர்கள் அனைவரும் தத்வஞானத்தைப்

பெற்றவர்களென்று பேசப்படுகிருர்கள். அதனல் இவர்களுக்கு மறு பிறப்பு உண்டா இல்லையா யென்ற கேள்வி யெழுவதால் முரனென்றுமில்லை. இவ்விஞவிற்கு விடை, அவர்களுக்கு மறுபிறப்பில்லை. ஞானிகளாக இருப்பினும் உலகமக்களைக் கரையேற்றும் பொருட்டு அவர்கள் பிராரப்த வினை விரிவுபடுத்தி யிறைவன் அவர்களுக்கு ஆயுளையும் ஆரோக்கியத்தையும் அளித்திருக்கிருன். எங்ஙனம் மந்திரி பதவி யொழிந்த போதினும் அடுத்த மந்திரி சபை அமைக்கும் வரை மந்திரியாக இருக்க மாநில ஆளுநர் அதிகாரம் அளிக்கிருரோ அது போல் அகில உலகத்தையும் ஆளும் இறைவன் ஞானிகளுக்கு அதிகாரத்தை யளித்திருக்கிருனென்று அறிக. எவ்வாறு சூரியன் ஞானியாக இருந்தும் ஆயிரம் யுகம் வரை உலகத்தை விளக்கிக்கொண்டு முடிவில் அதிகாரம் முடிந்ததும் உதியாமலும் ஒடுங்காமலும் முக்தியை அடைகிருன் என்கின்றது சுருதி — அத[2] தத ஊர்த்வம்[4] உதேத்ய[3] நைவோதேதா[3] நஅஸ்தமேதா ஏக ஏவ மத்யே[4] ஸ்திதா[2],, சா. உ. (3-11-1) அத = உயிரினிங்கள் ஒடுங்கின பிறகு, தத ஊர்த்வம் = கதிரவன் ஆரப்தவினையும் அழிந்த பின்னர், நைவ உதேதா = உதயமாகிறதில்லை. நஅஸ்த மேதா = அஸ்த மனம் — மறைகிறதுமில்லை. ஏகல ஏவ மத்யே ஸ்த்திதா = பிரஹ்ம சொரூபமாக இருக்கிருன் என்பது மறையின் பொருள்.

இன்னும் இகத்தில் வாழ்கின்ற இனிய ஞானிகள் ஆரப்த வினையை அநுபவித்ததும் கைவல்ய நிலையயடைகின்றனர். ''தஸ்ய தாவதேவ[3] சிரம்[1] யாவந்ந விமோக்ஷ்யே அத[2] சம்பத்ஸ்யே,, சா.உ. (6-14-2) நிகழ்கால ஞானிக்கு

ஆரப்தவினை யழிவது தான்நேரம். வினைப்பயனை நுகர்ந்த உடனே கைவல்ய முக்தியை அடைகிருன் என்று ஆரணம் அருளுகின்றது.

அதுபோல ஞானநிலை நன்கு உணர்ந்தவர்களும் இறைவன் இணைத்த அதிகாரம் இருக்கும் வரை மக்களுக்குத் தத்வ ஞானத்தை யளித்துவிட்டு முடிவில் பிரஹ்மத்தில் கலந்து கொள்வர். உலகத்தில் ஒரு ஜீவன் இருக்கும் வரை தத்வ ஞானியும் உடலோடு இருக்கவேண்டும். எங்ஙனம் நோய் உள்ளளவும் வைத்தியரும், மருந்தும் தேவையோ அதுபோல் ஞானியும், ஞானமும் வேண்டும் என்பது கருத்து.

ஒரு பிறவியில் செய்த வினை முடிந்த போதினும் உடல் இருக்கிற பொழுதே ஒரு வீட்டை விட்டு மறு வீட்டையடைவது போல் ஒரு உடலை விட்டு மறு உடலை யெடுப்பதால் தோஷமொன்றுமில்லை.

எங்ஙனம சுலபையென்னும் பெயரையுடைய பிரஹ்ம வாதினி ஜனகமன்னனேடு வாதிட வேண்டுமென்று சொந்த உடலைவிட்டு மன்னன் உடலில் புகுந்து விவாதம் பண்ணி மீண்டுந்தனது உடலையடைந்தாக ஸ்மிருதி விளம்புகின்றது. எனவே சந்தேகமுண்டாவதில் குற்றமொன்றுமில்லை.

இச்சங்கை யெழுவதற்குக் காரணமில்லை எதனுலோ வெனின்? அக்ஞானத்திற்கு இரண்டு அம்சங்கள். ஒன்று (ஆவரணம்)- மறைப்பு, மற்ருென்று விக்ஷேபம். ஆவரணம் ஞானத்தால் நீங்கி விடுகிறது. எவ்வாறு ஏற்றியதீபத்தால் இருள் நீங்குகிறதோ அவ்வாறு என்று அறிக. மற்ருென்று-விக்ஷேபம்-பிராரப்தம் போகத்தால் அழிகிறது. எனவே ஞானம் உண்டான பிறகும் சரீரம் இருக்கும் என்பது தெளிவு. ஆகையால் ஞானத்தின் பல ரூப மோக்ஷத்தில்

4 3 3 3 2
எவ்வித மாறுபாடுமில்லை. பித்யதே ஹிருதய கிரந்தி.,, மு. உ. (2-2-8) ஞானத்தினுல் அக்ஞானமும் அதன் காரியமு மாகிய இதய முடிச்சுக்கள் அழிகின்றன என்கின்றது சுருதி.

அங்ஙனம் ஸ்மிருதியுங் கூறுகின்றது :-

2 4 3 4 3 4
யதை தாம்சி சமித்தோஅக்நிர்பஸ்மஸாத் குருதே
3 3 2
அர்ஜுந, ஞாநாக்நி சர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேததா

2 4
'கீதை. பொருள் (ஹே) அர்ஜுந.யதா=எவ்வாறு. ஏதாம்சி
4 4
விறகுகளை. சமித்தோ அக்நி = கொழுந்து விட்டு எரியும்
4
நெருப்பு. பஸ்மஸாத் குருதே = எரித்து சாம்பலாக ஆக்கு
2
கின்றதோ. ததா = அவ்வாறு ஞானமென்னும் அக்கினி. சர்வகர்மாணி = எல்லா வினைகளையும் பஸ்மஸாத் குருதே= எரித்து நீருக்குகின்றது, என்பது கீதையின் திரண்ட பொருள்.

அடுப்பில் நெருப்பை வளர்ப்பதற்கு குழல் வைத்து ஊதுவது வழக்கம். காற்றினுல் நெருப்பு வளரும். அது போல் ஞானமென்னும் நெருப்பு சிரவணம் மனனம், நிதித்யாசனமென்னும் குழல் கொண்டு ஊதும் போது வளர்கின்றது. இதனுல் சமித்தோ. அக்கினியென்ருன் அச்சுதன். இதனுல் வினைகள் முழுவதும் ஞானத்தால் வெந்து நீருகின்றன என்பது இனிது புலனும்.

நெருப்பால் சிலயெரிந்தன சில எரியவில்லையென்பது பொருந்தாது : கருமம், யோகம், பக்தி, -யிவையெல்லாம் வேறு தேசத்தில் வேறு காலத்தில் பயனையளிக்கின்றன. ஆனுல் ஞானமோ அவ்வாறன்று, ஞானத்திற்குப்

பலன் உடனே கிடைக்கின்றது. உலகத்திலும் இதை யுணரலாம். நாள் சம்பளம் நாள்தோறும் கிடைக்கும் ஊதியம் போல, மாசச்சம்க்ளம் மாசந்தோறும் கிடைக்கும் ஊளதியம் போல என்று அறியவும். ஆகலின் ஞானப்பயனை முக்தியில் ஐயம் கொள்ளலாகாது. ஐயம்- சந்தேகம். ',யத்ஸாக்ஷாத் அபரோக்ஷாத் பிரஹ்ம,, பிரு.உ (3-4-1) பிரஹ்மம் நமது வடிவமாக இருப்பதால் கை கண்டபலன் என்பது மறையின் பொருள். ''தத்வமசி'' இவ்வாக்கிய மெல்லாம் பலன் உடனே யுண்டாகின்றது என்பதை யுணர்த்துகின்றன, எனவே ஞானிக்கு உடனே கைவல்ய அடைவில் ஐயமில்லை. கைவல்யம் — வீடு. சூ 32.

4 4
## 2. அக்ஷரத்ய அதிகரணம்

*அவதாரிகை.*

இவ்வதிகரணத்தில் அக்ஷரபிரஹ்மத்திற்கு அளவு கூறும் சப்தத்தை விலக்குகின்றது :-

4 4 3 4 4
**சூ. அக்ஷரதியாம் த்வரோத : சாமாந்ய தத் பாவாப்யாம்**
3 3
**ஔபசதவத்ததுக்தம் : 3—3—33**

4 4 3 4 4
அக்ஷரதியாம், து, அவரோத; சாமாந்யதத்பாவாப்யாம்,
3
ஔபசதவத், தத்உக்தம் என்று பிரிக்கவும்.

4
ப.உ. அக்ஷரதியாம் = பிரஹ்ம சம்பந்த வாக்கியங் கள் அனைத்தையும் எல்லா இடத்திலும் அவரோத: =
3 4 4
ஏற்றுக் கொள்ள வேண்டும். சாமாந்ய தத்பாவாப்யாம் = (ஏனெனின்) துவைதத்தை நீக்கும் வாயிலாக பிரஹ்

மத்தைக் கூறுவது எங்கும் சமானமாக இருக்கிறது. மேலும் அப்பிரஹ்மம் யரண்டும் ஒரு படித்தாகக் காணப் படுகிறது. ஔபசதவத் = உபசதமென்னும் யாகத்தில் மொழியும் மந்திரம் எல்லா இடங்களிலும் ஒன்ருக இருப் பது போல என்று அறிக. ததுக்தம் = இது ஜைமிநி சூத்திரத்தில் செப்பப் பட்டிருக்கிறது. செப்புதல்—கூறுதல்.

வி.உ. எவ்விடத்தில் பிரஹ்ம ஞானத்தை யளிக்கும் வாக்கியங்கள் இருக்கின்றனவோ அவை யனைத்தும் துவைதத்தை விலக்குகின்றனவா, விலக்க வில்லையா என் பது ஐயம். இவ்வாறு ஐயம் எழுந்ததால் தாசாம் என்ற மொழியால் ஐயம் காணப்படுகிறது. வாஜச நேயி உப நிஷத்தில் கார்க்கி யாக்ஞ வல்க்ய சம்வாதம் வருகின்றது. அவண் அவள் அக்ஷர பிரஹ்மத்தைப் பற்றி வினவினள்.

3 3
அதற்கு அவர் — ''ஏதத்வைதத் அக்ஷரம் கார்க்கி பிராஹ்
4 3 3 3
மணு அபிவதந்தி அஸ்த்தூலம் அநணு அஹ்ரஸ்வம் அதீர்க்
4
கம் அலோஹிதம் அஸ்நேஹம்''.

பிரு.உ. (3-6-8) என்கின்றது சுருதி. (ஹே)
3 3
ஏகார்க்கி! ஏதத் =இந்த. தத் அக்ஷரம்=அந்த பிரஹ்மத் தை. பிராஹ்மணு = ஞானிகள். அஸ்த்தூலம் = மெலிவு இன்றியதாயும், அநணு = சூக்குமம் இன்றியதாயும், அஹ்ரஸ்வம் = குறில் இன்றியதாயும். அதீர்க்கம் =நெடில் இன்றியதாயும். அலோஹிதம் = சிகப்பு வர்ணமின்றிய தாயும். அஸ்நேகம் = ஈரமின்றியதாயும் கூறுகின்றனர். குறில், சிறியது. நெடில் = நீளம். அலோஹிதம் என்ப தால் குணத்தையும் அஸ்நேகம் என்பதால் ஐம்பூதத்தை யும் விலக்குகின்றன. என்பது சுருதியின் கருத்து.

இம்மாதிரி அதர்வண வேதத்திலும் அருளப் பட்டிருக்கின்றது. அது வருமாறு "அத[2]பரா யயாதத் அக்ஷரம் அதி[4 3]கம்யதே யத்தத் அத்ரேஸ்[3]யம் அக்ராஹ்[3]யம் அகோ[3]த்ரம் அவர்ணம்." மு.—உ. (1-1-5) என்கிறது சுருதி.

அத[2] = அதன் பிறகு. பரா யயா = பரவித்தையால் (பரஞானம்) தத் அக்ஷரம் = அந்த பிரஹ்மம் (எவ்வகைப் பட்டது?) யத்தத்=அப்படிப்பட்ட பிரஹ்மம். அத்ரேஸ்[3]யம்= த்ருஸ்யம் அற்றது. திருஸ்யம்=நாம ரூபம் இன்றியது. இதனுல் கண்ணுல் பார்க்க இயலாது என்பது கருத்து. இச்சொல் ஞானேந்திரியம் (பொறிகள் ஐந்தையும்) போக் குகின்றது. அக்ராஹ்யம் = கிரஹணம் அற்றது. கிரஹணம் — கரத்தால் பிடிப்பது. அக்ரஹணம் = கரத்தால் பற்ற இயலாதது. இதனுல் இஃது கர்மேந்திரியங்களுக்கு விஷ யம் அன்று என்பது இனிது புலனும். இஃது — ஆத்மா. அகோத்ரம் = கோத்திரம் இன்றியது. கோத்திரம் — குலம். அது இன்றியது என்பது பொருள். அவர்ணம்=வர்ண மின்றியநு. வர்ணம் பிராஹ்மண,க்ஷத்திரியாதி வர்ணங்கள். இவை இன்றியது. வர்ணம்=வெண்மை, செம்மை, கருமை முதலியவை. இவை இன்றியது பிறஹ்மம் என்பது பொருள்.

இம்மாதிரி வேறுகிளைகளிலும் விசேஷமாக துவைதங் களை விலக்கி அது வாயிலாக அக்ஷரபிரஹ்மத்தை அறிவிக்கப்படுகிறது. அதில்சில இடங்களில் மேலே சொன்னதைப் பார்க்கிலும் அதிகமாக விலக்கப்பட்டிருக் கிறது. எங்கு எத்தனை சொற்கள் மூலமாக துவைதம் விலக்கப் பட்டிருக்கிறதோ அத்தனை சொற்களையும் ஆங்கு கொள்ள

வேண்டுமென்பது குறிப்பு. ஏனெனின் எல்லா இடங்களிலும், எல்லா சொற்களும் துவைதத்தை விலக்கி அத்வைதத்தை அருளுவதில் தாத்பர்யம். அத்வைதம்—பிரஹ்மம். அருள்-வது—சொல்வது. சாமான்யம் — பொது. அந்த பிரஹ்மம் எங்கும் அபின்ன ரூபமாகக் காணப்படுகிறது. அபின்னம்—ஒன்றும் தன்மை. "ஆனந்தாதய[3] : பிரதானஸ்ய[4]" என்னும் சூத்திரத்தில் விரிவாக இதைப்பற்றி வியாக்யானம் செய்யப் பெற்றிருக்கிறது. அதில் விதிவடிவ விசேஸணங்கள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன.

இங்கு நிஷேதரூப விசேஷணங்கள் விசாரிக்கப்படுகின்றன. இவ்விரண்டு அதிகரணத்திலும் விசேஷ பேதமிருக்கிறது. மீண்டும் இங்கு விசாரிப்பது விரிவுபடுத்துவதற்கு. ஔபசதத்திற்குச் சமானம் இது ஒரு திருஷ்டாந்தம். எங்ஙனம் ஜமதக்னி யென்பவனுல் செய்யப்பட்ட யாகம், நான்கு நாளில் முடியும் யாகம், அஹீனம் என்னும் பெயருடைய யக்ஞம். இதற்குரிய மந்திரங்கள் எல்லா இடத்திலும் ஒரு படித்தாக வருகிறது, அது போல் அக்ஷரபிரஹ்மத்திற்கு அதீனமாக எல்லா வாக்கியங்களும் இருப்பதால் அவ்விசேடமனைத்தும் துவைத விலக்குக்குத் துணேபுரிகின்றன என்று அறிக. சூ. 33,

## 21. இயத்[4] அதிகரணம்

### *அவதாரிகை.*

முண்டக சுருதியிலும் சுவேதா சுவதர சுருதியிலும் இரு பறவை யென்னும் உவமானத்திஞல் ஜீவனேயும், இறைவனேயும் உடலுக்குள் இருப்பதாக உரைக்கப் பெற்றிருக்கிறது. கடோஉபநிஷத்தில் நிழலும் வெயிலும் போல் சரீரத்துக்குள் இருப்பதாக மொழிந்திருக்கிறது. இந்த மறை

களில் எந்த ஞானத்தை மொழிந்திருக்கிறதோ, இவை யிரண்டும் ஒன்ரு அல்லது இரண்டா என்பதற்குப் பதில் சூத்திரம் :-

### ஸூ. இயத் ஆமநநாத் : 3—3—34

இயத் = பரிச்சின்னம் — அளவு.

ப. உ. வித்தை யொன்றுதான். ஏனெனின், 'து[3]வா சுபர்ணு' 'ரிதம் பி[3]பந்தௌ' என்னும் இருமந்திரங் களிலும் இப்படியன் என்று பரிச்சின்னம் ஒன்றுதான் என்று ஆம்நாநாத் — சொல்லப்பட்டிருக்கிறது.

வி.உ. 'து[3]வா சுபர்ணு ....' அழகிய இறக்கையை யுடையவர்களாகவும், தொழிலாளி முதலாளிகளாகவும், எப்பொழுதும் இணைந்து இருப்பவர்களாகவும், இருவர் களும் தோழர்களாகவும், இவ்வாறு இருபறவைகள் ஒரு உடல் என்னும் மரத்தில் வாழ்கின்றன. இவைகளில் ஒன்று ஜீவனென்னும் பறவை. வினைப்பயனை நுகர்கின்றது, மற்றொரு இறைவன் என்னும் பறவை. உண்ணுமலும் உறங்காமலும் பார்த்து கொண்டிருக்கிறது.

இம்மாதிரி வேதாந்த பிரகரணத்தில் அதர்வண மந்திரமும் சுவேதா சுவதர மந்திரமும் மொழிந்திருக் கின்றன. மேலும், 'ரிதம் பிபந்தௌ' என்னும் மந்திரத்தை யுணர்ந்தவர்கள் தேகத்துக்குள் புத்தி என்னும் குகையில் இருந்து கொண்டு இன்ப துன்பங்களை நுகரும் நிழலுக்கு நிகரான ஜீவனும் ஆதபனுக்கு நிகரான ஈசனும் வேறு வேறு தன்மையை யுடைய இரு தத்வங்கள் இருக்கின்றன. இவ்விஷயத்தை மும்முறை நசிகேதா வென்னும் நெருப்பை பஞ்சாக்கினி வித்தையை வழிபடுபவர்களும் கூறுகின்றனர்.

இவ்வாறு கடவல்லி கிளேகளே யோதுபவர்கள் உரைக்கின்றனர்.

இங்கு வித்தை யொன்ரு அல்லது பலவா என்று சந்தேகம் உண்டாகின்றது. என்ன உனக்குத் தோற்றுகிறது. பூ. ப. வித்தை பல என்பது என்மதம். எதனுலோ வெனின்?
3
விசேஷமாகக் காணப்படுகிறது. ''துவா சுபர்ணு'' இங்கு ஒருபறவை யுண்பதாகவும், மற்ருெரு பறவை யுண்ணுத தாகவும் காணப்படுகிறது. அங்ஙனமிருக்க, 'ரிதம் பிபந் தெள' இவண் இரண்டும் உண்பதாகத் தெரிகிறது. ஆகையால் வேத்யம் — அறிபடும் பொருள் இருவிதமாக இருப்பதால் வித்தையும் பல என்பதில் என்னேக் குற்றம்? ஒன்றுமில்லே யென்று உணர்க.

சித்தாந்தி — இவ்வாறு பூர்வபட்சி யுரைத்ததும், வித்தை ஒன்றுதான். எதனுல் என்பாயாகில், இருமந்திரங் களிலும் இவ்வளவு என்று கூறப்பட்ட இரு பொருளேயும் அபின்னமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஜீவன் இறைவன் என்று உரைத்த போதிலும், வேற்றுமைக்காக மொழிந்த தன்று.

இவர் இருவருக்குமுள்ள பேதம் விவகாரத்தின் பொருட்டேயன்றி யுண்மையாக இல்லே. 'துவாசுபர்ணு' என்னுமந்திரத்தால் 'பரமாத்மாவிற்கு பசிதாகமில்லே
3
யென்றும், 'ஜுஷ்டம் யதா' என்னும் மந்திரமும் சோக மோகத்திலிருந்து விலகிய புருஷன் இறைவனே யடைகிருனென்று பரமாத்மாவையே விளக்குகின்றது.

2
ரிதம் பிபந்தெள என்னும் மந்திரமும் சத்திரி நியாயம் போன்று ஜீவன் உண்பதை பரமாத்மாவின் மேல் கற்பிக்கப்

படுகிறது. சத்திரி —குடை. ஒருவன் குடை பிடித்து போக, அவனைச் சார்ந்த அனைவரையும் குடைக்காரர்கள் என்றது போலறிக. அங்ஙனம் ஒப்புக் கொள்ளாது போனல் தருமங்களுக்கும், அதருமங்களுக்கும் அப்பால் பட்டதாயும், சுவர்க்க நகரங்களுக்கு அதீதமாயும், பாவ புண்ணியங்களால் பற்றுததாயும் எது இருக்கிறதோ அதை நீர் அறிந்தால் எனக்கு அருள்வீராக என்று நசிகேதன் வினவிய வினவிற்கு முரணுகும்.

3

இதைப்பற்றி 'குஹாம் பிரவிஷ்டௌ' என்னும் சூத்திர உரையில் விரிவாக விளம்பப்பட்டிருக்கிறது. இதனுல் வேத்யத்திற்குப் பேதமில்லை, வேத்யத்திற்கு பேதமில்லாததால் வித்தையிலும் பேதமில்லை. எனவே வித்தையொன்று. வேத்யம் — அறிபடும் பொருள்.

முன்னும் பின்னும் எண்ணிப் பார்க்கும் பொழுது அதர்வணம், சுவேதாசுவதரம், காடகம் என்னும் மூன்று சுருதிகளிலும், பிரஹ்ம வித்தை தான் காணப்படுகிறது. 'வாக்கிய சேஷம்' எஞ்சிய வாக்கியம் — யாகம் பண்ணுகின்றவர்களுக்கு எது பாலமாக இருக்கிறதோ, எது அக்ஷரவடிவ பிரஹ்மமோ என்ற வாக்கியமெல்லாம் பிரஹ்ம விஷயமாகும். ஜீவனை சொன்னது ஒன்றென்பதற்காக. அந்நியார்த்தத்திற்கன்று. இதனுலும் வித்தை யொன்றென்பது இனிது புலனும். சூ. 34,

4

22, அந்தராதி கரணம்.

*அவதாரிகை.*

ஐயமின்றியும் அபரோக்ஷமாகவுளதுமான எந்த ஆன்மா எல்லா இடங்களிலும் உள்ளேயிருக்கிறதோ அந்த

ஆன்மாவை யெனக்கு அருள வேண்டுமென யாக்ஞ வல்க்கியரிடம் உஷஸ்தன் என்னும் சாக்ராயணன் வினவினன். அதற்குப் பதிலாக யாக்ஞ வல்க்யர் ஏசாக்ராயண! பிராணன் முதல் எல்லாக் கருவிக்குள்ளும் இருந்து அவைகளை இயக்கிக் கொண்டு எது இருக்கிறதோ, எது அனைத்து பூதங்களுக்கும் சாக்ஷியாக இருக்கிறதோ அதை ஆன்மாவென்று உணர்வாயாக ' ஏன்றார். மேலும் கஹோலன் கேட்டக் கேள்விக்குப் பதிலாக பசிதாகமின்றிய ஆன்மாவை யருளினர். யாக்ஞ வல்க்கியர். இம்மாதிரி இவ்விரண்டு மந்திரங்களிலும் வித்தை யொன்ரு அல்லது பலவா? என்ற வினவிற்கு சூத்திரம்: -

**ஸூ· அந்தரா பூத க்[4]ராம[3] வத் ஸ்வாத்மந : 3—3—35**

அந்தரா, பூத கிராம[4], வத்[3], ஸ்வாத்மந: என்று பிரிக்கவும்.

ப.உ. அந்தரா = (மேலே சொன்ன சுருதிகளில் ஸ்வாத்மந: = ஆன்மா) உள்ளேயிருப்பதாக உரைத்திருக்கிறது. இதனல் வித்தை யொன்று. பூதகிராம வத் = எங்ஙனம் எல்லா பூதங்களிலும் ஒரே ஆன்மா உரைக்கப் பெற்றிருக்கிறதோ அது போலறிக.

வி.உ. ய:சாக்ஷாத் அபரோக்ஷாத் பிரஹ்ம,, பிரு-உ. (3-4-'1) ய:ஆத்மா சர்வாந்தர:' இதற்கு உரை முன் மொழிந்திருக்கிறது. இம்மாதிரி உஷஸ்த்தன், கஹோலன் என்னும் இருவருடைய வினக்கள் மூலமாக வினவிய வித்தை யொன்ரு, அல்லது பலவா என்று சந்தேக முண்டாகிறது. பூ.ப. வித்தை பல, என்று தெரிகிறது. ஏனெனின் இரு முறை வருவதால். ஏற்றந் தாழ்வு இல்லாது போனல் இரு

முறை வருவதற்குப் பயனென்றுமில்லை. எங்ஙனம் 'யஜதி' என்னும் சொல் இருமுறை வந்தால் கருமத்தில் வேறு பாடு காணப்படுகிறதோ, அதுபோல் அப்யாச பலத்தால் வித்தையிலும் பேதம் என்பது என்மதம்.

சி. இவ்வாறு மொழிந்ததும் — பதில் — ஆன்மா எங்கும் நிறைந்தது என்று சொல்லியிருப்பதாலும், இரு இடத்திலும் ஒருவிஷயமாவதாலும் வித்தை யொன்றென்று உணர வேண்டும். எல்லா இடத்திலும் ஆன்மா உள்ளே யிருக்கிறதென்று இரு மறைகளிலும் பொதுவாகக் கூறப் பட்டிருக்கிறது. மேலும், இருவர் வினவியதும் ஒரு ஆன்மாவைப் பற்றிதான். ஒரு உடலில் இரு ஆன்மா நிறைந்திருக்கிறது என்பது பொருந்தாது.

'பூத கிராமவத்' எவ்வாறு ஐந்து பூதத்தின் சமுதாயதேகத்தில் நிலத்தைப் பார்க்கிலும் நீர் உள்ளீடாக வும், நீரை நோக்கும் பொழுது நெருப்பு உள்ளீடாகவும், நெருப்பை எண்ணும் போது காற்று உள்ளீடாகவும், இவ்வாறு ஒன்றை விரும்புகிற போது மற்றொன்று உள்ளே யென்பது தெரிந்த போதினும் இவைகளுக்கு முக்கியமான ஆந்தரத்வம் இல்லை. இன்னும் ஆந்தரத்வம் இருப்பினும் சர்வாந்தரத்வம் இல்லை. அதுபோல் இங்கும் உணர வேண்டும்.

அல்லது வேறு விதமாகவும் பொருள் கொள்ளலாம்- பூத கிராமவத், இதற்குப் பொருள் இன்னொரு மறையும்

3

இயம்புகின்றது — ''ஏகோதேவ:'' எல்லா உயிர்களிடத் திலும் இருப்பவன் ஒரு தேவனே. அவன் எங்கும் நிறைந் திருப்பவன். சர்வ பூதாந்தராத்மா, எவ்வுயிர்களிலும் உள்ளி ருப்பவன். இம்மந்திரத்தில் எல்லா உயிர்கள் உள்ளிலும் ஒரே ஆன்மா பரவியிருந்ததாக பகர்ந்திருக்கிறது. இதனால்

இரண்டு பிராம்மணத்திலும் ஒரு ஆன்மாவிற்குத் தான் சர்வ வியாபகத்வம் சொல்லியிருக்கிறது. ஆகையால் வித்தை யொன்றென்பது தெளிவு. சூ. 35,

*அவதாரிகை.*

இங்கு எதிரியின் சங்கையை யுண்டு பண்ணி அதற்குச் சமாதானம் சூத்திரம்:-

**சூ. அந்யதா[2] பேதாநுப[4] பத்திரிதிச்[3] சேந் ந[3] உபதே சாந்தரவத் : 3—3—36**

அந்யதா[2], பேதாநுபபத்தி; இதி, சேத், ந உபதேசாந்தரவத். என்று பிரிக்கவும்-

ப. உ. அந்யதா =வித்தையில் வேற்றுமை யொப்புக் கொள்ளாது போனுல். பேதாநுபபத்தி:=சுருதியில் சொன்ன வேற்றுமை பொருந்தாமல் போகும். இதிசேத்ந=இவ்வாறு கூறுவாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், உபதே சாந்தரவத் = சாந்தோக்யத்தில் ஒன்பது தடவை தத்வமசி யென்று ஓதியும் பேதமில்லாதது போல் இங்கும் உணர்க.

வி. உ. வித்தையின் வேற்றுமையை யேற்றுக் கொள்ளாது போனுல் மறைகளில் வருகின்ற மந்திர பேதத்திற்குப் பொருந்தாத தன்மை வரும். அதற்குப் பரிகாரம் வேண்டும் என்பது பூர்வபக்ஷியின் கதனம். ஆட்சேபமென்பது கருத்து. சி. இது ஒரு குற்றமில்லை. ஏனெனின், அந்நிய உபதேசம் போல என்று அறிக. எங்ஙனம் எனின் தாண்டி சுருதியின் ஆருவது அத்தியாயத் தில் "ச ஆத்மா தத்வமசி,, என்று பிதா உத்தாலகர் புதல்வனை நோக்கி ஒன்பது முறை யோதின போதினும் வித்தையில் வேற்றுமை யில்லை.

வேற்றுமை யில்லாததற்குக் காரணமென்னே? தொடக்கத்திலும் முடிவிலும் ஒரு பொருளேயே உணர்த்தப் பட்டிருக்கிறது. அதனுல் வேற்றுமை இல்லை யென்பது குறிப்பு. ''பூய ஏவ, ஹேபகவன்! தாங்கள் எனக்கு மீண்டும் ஞானத்தையருளல் வேண்டும் என்று ஒரு பொருளேயே மீண்டும் மீண்டும் மொழிவதாகத் தெரிகிறது. மேலும் அந்நிய சங்கையை அகற்றுதல் மூலமாக அடிக்கடி யுபதேசம் பொருந்தும். இதனுல் வித்தையில் வேற்றுமை யில்லை யென்பது தெளிவு. அது போல் இங்கும் கேள்வியில் ஒற்றுமை இருப்பதால் வித்தையில் வேற்றுமை பொருந்தாது.

'அதோ அந்யத் ஆர்த்தம்' ஆத்மாவிற்கு வேருனவை யனைத்தும் அழிவுடையவை. இம்மாதிரி முடிவிலும் ஏருவடிவமாதலால் தொடக்கமும் முடிவும் ஒருபொருளேயே உணர்த்துகின்றன. ''யதேவ சாக்ஷாத்,, இந்த மந்திரத்தில் ஏவ என்னுஞ் சொல் முந்திய கேள்வியில் உள்ள பொருளேப்பிந்திய விடையில் கொண்டு பொருத்துகின்றது.

முந்திய பிராஹ்மணத்தில் காரியகாரணத்திற்கு வேருக ஆன்மாவை இருப்பு ரூபமாக அறிவித்திருக்கிறது. பிந்திய பிராஹ்மணத்தில் அதைத்தானே பசிதாக மின்றியதாகப் பகர்கின்றனர். இப்படி முன்னும் பின்னும் விசாரித்துபார்க்கும் பொழுது வித்தை யொன்றென்பது உறுதியாகத் தெரிகிறது. சூ. 36,

## 23 வியதிஹாராதிகரணம்.

ஜீவன் ஈசுவரன் இவர் இருவருக்கும் ஒன்றுக்கொன்று உள்ள விசேஷண விசேஷ்யங்கள் வியதிஹாரமெனப்படும். இந்த வியதிஹாரம் சுருதியால் சொல்லப்

பட்டதால் இழிந்த பொருளில் உயர்ந்த எண்ணத்தை வைக்கும் பொழுது அது பயனைத்தரும் என்பதற்கு சூத்திரம்:

## சூ. வியதிஹாரோ விசிம்ஷந்தி ஹி இதரவத் : 3—3—37

வியதிஹாரோ, விசிம்ஷந்தி ஹி இதரவத் என்று பிரிக்கவும்.

ப.உ. இதரவத் = (முற்றறிவுடையன், எங்கும் நிறைந்தவன், இன்னருள் புரிபவன் என்னும் நற்குணங்களுக்குச் சமானன்) வியதிஹார: = இந்த வியதிஹாரமும் உபாசனையின் நிமித்தம் உரைக்கப் பெற்றிருக்கிறது.

வி.உ. தத்யோ அஹம் ஸோ அஸௌயோ அஸௌ ஸோ அஹம்'' எந்த நான் அதுதான் ஆதித்ய மண்டலத்திலுள்ள புருஷன், எவன் ஆதித்திய மண்டலத்தில் இருப்பவனோ அவன் தான் நான். இம்மாதிரி ஆதித்திய புருஷனை உறுதி செய்து, ஐதரேய உபநிஷத்தை யோதுகின்றவர்களும் ''த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம்வைத்வம் 'அஸி' இதி என்று கூறுகின்றனர். ஹே தேவதே! நீதான் நான், நான்தான் நீயென்று உரைக்கின்றனர். இங்கு ஐயமுண்டாகிறது. என்னை ஐயம்?

இந்த வியதிஹாரத்தினல் — விசேஷண விசேஷ்ய தன்மையால் இவர் இருவரையும் இருவராகப் பார்க்க வேண்டுமா அல்லது ஒருவராகப் பார்க்க வேண்டுமா என்பது சந்தேகம். இருவர் — ஜீவனும் ஈசனும். உன் மதமென்ன? இரண்டும் ஒன்று தான். சி. இருக்கட்டுமே பூ.ப. அங்ஙனமாயின், ஜீவன் ஈசனகும் பொழுது ஜீவனுடைய குணங்கள் முழுதும் ஈசனையடைந்து ஜீவன் சிறந்து வாழ்வான், அதுபோல் ஈசனுடைய குணங்கள் முழுதும்

ஜீவனை யடைந்து ஈசன் குறைந்து வாழ்வானென்னும் குற்றம் வருமே யென்பாயாகில், சி. வராது வலியவன் மெலியவனைத் தன்வயமாக்குவது போலும், நிறைந்த அம்சம் குறைந்த அம்சத்தை தன்வயமாக்குவது போலும் பத்துடையான் எட்டுடையானை வெல்வது போலும், கடல் நீரைச்சாக்கடை நீர் தன்வயமாக ஆக்க முடியாதது போலும் ஈசன் ஜீவனுக்குள் கலந்ததனுல் ஜீவனுக மாட்டான் என்பது உறுதி.

இறைவனுக்குரிய சிறந்த குணங்களும் ஜீவனுக்குரிய இழிந்த குணங்களும் உபாசனையின் நிமித்தம் சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. உண்மையில் உயர்வும் தாழ்வும் அவித்தைக்கும் அந்தக் கரணத்திற்குமாம். பிள்ளைப் பூச்சி சேற்றில் திரிவதால் சேருகாது, கடைந்த வெண்ணை மோரில் கிடப்பதால் மோராகாது. அதுபோல் இறைவன் எங்கிருப்பினும் அங்கு அதுவாக ஆகான்.

மேலும் நாங்கள் ஏகத்வ வாதிகள்,- ஒன்றென்று உரைக்கும் தன்மையர்கள். குற்றமற்ற இறைவனிடத்தில் குற்றம் பார்க்கும் இயல்பு எங்களிடத்தில் இல்லை. எனவே வியதிஹாரம் பிரஹ்மத்தைத் தோஷமுடையாதாகச் செய்யாதென்பது கருத்து. சூ. 37,

## 28, சத்யாதி அதிகரணம்.

*அவதாரிகை.*

சத்யம் என்னும் சொல் தத், யத், தத் இம்மூன்று கூறு சேர்ந்தது. இவைகளுக்குள் வருகிற வேற்றுமையை விலக்குவதற்குச் சூத்திரம்:-

3
## ஸா. ஸைவ ஹி ஸத்யாதய: 3—3—38

சா. ஏவ, ஹி சத்யாதய: என்று பிரிக்கவும்.

ப, உ. சா ஏவ = சத்தியமென்னும் வித்தையொன்று தான். ஹி = ஏனெனின், தத்யத்சத்யம், என்னும் வாக்கியத்தில் கூறிய, உபாஸ்ய, வழிபடும் தெய்வம் ஹிரண்யகர்ப்பன் என்று உறுதிப்படுத்தியிருக்கிறது. ஆகையால் வித்தையில் வேற்றுமையில்லை. எனவே எல்லா இடங்களிலும் சத்யாதி குணங்களைக் கூட்டிக்கொள்ள வேண்டும்.

வி. உ. 'சத்யம்' இஃது ஒரு நாமம். தத், யத், தத் இந்த மூன்று எழுத்தும் மூன்று கூறு. இதில் முதல் எழுத்தும் இறுதி யெழுத்தும் சத்தியமாகும். இடையில் வரும் எழுத்துப் பொய்யாப் போகும். இவ்விரு இடங்களிலும் சத்தியத்தை யுரைப்பதால்,சத்திய வித்தை யெனப்படும்.

இந்த சத்தியத்தைப் பிரஹ்ம மென்று யார் அறிகிறார்களோ அவர்கள் அவ்வுலகத்தை யடைகிறார்கள். இம்மாதிரி வாஜசநேயி உபநிஷத்தில் உபாசனையின் நிமித்தமாகச் சொல்லிருக்கிறது. இந்த ஆதித்ய மண்டலத்தில் உள்ள புருஷன், வலது கண்ணில் இருக்கும் புருஷன் இவர்கள் உண்மையில் பிரஹ்மமென்று மறை மலர்கின்றது. மலர்தல் மகிழ்ந்துரையாடுதல்.

இங்ஙனம் ஒரு ஐயம். என்ன ஐயம்? இவ்விரு சத்திய வித்தையும் ஒன்று அல்லது இரண்டா? பூ.ப. சத்தியவித்தையிரண்டு. அவ்வாறு தெரிகிறது. ஏனெனின், "ஜயதீ இமாந்லோகாந்" அவன்—உபாசகன். இந்த உலகத்தை வென்று விடுகிறான். அதாவது அடைகிறான்

என்பது கருத்து. இம்மாதிரி முந்திய உபாசனையிலும், 'ஹந்திபாப்மாநம்' இவ்வாறு யார் அறிகிருரோ அவர் பாவத்தை நாசஞ்செய்கிருர் என்றும் இறுதி உபாசனையில் இசைத்திருப்பதாலும் வித்தையிரண்டென்று தெரிகிறது.

சி. இவ்வாறு இயம்புவது பொருந்தாது. இந்த சத்திய வித்தை யொன்றுதான். எதனுலோ வெனின்? 'தத்யத் சத்யம்' இம்மாதிரி எடுத்துக் கொண்ட விஷயத்தை யிணைத்திருக்கிறது. வித்தையில் பேதம் இருப்பினும் வேத்யம் உபாஸ்யம் வழிபடும் தெய்வமொன்ருயிருப்பதால் ஒன்றென்பதில் குற்றமில்லை. வித்தையில் பேதமும் அபேதமும் வரும் பொழுது தத்யத் சத்யம் என்று மொழியப் பட்டிருக்கிறது.

அக்ஷிபுருஷன் ஆதித்திய புருஷன் என்னும் புருஷ வித்தை யிரண்டும் ஒன்றென்று உணரவும். இதைப் போன்று சாந்தோக்கியத்திலும் தெரிந்து கொள்ள வேண்டும். சூ. 38,

4

## 25. காமாத்யதிகரணம்.

### *அவதாரிகை.*

இப்பொழுது இந்த பிரஹ்ம புரத்தில் தஹரமென்னும் ஒரு இடம் உளது. அங்கு ஒரு நுண்ணிய தஹராகாசம் ஒன்றிருக்கிறது. இவ்வாறு ஆரம்பித்து, இந்த ஆன்மா தருமம் அதருமம் இவை இரண்டிற்கும் அந்நிய மென்னும், ஜரை மரணமின்றியதாயும், கவலையின்றியதாயும், பசிதாக மின்றியதாயும் இருக்கிறது என்று ஆன்மாவை உரைத்திருக் கிறது. மேலும் சத்யகாமன், சத்யசங்கல்பன், என்றும் சாற்றப்படுகிறது. இது சாந்தோக்கிய முறை.

இது போல் வாஜசநேயி உபநிடதத்திலும் 'ச வா ஏஷ மஹானஜ' அப்படிப்பட்ட இந்த மஹான் ஆத்மா, பிறப் பற்றது. மேலும் பிராணங்களில் விக்ஞான மயனுக இருக் கிருன். இன்னும் ஹிருதயம என்னுமிடத்தில் உறங்கிக் கொண்டு இருக்கிருன் என்றும், வாஜசநேயில் மொழிந்திருக் கிறது. இவையிரண்டிலும் மொழிந்த மொழிகளால் இங்கும் வித்தையிரண்டா அல்லது ஒன்ரு என்பது ஐயம்.

சி. வித்தை ஒன்று தான் இதையுணர்த்தும் சூத்திரம்.

## சூ காமாதீதரத்ர தத்ரச்சாயதநாதிப்ய: 3—3—39

காமாதி, இதரத்ர, தத்ர, ச, ஆயதநாதிப்ய: என்று பிரிக்கவும்.

ப. உ. காமாதி = சத்யகாமத்வாதி குண சமூகம். இதரத்ர=அந்நிய இடத்தில்—வாஜசநேயி உபநிஷத்தில் எல்லாவற்றையும் தன் வயமாக்கும் குணங்களும். தத்ர= சாந்தோக்கியத்திலும் கொள்ள வேண்டும். ஆயதநாதிப்ய: = எனெனின், அவையிரண்டிலும் ஆயதனம்—இருப்பிட முதலியவையொன்றுதான்.

வி. உ: சத்ய காமம் என்னும் பதத்தால் அதன் தொடர்பான சகல குணங்களையும் வருவித்துக் கொள்ள வேண்டும். எங்ஙனம் தேவதத்தன் தத்தன் என்றும், சத்ய பாமா பாமாவென்றும் உரைக்கப் பெற்றிருக்கிறதோ அது போலறிக. சாந்தோக்கியத்தில் இதயாகாசத்தில் சத்யகாமத் வாதி குணங்கள் காணப்படுகின்றனவோ அவை வாஜசநே யிலும் பொருந்துகின்றன. வாஜசநேயில் எந்த குணங்கள் காணப்படுகின்றனவோ அவைசாந்தோக்கியத்திலும்

காணப்படுகின்றன. இதனால் ஆயதனம் சமானம். பொது என்பதுகருத்து.

"ய ஆத்மா அபஹதபாப்மா" இந்த வாக்கியம் அந்யத்ர என்னும் பதத்தால் சாந்தோக்கியத்தைத் தெரிந்து கொள்ளவும். ஆத்மா=பரமாத்மா, அபஹதபாப்மா=பாவ புண்ணியத்திலிருந்து விடுபட்டது என்கின்றது சுருதி. இரண்டிடத்திலும் ஆயதனம் என்றது இதயத்தை. வேத்யன் —இறைவன். சேது என்னும் சொல்லும் சமானம். சேது என்றது உலக மரியாதையையுணர்த்தும் பொருட்டு.

ஆனால் விசேஷமும் காணப்படுகிறது—சாந்தோக்கியத்தில் இதயாகாசத்தில் குணங்களைச் சொல்லப்பட்டிருக்கிறது, வாஜசநேயத்தில் ஆகாசத்தைப்பற்றியிருக்கும் பிரஹ்மத்தில் குணங்களைக் கூறியிருக்கிறது. ஆனால் சாந்தோக்கியத்தில் சகுணவித்தையும் வாஜசநேயில் நிற்குண வித்தையும் நிகழ்த்தியிருக்கிறதென்று தெரியவும்.

3

"அசங்கோஹி அயம் புருஷ:" இந்த வாக்கியத்தில் அசங்கமென்னுஞ் சொல் அரூபத்தை யுணர்த்துகின்றது.

இன்னும் இவைகளை வருகிற வாக்கியத்தாலும் நேதி நேதி யென்னும் மொழிகளாலும் நிற்குணங்களைத் தெரிந்து கொள்ளலாம். விசேடகுணங்கள் அனைத்தும் இறைவன் விபூதியை விளக்கும் பொருட்டு என்று உணர்க. சூ. 39,

3 4

## (26) ஆதராதிகரணம்.

*அவதாரிகை.*

இங்கு உயர்ந்தோருண்ணும் உணவை ஓமமென்றுரைக்கப்படுகிறது. சகுண வித்தையிலும் நிற்குணவித்தையிலும் உபாதியால் வேற்றுமை யொப்புக் கொள்ளாது

போனால் வேற்றுமை உண்மையாகும். உண்மையானால் அதை ஒதுக்க இயலாது. சூத்திரம்.

3
## ஸூ. ஆதராத், அலோப : 3—3—40

ப.உ. உணவு இல்லாத போதும் வேள்விக்கு அலோப : = யக்ஞாதிகருமத்திற்கு அபாவமில்லை. அபாவம்
3 2 4
= இன்மை. ஆதராத் = ஏனெனின், 'பூர்வோ அதிதிப் யோ அஸ்நீயாத், வந்த விருந்தினர் உண்பதற்கு முன் பிராணனுக்கு ஆஹுதிகொடுக்கவேண்டும் என்று ஜாபால உபநிடதத்தில் பிராணாஹுதிக்கு மரியாதைச் செய்யப் பட்டிருக்கிறது.

வி. உ. சாந்தோக்கிய உபநிஷத்தில் வைஸ்வானர
3 3 4
வித்தை யொன்று வருகிறது. அதில் ''தத்யத் பக்தம்
2 3 2
பிரதமம் ஆகச்சேத்தத் ஹோமீயம் ஸயாம் பிரதமாம் ஆஹுதிம் ஜுஹ்யாத் தாம் ஜுஹ்யாத் பிராணாய ஸ்வாஹா'
3 4
சா. உ. (5-19-1) தத்யத் பக்தம் = உணவு உண்கிற
3
போது. பிரதமம் = முதலில்யத் ஆகச்சேத் = எந்த அன்னம் வருகிறதோ தத் = அந்த அன்னத்தை. ஹோமீயம் = ஆஹுதிக் கொடுக்க வேண்டும். அவ்வேளையில் முதலாவது ஆஹுதிக் கொடுக்கிறானோ, தாம் = அதை. பிராணாய ஸ்வாஹா = பிராணனுக்கு அர்ப்பணமென்று ஹோமம் செய்யவேண்டும் என்பது சுருதியின் பொருள்.

அவண் பஞ்ச பிராண ஆஹுதிச் செய்யப்பட்டிருக் கிறது. அவண் = அங்கு. பஞ்ச = ஐந்து- அச்சுருதியில் ஐந்து பிராண ஆஹுதி விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தச்

3 3
சுருதியில், பின்னுல் ''ய ஏததேவம் வித்வான் அக்நி ஹோத்ரம் ஜுஹோதி வைஸ்வானர வித்தையை நன்கு உணர்ந்து எவன்வேள்வியைச் செய்கின்ருனே, மேலும்

2 4 3
யதேஹ க்ஷுதிதாபாலா மாதரம்பர்யுபாசதே,
3
ஏவம் சர்வாணி பூதானி அக்நி ஹோத்ரமுபாசதே,,

4
பொ.ள். யதா=எங்ஙனம். இஹ = இங்கு. க்ஷுதிதா
3
பாலா = பசியுள்ள குழந்தைகள். மாதரம் =அன்னையை. பர்யுபாசதே= வழிபடுகின்றனவோ. ஏவம் = இந்த மாதிரி.
3
சர்வாணி பூதானி = எல்லா உயிர்களும். அக்நி ஹோத்ரம் உபாசதே =வேள்வி முதலிய நல்வினைகளைச் செய்கின்றனர். சா. உ. (5-28-5) என்கின்றது வேதம்.

இங்கு ஞானியுண்கின்ற உணவு ஆஹுதியாகவும் ஞானியுண்பதே வேள்வியாகவும் விரித்துரைக்கின்றது. இங்கு இதைப்பற்றிச் சிந்திக்கப்படுகிறது. உணவில்லாத போழ்து வேள்விக்கு லோபம் (அபாவம்) உண்டா இல்லையா என்பது ஐயம். அன்னத்தைப்பற்றிப் பேசும் போது அன்ன மில்லாத காலத்தில் அன்னசம்பந்தி ஹோமமும் இல்லை யென்றுதான் உணரவேண்டும். என்றுகூறிய போது, பூ.ப. பிராணுஹுதிக்கு இன்மை யுண்டாகக் கூடாது. எங்ஙனமெனின்? அதற்கு மறைகளில் ஆதரவு இருக் கிறது. அதற்கு — வேள்விக்கு. அதுபோல் வைஸ் வானர வித்தையில் ஜாபாலர் என்னும் ரிஷிகூறுவதாவது — வந்த விருந்தினர்க்கு முன்னம் ஆஹுதிக் கொடுக்க வேண்டும் என்கின்றனர். இவர் வாக்கிய மூலமாக அதிதி யுணவை நிந்தித்து யஜமானுடைய ஆஹுதியைப் புகழ்ந்து கூறியிருக்கிறது. வேள்வியை ஆதரிக்கிறதென்பது கருத்து.

குணங்களுக்கு இன்மையிருப்பதால் முக்கியத்திற்கு இன்மை யுண்டாகுமென்பதற்கு ஒரு நியாயமும் இல்லை. அன்னமில்லாது போனாலும் பால், தயிர், நீர் முதலிய பொருள்களை வைத்து ஹோமஞ் செய்யலாம். எனவே அன்னாபாவத்தால் ஆஹுதியபாவம் நியாயமில்லை சூ.40

*அவதாரிகை.*

பூர்வபக்ஷி சங்கைக்குச் சமாதான சூத்திரம் :-

**சூ. உபஸ்திதே[2] அதஸ்[3] தத்[1] வசனாத் : 3—3—41**

உபஸ்திதே,[2] அத;, தத்[1] வசனாத் என்று பிரிக்கவும்.

ப. உ. உபஸ்திதே[2] = உணவுப் பொருள்கள் இருக்கும் பொழுது. அத: = முதலில் வந்த உணவுப் பொருளினால் பிராணனுக்கு ஆஹுதிக் கொடுக்க வேண்டும். தத்வசனாத் = 'தத்யத்பக்தம்'[4] என்னும் வாக்கியத்தால் என்று உணரவும். ஆதர என்னும் வாக்கியம் உணவையடைய வேண்டும் என்பதை முன்னிட்டு மொழியப்பட்டிருக்கிறது,

வி. உ. சி. உணவுப் பொருள் இருக்கும் பொழுது முதலில் வந்த உணவை அக்நிஹோத்ரம் செய்ய வேண்டும் எனச் சுருதியுரைக்கின்றது. முறையாக சமைத்த உணவைக் கொண்டு வந்த உடன் இறைவனை நினைந்து உண்ண வேண்டுமென்பதை உணர்த்துகின்றது. திரவ்ய மூலமாக விதித்த பிராணாஹுதிக்கு[4] விதானம் செய்கின்றது வேதம். விதானம் — விதிக்கின்றதென்பது கருத்து.

பஞ்சபிராண ஆஹுதி — பிராணாய ஸ்வாஹா, அபானாய ஸ்வாஹா, வியானாய ஸ்வாஹா உதானாய ஸ்வாஹா, சமானாய ஸ்வாஹா. என்பனவாம். அன்னத்தின் இன்மையால் ஆஹுதிக்கும் இன்மை யுண்டாகிறது. அக்னி ஹோத்திரத்திற்குரிய அங்கங்கள் வருமாறு-

3 3 3 3
'உரஏவவேதி, லோமானி பர்ஹி, ஹிருதயம் கார்ஹபத்யோ,
1
மநோ அந்வாஹார்யபசன ஆஸ்யம் ஆஹவநீய:, சா.உ. (5-18-2) உரஏவவேதி = வைஸ்வானர அக்னியை வழிப்டுபவன் மார்பு வேதி — யாகம் வளர்க்குமிடம், அவனது ரோமம் தருப்பை, இதயம் கார்ஹபத்ய அக்னி, மனம் அன்வாஹாரியபசன அக்னி, இதை தக்ஷிண அக்னி யென்றும் சொல்வார்கள். முகம் ஆஹவினிய அக்னி யென்று ஆம்நாயம் அறைகின்றது.

இங்கு வேதியென்பது தரையை மட்டும் குறிக்கும். எந்தச்சுருதியிலும் ஸ்மிருதியிலும் உபாசகனுக்கு உணவு சம்பந்த வேள்வியில் மந்திரம், திரவ்யம், தேவதை யிவைகளுக்குரிய உணவு ஹோமம் இவை ஐந்தும் முக்கியம் எனப்படும். இவைகளை பிராணனுடைய ஆஹுதியை ஆதரித்து ஆங்காங்கு அருளப்படுகின்றன. சூ 41

4 4
## 27, தந் நிர்தாரண அதிகரணம்.

*அவதாரிகை.*

உத்கீத மென்னும் உபாசனைக்கு அவயவரூப ஓம்கார உபாசனை செய்ய வேண்டும் மென்பதற்கு சூத்திரம்-

4 3 3 234
**சூ. தந் நிர்தாரண அநியமஸ்தத் திருஷ்டே: பிரதக்க்ய**
3 4 2
**பிரதி பந்த: பலம் 3—3—42**

தந்நிர் தா[4]ரண, அநியம:, தத் திருஷ்டே:, பிரதக்ஹி, அப்ரதி பந்த[4]:, பலம் என்று பிரிக்கவும்.

ப.உ. தந்நிர்தாரண அநியம: = கரும அங்கத்தைப் பற்றியிருக்கும் உபாசனைகளைப் போல நியம அநுஷ்ட்டான மில்லை. ஏனெனின், தத்திருஷ்டே : = ''தேநோ உபௌ[4] குருத :" உபாசகனல்—வேதத்தைத் தெரிந்தவனும் தெரியா தவனும் கர்மத்தைச் செய்கிருன் என்னும் சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. பிரதக்ஹி அப்ரதிபந்தபலம் = அந்த உபாசனைகளுடைய கருமபலத்தின் வேருகவும் தடை யின்றியதாகவும் உள்ள பயன் உண்டாகிறது.

உத்கீதம் என்பது சாமபக்தியில் ஒருவிதமான பக்தி. அதற்கு ஓங்காரம் ஒரு அவயவம். இந்த உபாசனை கருமரூப ஜோதிஷ்ட்டோமத்திற்கு அங்கமா அங்கமில்லையா, என்பது வினு, விடை-மேலே சொன்ன அங்கத்தைப் பற்றித் தான் உபாசனையிருக்கிறது. அங்ஙனமாயின் இந்த உபாசனை கள் கருமத்தில் பர்ணமயி என்னும் ஒருயாகம். அதுபோல் இதுவும் நித்தியமா? அல்லது கோ[3]தோஹநத்திற்குச்சமானம் அநித்தியமா? இவ்விஷயத்தைப் பற்றியிங்கு விசாரிக்கி ரேும். நாங்கள் என்று வருவித்துக் கொள்ளவும். ஆக முடிவு என்ன? பூ. ப. நித்தியம் என்பது எங்கள் மதம். எதனுலோ வென்று சித்தாந்திக் கேட்பாயாகில், அவ்வாறு மறைகளில் காணப்படுகிறது. வேள்வி பிரகரணத்தில் சொல் லாத இந்த உபாசனைகளை உத்கீதை வாயிலாக யாகத் தோடு இணைத்து இருக்கிறது. இந்த விஞ்ஞானத்தைத் தனது வாக்கியங்களோடு சேர்த்து ''ஆபயிதாஹவை" எந்த வித்வான் இந்த மாதிரி உத்கீதரூப அக்ஷரத்தை வழிபடுகிருனே அவன் தனது எஜமானுடைய எண்ணமுழு தையும் நிறைவேற்றுகிருன் என்பது மறையின் முடிபொருள். இப்மாதிரிப் பயனைப்பற்றிக் கேள்விப்படுகிரேும்.

பர்ண்மயியாகம் என்பது பர்ணம்—இலை. இவை களைக் கொண்டு மண்டபம் அமைப்பது. இவர்கள் பாவ மயமான வார்த்தைகளைக் கேட்பதில்லை. இம்மாதிரி யாகத் தோடு சேராது போனாலும், ஜுஹு, என்னும் வாயிலாக யாகத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையால் நித்தியம் என்பதில் ஐயம் என்னை இருக்கிறது. இதுபோல் உத்கீதை முதலிய உபாசனைகளையும் கொள்ள வேணடும் மென்பது பூ. பட்சம்

தடையில்லாமல் பயனுண்டாவதால் அநித்திய மென்பது சித்தாந்தபட்சம். சூ.42

4 4
## 28 பிரதான் அதிகரணம்

3 3
'வாயுர்வாவ சம்வர்க்க:' 'பிராணோவாவ சம்வர்க்க: இவ்வாறு சுருதிகள் சொல்லுகின்றன். இவ்விரு வாக்கியங் களிலும் வாயுவையும் பிராணனையும் வேறுபடுத்தி விளம்பி யிருக்கிறது. 'ய: பிராண! ச; வாயு:' இம்மறை மொழியால் இரண்டையும் ஒன்றென்று உரைத்திருக்கிறது. இங்கு ஐயம் உண்டாகிறது. அதற்கு சூத்திரம்:-

4' 3
### சூ. பிரதாநவதேவ தநுக்தம் : 3—3—43

பிரதாநவத், ஏவ, தத், உக்தம் என்று பிரிக்கவும்.

4 2 3
ப. உ. பிரதான்வத் = 'யதேந்த்ராயராக்ஞே' இவ் வாக்கியத்தால் கூறிய இந்திரன் ஒருவனே யாயினும் அரசன் பேரரசன் என்னும் வேற்றுமையால் பேதம் காணப் படுகிறது. அதுபோல் ஒரே வித்தையிலும் வாயு, பிராணன் இவையிரண்டிற்கும் சொரூபத்தில் அபேதம் இருப்பினும், அதிதெய்வம் அத்யாத்மம் என்னும் நிலையை விளக்கும்

பொருட்டு இப்பேதம் கொள்ளப்பட்டிருக்கிறது. எனவே பிரயோகத்தில் வேற்றுமை. ததுக்தம் = நா நா வா இத் யாதி சூத்திரத்தால் ஜைமினி முனிவர் கரும காண்டத்தில் கூறியுள்ளார்.

வி. உ. பிருஹதாரண்ய உபநிடதத்தில் 'வதிஷ்[3] யாமியேவ அஹமிதி வாக்[3]தத்[4]ரே' வாக்கு ஒரு விரதம் பூண்டது. என்ன விரதம்? அஹம் = நான். (எப்போதும்) பேசிக்கொண்டேயிருப்பேன் என்ற உறுதியைக் கொண்டதென்பது குறிப்பு. பிரு. உ. (1-5-21) இந்த அத்யாத்ம ரூபமான வாக்காதிகளின் பிராணன் சிறந்ததென்பதையறிவித்திருக்கிறது. அதுபோல் அதிதெய்வங்களில் வாயுவைச் சிறந்ததாகச் சாந்தோக்கியத்தில் உரைத்திருக்கிறது. அது— 'வாயுர்வாவ சம்வர்[3]க்க[3]:' இவ்வாக்கியம் அதிதெய்வங்களில் காற்றைச்சிறந்ததாகச் சாற்றியிருக்கிறது.

இவ்வீரிடத்திலும் கூறிய முறைப்படி ஒன்றென்று கொள்வதா, அல்லது இரண்டென்று கொள்வதா என்பது வினா. உனக்கு எங்ஙனந் தெரிகிறதெனின், பூ. ப. அபேதமென்று தெரிகிறது, ஏனெனின், அக்னி வாக்கு வடிவமாக முகத்தில் நுழைந்திருக்கிறதென்று மொழிந்திருக்கிறது. இது மூலமாக அத்யாத்மமும் அதிதெய்வமும் ஒன்றென்று தெரிகிறது. சி. இங்கு வாயுவையும் பிராணனையும் வேறென்றே எண்ண வேண்டும் ஏனெனின்' இவையிரண்டையும் வேறு என்று விளம்பியிருப்பதால் அத்யாத்மம் அதிதெய்வம் இவையிரண்டும் தியானஞ் செய்யும் பொருட்டு தியானத்தில் இரண்டாக இல்லாது போனால் வழிபாடு பயனற்றுப் போகும். ஆனால் சொரூபத்தில் ஒன்றாயிருப்பதால் இரண்டென்று எண்ணக் கூடாதென்றது சரியல்ல. உண்மை தத்துவம் ஒன்றாயிருப்பினும் நிலைகள்

வெவ்வேருக இருப்பதால் வேறு என்னும் உபதேசம் பொருத்தந்தான். ‘ச யதா ஏஷாம்’[2] இந்த மாதிரி வாக்காதி கருவிகளில் பிராணன் மையத்திலிருக்கிறது.

அதுபோல் அக்கினி ஆதி தெய்வங்களில் வாயு மையத்திலிருக்கிறது. இம்மாதிரி உவமான உவமேயரூபம் இருப்பதால் வேறு என்பது உறுதி. இது மூலமாக விரதத்தைப் பற்றியும் உரைக்கப் பெற்றது ‘எகம் விரதம்’[1] ஒரே விரதஞ் செய்ய வேண்டுமென்பது பொருள். இம் மொழியில் வாக்காதிகள் விரதத்தை விட்டுவிட்டு பிராண விரதத்தைச் செய்ய வேண்டுமென்று தெரிகிறது. ‘தாநி மிருத்யு:’ யமன் சிரமப்பட்டு அந்த பொறிகளை யொன்று திரட்டி இருக்கிருன். என்ற இப்மறைமொழி வாக்காதி களுக்கு மக்ன விரதஞ் சொல்லியிருக்கிறது. மக்னம்—நீக்கம். எவ என்னும் சொல் வாயு விரதத்தை நீக்கும் பொருட் டன்று. ஏனெனின்-

‘‘அதாதோ விரதமீமாம்ஸா’’[2] இப்பொழுது இங் கிருந்து விரதத்தைப் பற்றி விசாரிக்கின்ருேம் என்பது மறை யின் பொருள். இவ்வாறு தொடங்கி வாயும் பிராணனும் ஒன்று போல் உரைக்கப்படுகிறது. மேலும், பிருதிவியாதி தேவதை நான்கு. இவற்றைப் பற்றி நிற்கும் வாயு ஐந்தா வது தேவதை. வாக்காதி இந்திரியம் நான்கு, ஐந்தாவது பிராணன் என்று வேறு பிரித்து மொழிந்திருக்கிறது. அது போல் அக்கினி ஆதி பூதங்கள் நான்கு, ஐந்தாவது வாயு என்று அத்யாத்மத்தில் பிராணனையும், அதி தெய்வத்தில் வாயுவையும் வேறு பிரித்து மொழிந்திருக்கிறது. இதனுலும் இவையிரண்டும் வேறு என்பது தெளிவு. வேறு என்பது தெளிவானதால் இரண்டையும் இரண்டு என்றே அநுச்சிந்-தனம் செய்ய வேண்டும். அநுச்சிந்தனம்—உபாசனை.

பிரதானத்திற்குச் சமானம். எங்ஙனம் ''இந்த்ர ராஜாவிற்காக, புரோடாசம் — அவர்களுக்குரிய அன்னம். இந்த்ரன் என்பவன் ஒருவனுக இருந்தாலும் ராஜா, அதி ராஜா, ஸ்வராஜா என்னும் பேதத்தால் புரோடாசமும் மூன்று பிரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இதனுலும் பிராணனேயும் வாயுவையும வேறு என்று வழிபடுவது நலம். சூ. 43,

3 4 4
லிங்க பூயஸ்த்வ அதிகரணம்.

*அவதாரிகை.*

கூறிய முடிவை சீரிய முறையாய்த் திறப்படுத்து வதற்கு மற்றொரு யுக்தி வருமாறு சூத்திரம் :-

3 4 3 4 3 3
**சூ. லிங்க பூயஸ்த்வாத் தத்தி பலீயஸ் ததபி 3—3—44**

3 4 3
லிங்க பூயஸ்த்வாத், தத், ஹி, பலீய:, தத், அபி, என்று பிரிக்கவும்.

ப. உ. வாஜசநேயி உபநிஷத்தின் அக்னிரஹஸ்யத் தில் அக்கினி வித்தையொன்று வருகிறது. அது சுதந்தர
3 4
மாக வருகிறது. லிங்க பூயஸ்த்வாத் = ஏனெனின் இதில் ''யத்கிஞ்ச இமாநி பூதானி'' இம்மாதிரி அநேக லிங்கம் பிரமாணமாகின்றன. பிரகரணத்தை நோக்கும் போது லிங்கம் அதிக வலிமையுடையது. ததபி = ஆனபோதிலும் சுருதி லிங்கத்தை ஜைமினி என்பவர் இந்த சூத்திரத்தில் மொழிந்திருக்கிறர்.

வி. உ. பிருஹதாரண்ய உபநிடதத்தில் அக்கினி ரஹஸ்யமென்னும் ஒரு வித்தை வந்திருக்கிறது. அதன் விபரம் வருமாறு:— படைப்பிற்கு முன்னர் இவ்வுலகம் சத்துமில்லை அசத்துமில்லையென்று தொடங்கி இது மனதினல் செய்யப்பெற்றது என்று மொழிந்து, அம்மனம் தன்னையே தான் பார்த்தது. அதன் பிறகு எண்ணி நெருப்பைப் பார்த்தது என்னும் மந்திரத்திற்கு அக்கினிரஹஸ்யம் மென்று பெயர்.

இந்த மந்திரத்தில் மக்களுக்கு இறைவனல் ஏற்பட்ட ஆயுள் நூறு. அதில் முப்பத்தி ஆருயிரம் பகலும், முப்பத்தி ஆருயிரம் இரவும் அடங்கும். இவையெல்லாம் அக்கினி வித்தையில் அருளப் பெற்றிருக்கின்றன. இதில் ஐயமுண்டாகிறது. என்ன ஐயம்? இந்த மனம் சித்தோடு கலந்து கருமங்களுக்கு அங்கமா அல்லது சுதந்தரமாகவா என்பது ஐயம். கருமங்களோடு கலந்து அங்கம் ஆகின்றது என்பது பூர்வ பக்ஷம், சுதந்தரமாக வினைகளுக்கு அங்கமென்பது சித்தாந்த பக்ஷம். இவ்விஷயத்தில் அநேக லிங்கங்கள் உள்ளன. லிங்கம் — பிரமாண வாக்கியம். மனச்சித் — மனதினல் தேடப்பட்ட அக்கினி. தேடுதல் - சம்பாதித்தல். பிரகரணத்தின் மூலமாக அக்கினி கருமத்திற்கு அங்கம் என்பது பூர்வபட்சம். சித்தாந்தத்தில் அக்கினி வித்தைக்குப் பலன் முக்தி. அக்கினி கருமவடிவமன்று, பின்னை வித்தை வடிவம். ''லிங்கம் பிரகரணத் பலீய: என்கின்றது சங்கரபாஷ்யம். பிரகரணத்தைப் பார்க்கிலும் லிங்கம் சிறந்ததென்பது கருத்து.

சுருதி, லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்தானம், சமாக்கியா என்னும் ஆறு பொருள்கள் எவ்வாறு பூர்வ மீமாம்சையிலும், வேதாந்தத்தில் பிரஹ்மத்தை விளக்கும் பொருட்டு ஆறு லிங்கங்களும் கொண்டிருக்கிறதோ அதுபோல் கொள்ளப் பட்டிருக்கின்

றன என்பது துணிபு. வேதாந்தத்தில் உபக்ரமம் உபசம்ஹாரம் . . . முதலியவை. மீமாம்சையில் சுருதி லிங்கம் . . . முதலியவை. பின்னுக்கு முன்னுள்ளவை பலமுடையதென்பது பொருள். இதனுலும் வாயு வேறு, பிராணன் வேறு என்று சொல்வதால் ஒரு குற்றமுமில்லை. சூ. 44.

*அவதாரிகை.*

பிரஹ்ம ஞானம் ஒன்றுதான் சம்சாரத்தைத் தாண்டுவதற்கு உபாய மென்பதை நிலைநிறுத்தும் பொருட்டு முதற்கண் பூர்வபக்ஷத்தை யெழுப்புகின்றது சூத்திரம்.

**சூ· பூர்வ விகல்ப: ப்ரகரணுத்ஸ்யாத் க்ரியாமாநசவத் 3—3—45**

பூர்வவிகல்ப:, பிரகரணுத், ஸ்யாத், க்ரியா, மாநசவத் என்று பிரிக்கவும்.

ப. உ. இந்த மனச்சித் அக்கினிகள் சுதந்தரமன்று, ஏனெனின், பிரகரணுத் = பிரகரணத்தினுல் தெரிகிறது. பூர்வ விகல்ப: = முன்னர் மொழிந்த கிரியாமய நெருப்புக்கு இது சங்கல்பவடிவம். எனவே க்ரியாஸ்யாத் = அங்க வடிவம். எது போல? மானசவத் = 'மநோக்ரஹம் க்ரஹுணதி' என்னும் பன்னிரண்டு நாள் செய்யும் யாகத்தில் மானசவினை அங்கமாயிருப்பது போல எனஅறிக.

வி. உ. சித்தாந்தத்தைச் செப்புதற்கு முன் பூர்வபக்ஷத்தை மொழிகிருர். இந்த நெருப்பு மற்றையவைகளுக்கு அங்கமாகாமல் சுதந்தரம் என்று சொன்னது சரியல்ல. முதலில் கரும வடிவமாக நெருப்பைக் கூறியிருக்கிறது. அவ்வாறு பிரகரணங் காணப்படுகிறது. எனவே சம்பந்தமாக பிரகரணமிருக்க வேண்டும். பிரகரண

பலத்தால் லிங்கம் வலிமை வாய்ந்ததல்ல. அக்கினிசித்து என்னும் பதத்தினலே கடவல்லியை நினைப்பது நலம்.

நசிகேதன் யமனிடஞ் சென்று மூன்று கேள்வியை வினவினன். அம்மூன்று கேள்வி- தந்தையின் நலம், அக்கினி வித்தை, ஆத்மவித்தை. ஜீவனைப்பற்றிய கேள்வி, பிரஹ்ம வித்தை. யமதருமர் விடை இங்கு பிரகரணமெனப்படும். இதை விசாரிக்கும்பொழுது இதிலுள்ள உண்மை வெளியாகின்றது. உபாசனை மூன்று விதம்-காயத்தைப் பற்றியது, வாக்கைப் பற்றியது, மனதைப்பற்றியது. உடலைப்பற்றிய உபாசனை யெவ்வாறு பயனைத்தருமோ அதுபோல் மனதைப் பற்றிய உபாசனையும் பயனைத்தரவல்லது. எனவே அதிகார பேதத்தால் உடல் உழைப்பாளிக்குப் பயன் கிடைக்கிறதோ அதுபோல் மன உழைப்பாளிக்கும் கிடைக்குமென்பதில் ஐயமென்னே? இல்லையென்பது உறுதி. அதுபோல் அக்கினி ஹோத்திர முதலிய வினைகளும் பிரஹ்மவித்தையைப் போல முக்தியைக் கொடுக்கும். சூ. 45.

## சூ. அதி[3] தேசாச்ச 3—3—46

ப. உ. "ஏககை ஏவததாவான்[11]" என்று இம்மாதிரி.

அதிதேஸாத்[3] = இவ்வாறு சம்பாதிக்கப்பட்ட அக்கினி கருமத்திற்கு அங்கம்.

வி. உ. முப்பத்தி ஆருயிரமாக புகழப்பட்ட அக்கினிகள். அவைகளில் ஒவ்வொன்றும் முன்னமே கூறப்பட்டது போல் புகழப்பட்டதாகும். இம்மாதிரி இந்த அக்னிகளைச் சொல்வது கருமங்களுக்குள் நுழைந்திருப்பதென்னும் தன்மையை உறுதி படுத்துவதாகும். ஏனெனின், சமானமான பிறகு உபதேசம் பொருந்தும். எனவே முன்னர்

இத்தனை செங்கல் வைக்க வேண்டும், இம்மாதிரி வைக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லி செயல்படுவது கிரியாநு பிரவேசமெனப்படும்.

இதை வேறு விதமாக விளம்பினும் அமையும். பிரகரண பலத்தினுல் மட்டும் கருமம் முக்திக்கு காரண மன்று. பின்னை? வித்தைக்குச் சமானம் கருமத்தையும் காரணமென்று மறைகள் மொழிகின்றன. எங்ஙனம்- 'திரி கர்மக்ருத்தரதி ஜன்ம மிருத்யூ'. க. உ. (1—1—17) யக்ஞம் தானம் தபம் என்னும் இம்மூன்றையும் செய்கின்ற மனிதன் பிறப்பையும் இறப்பையும் பெறுவதில்லை. ஆகையால் கருமமும் முக்திக்கு வித்தென்பது உறுதி. சூ. 46.

*அவதாரிகை.*

முன்னமே இரண்டு சூத்திரத்தில் எழுந்த சங்கைக்கு இங்கு வியாசர் விடை கூறுகின்றார்:—

**சூ. வித்யைவது நிர்தாரணுத் 3—3—47**

வித்யா, ஏவ, து, நிர்தாரணுத் என்று பிரிக்கவும்.

ப. உ. து=என்னுஞ் சொல்லால் பூர்வபக்ஷத்தைப் போக்குகின்றது சூத்திரம். வித்யாஏவ = வித்யா வடிவ மனச்சித்து அக்கினி சுதந்தரமானது. நிர்தாரணுத் = மறையில் அவ்வாறு அருளப்பெற்றிருக்கிறது.

வி. உ. கருமமும் மோக்ஷத்திற்குச் சாதனமென்று இரண்டு சூத்திர வாயிலாக எழுப்பிய பூர்வபட்சத்தை யிந்த சூத்திரத்தால் கண்டனஞ் செய்வதற்காக து, என்னும் சொல்லை உபயோகித்தார். 'நிர்தாரணுத்'. வேதத்தில்

இவ்வாறு மொழிந்திருப்பதால் ''தமேவ விதித்வா அதி மிருத்யுமேதி நாந்ய: பந்த்தா வித்யதே அயநாய' தமேவ= அப்படிப்பட்ட ஆத்மாவை. விதித்வா=நமது சொரூபமாக உணர்ந்து. அதிமிருத்யும் ஏதி = மிருத்யு—மரணம். அத்யேதி—தாண்டுகிறுன். நாந்ய: பந்த்தா வித்யதே = வேறு வழியில்லை. எதற்கு? அயநாய = மோக்ஷத்திற்கு. பந்த்தா—வழி. அயநம்—முக்தி. சுவேதாஉ—. (3-8)

இம்மாதிரி இங்கு உறுதியாக பிரஹ்மஞானத்தை மட்டும் முக்திக்குச் சாதனமென்று மொழிந்திருக்கிறது. எனவே தத்வஞானம் ஒன்றே முக்திக்குச் சிறந்த சாதன மென்பது தெளிவு. ஞான உபதேசம் பண்ணும் போது யம தருமர். நசிகேதனுக்கு

ஏகோவசீ சர்வபூதாந்தராத்மா ஏகம் ரூபம் பஹுதாய: கரோதி தமாத்மஸ்த்தம் யே அநுபஸ்யந்திதீரா: தேஷாம் சுகம் ஸாஸ்வதம் நேதரேஷாம். க. உ.2-2-12, ஏகோவசீ= ஒருவனுகவும், எல்லாப்பொருளையும் தன் வயமாக ஆக்குபவனுகவும். சர்வபூதாந்தராத்மா= எங்கும் நிறைந்தவனுகவும், ஏகம்ரூபம் = ஒருவடிவத்தை பஹுதா ய கரோதி = பல வடிவமாக ஆக்குபவனுகவும். ய: = எவன் இருக்கிறுனே: தம் ஆத்மஸ்த்தம்=அந்த இதயத்தில் இலங்கும் ஆன்மாவை யேதீரா : = எந்த ஞானிகள் அநுபஸ்யந்தி = அநுதினம் அநுபவிக்கிருர்களோ. தேஷாம் = அவர்களுக்கு. சுகம் சாஸ்வதம் = நிலையுள்ள இன்பம். (உண்டு) நேதரேஷாம்= மற்றையவர்களுக்கு ந — இல்லையென்பது 'கடவல்லியின் கருத்து.

முன்னர் அக்கினி வித்தையையருளும் பொழுது அதையுணர்ந்தவர்கள் ஜென்ம மரணத்தை விலக்குகின

றனரென்றும் பரம சாந்தியைப் பெறுகின்றனர் என்றும் உரைத்தது, சுவர்க்கத்தைப் புகழ்ந்து பாடுவதற்கென்று உணரவேண்டும். ஆதலின் முக்திக்கு வித்து ஞானமென்பது குறிப்பு. சூ.47,

*அவதாரிகை.*

உரைத்த பொருளை யுரக்கப் பண்ணுவதற்கு சூத்திரம்.

3 1
சூ. தர்ஸநாச்ச 3—3—48

ப.உ. இந்த மநச்சித் ஆதி அக்கினிகளில் லிங்கங்கள் காணப்படுகின்றன. லிங்கம் காணப்படுவதால், 'லிங்க பூயஸ்த்வாத்' என்னும் சூத்திரத்தில் இதைப் பற்றி விரிவாக எடுத்து விளம்பி இருக்கிறது. ஆண்டு கண்டுகொள்க. மேலும், சுருதியில் யக்ஞ யாகாதிகளுக்குப் பலன் சுவர்க்கமென்றும், அங்கு சென்றவர்கள் மீண்டும் இங்கு வருவர் என்றும், மு.உ. 1.2, (9—10) இம் மந்திரங்களில் கூறியிருக்கிறது. இதற்கு மாருக பிரஹ்மஞானத்திற்குப் பலன் பிறப்பிறப்பை நீக்குவதும் பரமாத்மாவை பெறுவதென்றும் (3—2,5—6) இம்மந்திரங்களில் மொழிந்திருக்கிறது. இதனலும் தத்வ ஞானம் ஒன்றுதான் முக்திக்குச் சாதனம் கருமமல்ல என்பது இனிது புலனும். சூ. 48,

*அவதாரிகை.*

வேறு விதமாக பூர்வபட்சத்தைப் போக்கி சித்தாந்த பக்ஷத்தை நிலைநிறுத்தும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

3 3 3 4
சூ. சுருத்யாதி பலீயஸ்த்வாச்ச நபாத: 3—3—49

3 3 1 3 4
சுருத்தியாதி, பலியஸ்த்வாத், ச, ந, பாத: என்று பிரிக்கவும்.

1
ப. உ. ச = மேலும். சுருத்யாதி பலியஸ்த்வாத் = சுருதி-வேதம்—வலிமையுடையதாக இருப்பதால், பலமில்லாத கருமபிரகரணத்திலுல் மனச்சித்து எனும் ஞானம் பாதிக்கமாட்டாது. நீக்கப்படமாட்டாதென்பது பொருள். கருமம் ஞானத்தின் சுதந்தரத்தை நீக்க முடியாது.

வி. உ. எல்லா நூல்களினும் சிறந்ததும் புனிதமானதும் மறையொன்றேதான். மறை இறைவன் வாங்மயம். அவர் வாக்கிலிருந்து வந்தவை. இறைவன் எவ்வாறு வலிமை வாய்ந்தவனே அவ்வாறு அவன் வாயிலிருந்து வந்த சுருதியும் வலிமையுடையதென்பது தெற்றெனத் தெளிவாம். எளியவன் வலியவனை வெல்ல இயலாது. அதுபோல் ஞானத்தைக் கருமம் வெல்ல முடியாது. எந்த நோய்க்கு எந்த மருந்து தேவையோ அதைக்கொண்டு அந்த நோயை அகற்ற வேண்டும். அதுபோல் நல்லவினை பாவத்தைப் போக்கும். அதனுல் அவித்தை யென்னும் இருளை அகற்ற முடியுமா? முடியாதென்பது முடிபு. காந்தக்கல் இரும்பை இழுக்கும், அதனுல் எதையும் இழுக்குமென்று அர்த்தமல்ல.

ஞானத்தைக் கூறும் பகுதியைக்கருமத்தைக் கூறும் பகுதித் தடுக்க இயலாது. பகுதி-பிரகரணம். இதனுல் சுருதி, லிங்கவாக்கியம் பிரகரணத்தைப் பார்க்கிலும் பலமுடையதென்பது உறுதி. சூ. 49,

அவதாரிகை.

இதனாலும் கர்ம பிரகரணம் நொறுக்கப்பட்டது. மனச்சித்து அக்கினி சுதந்தரமென்பதை மீண்டும் உறுதி படுத்தும் பொருட்டு சூத்திரம்:-

3 4 3 4 2 3

**சூ. அநுபந்தாதிப்ய: பிரக்ஞாந்தர பிரதக்த்வதிவத் ருஷ்டஸ்ச ததுக்தம் 3—3—50**

3 4 3 4 2

அநுபந்தாதிப்ய:, பிரக்ஞாந்தர பிரதக்த்வவத், திருஷ்ட:,
1
ச, தத் உக்தம் என்று பிரிக்கவும்,

3 3 4

ப. உ. அநுபந்தாதிப்ய: = (அநுபந்தம் என்னும் காரணத்தால்) மனச்சித்து அக்கினிகள் தடையின்றியவை. பிரக்ஞாந்தர பிரதக்த்வவத் = எங்ஙனம் சாண்டில்ய ஆதி அந்நியவித்தைகள் சுதந்தரமோ அங்ஙனம் அக்கினியு மென்று அறிக. மேலும், திருஷ்டஸ்ச = இராஜசூய பிரகரணத்தில் கூறிய போதிலும் ஆவேஷ்டி யாகத்திற்கு மூன்று வர்ணத்தோடும் சம்பந்தம் இருப்பதால் பிரகரணத்தில் வேறு சொல்லப்பட்டிருக்கிறது. ததுக்தம் = இந்த விஷயத்தை மீமாம்சையிலும், கூறியிருக்கிறது. தத்—அதை. உக்தம் — உரைத்திருக்கிறது.

வி.உ. இதனாலும் பிரகரணத்தை நொறுக்கித்தள்ளி மனச்சித்து அக்கினியை சுதந்தரமாக அறியவேண்டும், ஏனெனின் சுருதி, வினைகளின் அவய்வத்தை மனமுதலிய வியாபாரத்தில் பொருந்தும் படியாகச் செய்ய வேண்டும் என்றபடி. மனதினால் செங்கலை யெண்ண வேண்டும், அதை யொன்றாகச் சேர்க்க வேண்டும், மனதினால் உத்காதா பாடட்டும், மனதினால் ஹோதா சம்சனம் செய்யட்டும். சம்சனம்-புகழ். இவ்வாறு மறைகளில் அருளப்பட்டிருக்கிறது.

பிரஹ்ம வித்தையில் பலன் ஒன்ருக உரைத்திருந் தாலும், உபாசகர்கள் பலவிதமாக இருப்பதால் பல பேதம் காணப்படுகிறது. எல்லா உபாசகர்களும் ஒரே பயனைக் கருதி வழிபடுவதில்லை. ஒவ்வொரு அதிகாரிகளிடத்திலும் ஒவ்வொரு எண்ணம் காணப்படுகின்றது. ஒரு அதிகாரி போகங்கள் அநித்தியம் துன்பம் நிறைந்தவை, அவைகளை விரும்புவது நலமன்று என்று எண்ணுகிருன்.

சிலர் பிரஹ்மலோக போகம் நிலையுள்ளது, அங்கு என்றும் ஆனந்தமாயிருக்கலாம் என்று எண்ணுகிருர்கள். அவரவர் மதிக்குத்தக்கவாறு பயனை விரும்புகிருர்கள். இம் மாதிரி அதிகாரிகள் எண்ணம் இருப்பதால் வித்தையில் வேற்றுமை காணப்படுகிறது.

பிறப்பு இறப்பென்னும் பெருங்வேலையிலிருந்து கடைத்தேறி ஆன்மாவை யடைவது ஞானத்திற்கு இறுதிப் பலன். பிரமதேவனிடம் இந்திரனும் விரோசனனும் பிரஹ்மவித்தையைப் பெறும் பொருட்டுச் சென்றனர். அப்பொழுது அவர் அருளியதாவது— இந்திர விரோசனர் களே! தத்வ ஞானத்தை யடைந்து ஆன்மாவைத் தெரிந்து கொண்டால் எல்லா உலகத்தையும் அடைந்த பயன் கிடைக்கின்றது என்ருர். இதனுல் அவர் இருவரும் தத்வ ஞானத்தில் முயன்றனர். இதில் விரோசனன் வைராக்யம் இல்லாததனுல் தத்வ ஞானத்தில் நிலைத்து இருக்க இயல வில்லை.

ஆனுல் இந்திரன் அதிகாரியானதால் அதில் நிலைத் திருந்தான். தகரவித்தையிலும் பொன்னு லோகத்தைப் புகழ்ந்து பாடியிருக்கிறது. பொன்னு லோகம் — இந்திர உலகம். போக இச்சையை விட்டு தத்வ ஞானத்தை யடைந்தவனுக்கு உடல் இருக்கும் பொழுதே ஒள்ளிய முக்தி கிட்டி விடும். எனவே அதிகாரி பேதத்தால் பல பேதம் உண்டென்பது உறுதி. சூ. 50

*அவதாரிகை.*

வேறு விதமாகவும் விமல வேதாந்த சித்தாந்தத்தை வெளிப்படுத்தும் பொருட்டு சூத்திரம் :.

3 3 4

**ஸூ நசாமாந்யாதபி உபலப்தோ ம்ருத்யுவந்நஹி லோகா பத்தி 3—3—51**

3 4

ந, சாமாந்யாத், அபி, உபலப்தே:, மிருத்யுவத்,, நஹி, லோகாபத்தி என்று பிரிக்கவும்.

ப. உ. சாமந்யாதபி = சமானமாக இருந்த போதிலும் ந = அவைகள் கருமத்திற்கு அங்கமல்ல. உப

3 4

லப்தே: = சுருதிகளின் காரணத்தால் தெரிகின்றது. மிருத்யு வத் = " ச வா ஏஷ அக்நிர்வை மிருத்யு: " இவ்வாக்கியத்தால் சூரியனையும், அக்கினியையும் மிருத்யு வடிவமென்று பொதுவாக மொழிந்த போதிலும், அத்யந்தம் சாம்யமில்லை. நஹி லோகாபத்தி: =" அசௌவாவ லோகோ" இம்மந்திரத்தில் சமித் ஆதி சமானமாக இருந்தாலும் திவி லோகத்தில் அக்கினிதத்வத்திற்கு அடைவில்லை.

வி.உ. சுருதி வாக்கிய மூலமாக அக்கினி முக்திக்கு வித்தென்று தெரிகிறது. பிரஹ்ம வித்தையில் அதிகாரி பேதத்தால் பல பேதங்காணப்படினும் சகல தத்வஞானமும் முக்தியை அளிக்குமென்பதில் ஐயமில்லை. இவ்விஷயத்தில் எல்லா நூல்களும் ஒரே சம்மதத்தை யளிக்கின்றன. சிலர் பிரஹ்ம லோகத்திற்குச் சென்றாலும், உடனே திரும்புபவர், சிலர், உடனே முக்தியை அடைகுவர், சிலர்பிரளயம் வரை தங்குவர், சிலர்கிரமமுக்தியை அடைகுவர் சிலரென்று பல பேதம் தெரிகிறது. இப்பேதம் அதிகாரிகளோடு தொடர்பு வைத்திருக்கின்றது. இந்த வேற்றுமையை அகற்ற இயலாது.

யாருக்கு போகத்தில் சிறிதளவேனும் இச்சை யில்லையோ, மேலும் தத்வஞானத்தில் ஐயமில்லையோ அவனுக்கு ''நஹி லோகாபத்தி:'' பிரஹ்மத்தின் அடைவே யன்றி மற்றைய உலகத்திற்குச் செல்வதில்லையென்பது கருத்து சூ. 51

அவதாரிகை.

இந்த விஷயத்தில் என்ன பிரமாணம் என்பதற்கு சூத்திரம் வருமாறு:-

**ஸூ. ப[1]ரேணச ஸப்[3]த[3]ஸ்ய தா[3]த்வித்[4]யம் பூ[4]யஸ்த்வாத்து அநுப[3]ந்த[4] : 3—3—52**

ப[1]ரேண, ச, ஸப்[3]த[3]ஸ்ய, தாத்வித்[4]யம், பூயஸ்த்வாத், து, அநுபந்த : என்று பிரிக்கவும்.

ப. உ. பரேண =" அயம் வாவலோக :" இவ்வுலகம் இந்த அக்நிச்சித் அக்கினி, என்னும் வாக்கியத் தோடு பொருத்தமாக இருந்தாலும், சப்தஸ்ய = மத்ய பிராமண வாக்கியத்தோடு தாத்வித்யம் = சத் சம்பந்தி வாக்கியங் களும், பூயஸ்த்வாத் = அதிகமாக, அநுபந்த : = அக்கினி வாக்கியத்தோடு மொழியப்பட்டிருக்கின்றன.

வி. உ. 'பரேணச, பின்னால் வருகிற மந்திர மூலமாக மேலே சொன்ன பொருள் உறுதியாகின்றது. 'தாத் வித்யம், அது போல் தோற்றமும் உண்டாகிறது. 'அநுபந்தம், பிரிந்த ஜீவன் தூல உடலை விட்டு விட்டு சூக்கும உடலோடு சம்பந்தப் படுகிறான்· இக்காரணத்தினால் உபாசகர்கள் பிரம லோகத்திற்குச் செல்கின்றனர் என்பது தெளிவு. வேதாந்த விக்ஞான சுநிச்சிதார்த்தா : சந்யாச யோகாத் யத[3]ய : சுத்த[4] சத்வா : தே பிரஹ்ம லோகேஷு பராந்தகாலே பராமிருதா:

பரிமுச்யந்திசர்வே" மு. உ. (3-2-6) வேதாந்த விக்ஞானம் = உப நிஷத்து மூலமாக எழுந்த விக்ஞானம் — தத்வஞானம். சுநிச்சிதார்த்தா : = அந்த ஞானத்தை நன்ருக அறிந்தவர்கள். சந்யாச யோகாத் = எல்லாவினை களையும் விடுதல்என்னும் தியாகத்திஞல் விட்டவர்கள். யதய: சுத்த சத்வா: = தூய்மையான உள்ளத்தையுடைய அதிகாரிகள். தே = அவர்கள். பிரஹ்மலோகேஷு = பிரஹ்மலோகம் ஒன்ருயிருப்பினும் அதிகாரி பலவாருக இருப்பதால் பிரஹ்ம லோகேஷு என்கின்றது. பிரஹ்ம உலகத்தில். பராந்த காலே = சம்சாரிகள் இறக்குங்காலம் அபராந்த காலம். அதிகாரிகள் இறக்கும்காலம் பராந்த காலம். நான் முகனேடு கலந்து முக்தியை அடையும் பருவ மென்பது குறிப்பு. பராமிருதா: பரிமுச்யந்தி சர்வே = சிறந்த வர்களாக இருந்து அயனேடு கலந்து முக்தியடைந்தன ரென்பது சுருதிப் பொருள். இவ்வாறு இங்கு உரைத்து.

அடுத்த மந்திரந்தில் யாருக்கு இச்சரீரம் அழிவதற்கு முன்பதாக ஆன்மாவின் அடைவு உண்டாகி விட்டதோ அந்த தத்வ ஞானியைப் பற்றிக் கூறுவதாவது —

3 3 3
கதா கலா : பஞ்ச தஸ பிரதிஷ்ட்டா தேவாஸ்ச சர்வே
3
பிரதிதேவதாசு கர்மாணி விக்ஞான மயஸ்ச ஆத்மா பரே அவ்யயே சர்வ ஏகீபவந்தி' மு. உ. (3-2-6) கதா கலா : = (ஞானியினுடைய) அவயவங்கள் பதினைந்தும். பத்து இந்திரி யங்களும், ஐந்து பிராணங்களும் (பஞ்ச தச) பிரதிஷ்ட்டா : = அதனதன் காரணத்தோடு ஒடுங்குகின்றன.

தேவாஸ்ச = அந்தந்த தேவதைகள் பிரதி தேவதாசு = காரண தேவதைகளிடத்தில் ஒடுங்குகின்றன. கண் சூரியனிடத்திலும், மனம் சந்திரனிடத்திலும், மற்றவை- களையும் இவ்வாறு உணரவும். கர்மாணி = கருமங்களும், விக்ஞானமய : ஆத்மா = விக்ஞானமய வடிவ ஜீவனும். பரே

அவ்யயே = பரிபூர்ண பரமாத்மாவில் சர்வ ஏகீபவந்தி = எல்லாம் ஒன்ருகி விடுகின்றன என்பது மறையின் பொருள்.

இம்மாதிரி தூய்மையான உள்ளத்தையுடைய அதிகாரிகள் அயனுலகத்தை யடைவாரென்றும், அரிய மெய்ஞ் ஞானத்தால் பிரஹ்மத்தை யறிந்தவர்கள் இங்கேயே இனிய முக்தியையெய்துவரென்றும் இயம்பியிருக்கிறது. யாருக்கு அயனுலகமே பெரிதாகக் காணப்படுகிறதோ, அவன் அங்கு செல்வதற்காக சூக்கும உடலும் காரண உடலும் அவனை விட்டு நீங்குவதில்லை. அவைகளோடுதான் அவர்கள் அவ்வுலகத்திற்குச் செல்கின்றனர். இவண் ஞானத்திஞல் முக்தியை அடைந்தவன் அங்கு செல்ல வேண்டுமென்பது என்ன இருக்கிறது. ''அர்க்கே சேந் மதுவிந்தேத கிமர்த்தம் பர்வதம் விரஜேத்'' என்பது ஒரு நியாயம். வீட்டுக்குள்ளே தேன் கிடைக்கிற போது மலைக்கு ஏன் செல்ல வேண்டுமென்பது நியாயத்தின் பொருள். இதனுலும் வீடடைந்தவன் வியன் உலகஞ் செல்ல வேண்டுவதில்லை யென்பது உறுதி. சூ. 52

4

## (30) ஐகாத்ம்ய அதிகரணம்.

### அவதாரிகை.

இது வரை முக்தி விஷயத்தில் வரப்பட்ட பல பேதத்தை மொழிந்து இனி சரீரம் விழுந்த பிறகு ஆன்மாவையும் இன்ப துன்பத்தையும ஒப்புக் கொள்ளாத நாஸ்திக வாதத்தைக் கண்டிப்பதற்காக சூத்திரம் :-

4

**சூ. ஏக ஆத்மந : சரீரே பாவாத் 3—3—53**

ஏகே, ஆத்மந:, சரீரே, பாவாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஏகே = நாஸ்திக மக்கள். ஆத்மந : = உடலுக்கு வேருக உள்ள ஆன்மாவிற்கு (அஸ்தித்வம்)

ஒப்புக் கொள்கிறதில்லை. சரீரே = உடல் இருந்த பிறகு தான் பாவாத் = ஆன்மா இருக்கிறதாகத் தெரிகிறது.

வி. உ. இந்த அதிகரணத்தில் பந்தம் முக்தி யென்னும் இவை இரண்டிற்கும் அதிகாரியை உறுதி செய்யும் பொருட்டு உடலுக்கு வேருக ஆன்மா உரைக் கப்படுகிறது. தேகத்திற்கு வேருக ஆன்மா இல்லாது போனல் மேலுலகம் உண்டென்னும் விதி வாக்கியம் வீணகப் போகும், இஃதன்றியும் நூல்கள் உபதேசம் யாருக்குச் செய்யும், மீமாம்சகர்கள் நூல் தொடக்கத்தில் பொன்னுலோக போகத்தை நுகர்வதற்காக உடலுக்கு வேருக ஆன்மாவை யொப்புக் கொண்டிருக்கிருர்கள்.

கர்ம காண்டத்திலும், உபாசன காண்டத்திலும் ஆன்மாவிற்கு இருப்பை எல்லோரும் ஏற்றுக் கொண்டிருக் கின்றனர். முந்திய பிரகரணத்தில் மனச்சித்து அக்கினியை முறைப்படி வழிபடுபவன் புருஷார்த்தத்தை யடைகிரு னென்று மொழிந்திருக்கிறது, அந்த புருஷன் யார்? எவனுக்காக வழிபாடுகள் மறைகளில் வழங்கப்பட்டிருக் கின்றதோ, அவன் யார்? இக்கேள்வி யெழுந்த பிறகு காயத்திற்கு வேருக ஆன்மாவிற்கு (அஸ்தித்வம்) இருப்பு உண்டென்று உரைத்திருக்கிருர்கள். இந்த சூத்திரம் ஆத்மாவின் அஸ்தித்வத்தை அதாவது ஆன்மா இருக்கிறது என்னும் தன்மையை மறுக்கிறது. ஆத்மாவை விசாரிக்கும் பொழுது நாஸ்திக வாதிகள் தேகத்திற்கு வேருக ஆன்மாவை யேற்றுக் கொள்கிறதில்லை. ஐம்பூதத்தின் விகார வடிவ உடலைக்கொண்டுதான் நிர்ணயிக்கமுடியும், மதசக்தியைப் போல விக்ஞானம், உயிரோடு கலந்த உடலே ஆன்மா என்கின்றனர்.

சுவர்க்கத்திற்குப் போவதற்காகவோ அல்லது மோக்ஷத்தை யடைவதற்காகவோ காயத்திற்கு அந்நியமாக வலிமையுள்ள ஆன்மா இல்லை. அவர்கள் மதியில் தேகமே

ஆன்மா, உயிரும் அதுவே. அது — உடல். இவ்வாறு அவர்கள் உரத்தக் குரலிலே உளறுகிறுர்கள். இதற்கு அவர்கள் தரும் தருக்கமாவது — 'சரீரேபாவாத்' சரீரமிருந்தால் தான் ஆன்மாவின் தருமங்களை ஆராய முடியும். ஏனெனின் எது இருந்தபிறகு எது இருக்கிறதோ அது அதற்கு தருமமாகும். எங்ஙனம் அக்கினியின் தருமம் உஷ்ணமும் ஒளியுமாம்.

பிராணன், தொழில், உயிர், ஞாபகம் இவை யெல்லாம்ஆத்மவாதிகள் ஆத்மாவின் தருமமாகச் சொல்கின்றுர்கள். அதுவும் உடலுக்கு உள்ளேதான் காணப்படுகிறது. வெளியில் இல்லை. உடலுக்கு வேருக தருமங்கள் இல்லாததால் அவைகள் அனைத்தும் தேக தருமமென்றே சொல்லவேண்டும். எனவே தேக வடிவ ஆன்மாவைத் தவிர வேறு ஆன்மா இல்லை யென்பது உறுதி. இதுவரை பூர்வபக்ஷம் சூ. 53

*அவதாரிகை.*

தேகான்ம வாதியின் தெளிவற்ற வாதத்தை அழிவுறச் செய்யும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. வ்யதிரேகஸ்தத் பாவாபாவித்வாத் நதுஉபலப்தீவத்**[3 4 4 3 4]
**3—3—54**

வ்யதிரேக :, தத்பாவாபாவித்வாத், ந, து, உபலப்திவத் என்று பிரிக்கவும்.

ப. உ. வ்யதிரேக: = உடலுக்கு வேருக ஆன்மா இருக்கிறது. தத்பாவ அபாவித்வாத் = ஏனெனின் உயிர் பிரிந்தபோது உடல் இருந்தும் ஆன்ம சைதந்யமோ, தொழில்களோ, ஞாபக சக்தியோ எதையும் காணேம். நதுஉபலப்திவத்[3] = எங்ஙனம் பூதத்தின் அடைவு பூதத்தின்

அன்று. அடைவு—தருமம். அங்ஙனம். தேகத்தின் அடைவும் தேகதருமமன்று பின்னே, தேகத்திற்கு வேறு.

வி. உ. நாஸ்திகர்கள் உடலே ஆன்மா வென்று உரைத்த பிறகு சித்தாந்தி — தேகரூப ஆன்மாவைத் தவிர வேறு ஆன்மா இல்லை யென்று மொழிவது அநர்கலம். அர்த்தமற்றது, உடலுக்கு வேறு உயிர் உண்டென்பது தான் முறை. உடலிருந்தும் உயிரின் தருமங்கள் காணப் படவில்லை. அது அல்லாமலும் தேக தருமம் வேறு ஆத்ம தருமம் வேறு. உருவம், நீளம், பெருத்தல், சிறுத்தல், கருத்தல் சிவத்தல் முதலிய தருமங்கள் தேகதருமமாகும். இவை தேகமிருக்கும்வரை இருக்கும். தேகமகன்றதும் அவைகளும் அகன்றுவிடும். ஆத்ம தருமங்கள் உடல் இருந்துங் காணப்படாததால் உடலுக்கு எங்ஙனமாகும். ஆகாது என்பது பொருள்: உருவ முதலியவை உடலின் தருமங்கள், அவை அந்நிய மூலமாகவும் அறியப்படுகின்றன. ஆனல் சைதன்யம் ஸ்மிருதி, அறிவுமுதலிய ஆத்மதருமங்கள் அந்நிய சாதனங்கள் மூலமாக அறியப்படுகிறதில்லை.

இவ்வாறு உயிருள்ள நிலையில் உடலிருந்தும் இந்த தருமங்களை யிருப்பதாக எண்ண இயலாது. ஆனல் உடல் இல்லாமல் இருக்கும் போது இவைகளின் இன்மையை நிச்சயஞ் செய்ய முடியாது. இவை — ஆத்ம தருமங்கள். உடல் நழுவிய போதிலும் அந்நிய தேகத்தில் காணப்படுகின்றன. இம்முறையாகவும் எதிரியின் வாதத்தை யிடித்து நொறுக்கலாம்.

எந்தச்சைதன்யத்தைப் பூதங்களால் உண்டாகின்றது என்று சொல்லுகின்ருயோ அதன் வடிவ மென்ன? என்ற கேள்வியை எதிரியிடம் கேட்க வேண்டும். ஏனெனின், நாஸ்திகர்கள் நான்கு பூதங்களைத் தவிர வேறு எதையும் விரும்புகிறதில்லை. ஒரு வேளை பூதங்களுக்கும் பௌதிகங்

களுக்கும் அநுபவமுண்டாகிறதே அதுவே சைதன்யம் என்பாயாகில், அது பொருந்தாது. ஏனெனின் அவை யிரண்டின் விஷயமானதால் அவைகளின் தருமமாகாது. எதனாலோ வெனின், தன்னிடத்தில் வினைகள் நிகழ மாட்டா. எங்ஙனம் நெருப்பு கொதிக்கும் தன்மை யுடையதாயினும் தன்னைத் தான் எரிக்க இயலாது. கூத்தாடி எவ்வளவு நிபுணனாக இருப்பினும் தன் தோள் மேல் தான் ஏற இயலாது. அங்ஙனம் பூத பௌதிக தருமமாக இருந்து கொண்டு, சேதனத்தினால் பூத பௌதிகங்களை விஷயஞ் செய்ய முடியும். ஆனால் அவைகளால் அதை விஷயம் செய்ய முடியாது. அவைகள் — பூத பௌதிகங்கள். அது சைதன்யம்.

கண்ணைக் கொண்டு உருவத்தைப் பார்க்கலாம் கண்ணைப் பார்க்க முடியாதது போல. வேதாந்த மதத்தில் ஆன்மா 'நித்யோபலப்தி சொரூப:, என்கின்றது. சங்கர பாஷ்யம். என்றும் அடைந்ததென்பது பொருள். இதனாலும் ஆத்மா காயத்தின் வேறென்பது இனிது புலனும். ஒரு வடிவமாதலால் ''உபலப்தி நித்ய :'' என்பது. ச. பா. பொருள்களையறிவதற்கு காயம் காரணமன்று. ஏனெனின் இந்த உடலை விடுத்த பிறகு சூக்கும உடலில் பல பொருளை அறிகிறான். அறிவதுதான் உபலப்தி. எனவே தேகத்திற்கு ஆன்மா அந்நியம் என்பது உறுதி. தோலுக்குள்ளே காற்று இருந்தாலும் தோல் வேறு காற்று வேறுதானே. அதுபோல் ''அசரீரம் சரீரேஷு'' . . . என்றபடி சரீரேஷு = உடலுக்குள்ளே (உயிர் இருப்பினும்) அசரீரம் = (அது) சரீரமன்று என்கின்றது கடவல்லி. இதனாலும் உடல் வேறு உயிர் வேறென்று உணர வேண்டும். உயிர் — ஆன்மா. சூ. 54

3 3 4 4
31 அங்காவ பத்தாதிகரணம்.

அவதாரிகை.

இடையில் எழுந்த நாஸ்திக வாதத்தைச் சுருக்க மாகக்கண்டனஞ் செய்து மீண்டும் வேறுவேறு மறைகளில் வருகின்ற வேற்றுமைகளை யகற்றும் பொருட்டு அடுத்தப் பிரகரணத்தைத்துவக்குகின்றார்.

3 3 4 2 3
சூ. அங்காவ பத்தாஸ்து நஸாகாசு ஹி பிரதி வேதம் :
3—3—55

3 3 4 2 3
அங்காவபத்தா:, து, ந, ஸாகாசு, ஹி, பிரதிவேதம் என்று பிரிக்கவும்.

ப.உ. து = இதன் மூலமாக பரபக்ஷம் தள்ளப்படுகிறது. அங்காவபத்தா: = யாகத்திற்கு அங்கமான உத்கீத அவயவத் தோடு கூடிய உபாசனையை. சாகாசு = எந்தகிளையில் கூறியிருக்கின்றனரோ. அந்த கிளையிலேயே, செய்ய வேண்டும் என்பதில்லை. ஹி = ஏனெனின். ந = என்பது இதை யறிவிக்கின்றது. பிரதிவேதம் = ஒவ்வொரு வேதத்தை யோதுகின்றவர்களும் அதைச் செய்யலாம்.

3 3 2
வி.உ. "ஓம் இத்யேததக்ஷரம் உத்கீதம் உபாசீத" ஓம் என்னும் ஓரெழுத்தை உத்கீத வடிவமாக வழிபட வேண்டும் என்பது அரிய ஆம்நாயத்தின் உரியபொருள்.
4
சா.உ. (1-1-1) மேலும், லோகேஷு பஞ்சவிதம் சாமோ பாசீத,, ஐந்து விதமான சாமத்தோடு பொருந்தி வழிபட வேண்டுமென்று வேதம் விளம்புகின்றது. சா.உ (2-2-1) இம்மாதிரி யக்ஞத்திற்கு அங்கவடிவ உத்கீத முதலியவை களோடு சம்பந்தம் வைக்கின்ற பிரதீக உபாசனையெது வோ அதையெந்தகிளையை யுடையவர்கள் அதை வழிபட வேண்டும். வேறுகிளைகளை ஒதுபவர்கள் வழிபடக்கூடா தென்பதில்லை ஆனல் ஒவ்வொருகிளையைப் படிப்பவர்களும் அதைவழிபடலா மென்பது கருத்து.சூ. 56,

*அவதாரிகை*

முன் மொழிந்ததைத்தானே உதாரணமூலமாக உரைக்கின்ருர். சூாத்திரம்:-

3 3 4

**ஸூ. மந்த்ராதிவத் வா அவிரோத: 3—3—56**

மந்த்ராதிவத்,வா, அவிரோத: என்று பிரிக்கவும்

ப.உ. அவிரோத:=ஒருகிளையில் உரைக்கப் பெற்ற உத்கீத ஆதி உபாசனைகளை அந்நியகிளைகளை ஆதரிப்பவர்கள் வழிபடுவதால் யாதொரு குற்றமும் இல்லை. மந்த்ராதிவத். =எங்ஙனம் ஒருகிளையில் ஓதப்பட்ட மந்திரம், கருமம், குணங்கள் அந்நிய கிளைகளிலும் அருளப்பட்டிருக்கின்றனவோ அதுபோல.

வி.உ. கல்யாணத்திற்குக் கொண்டு வரப்பட்ட சமுக்காளம், பாய், தலையணை, பன்னீர்செம்பு, தாம்பாளங்கள் முதலியவைகளை சடங்கு வீட்டுக்காரர்களும் கொணர்ந்து வருகிருர்கள். அதனுல் என்னைக் குற்றம், ஒன்றுமில்லையென்பது உறுதி, அதுபோல் ஒருகிளையில் வரபட்ட உத்கீத முதலியவைகளை மற்றவர்கள் வழிபடப்படாதென்பது முறையன்று. எங்ஙனம் வைசுவானர வித்தையில் ஒவ்வொரு உபாசனை தனித்தனியாக வந்தபோதினும் அந்நியகிளையோரும் வழிபடுவது போலறிக. ஸூ. 56

4 4

பூம ஜ்யாயஸ்த்வ அதிகரணம்.

*அவதாரிகை,*

எங்ஙனம் வைசுவானர வித்தையில் ஒவ்வொரு அங்கத்தைப் பற்றி வர்ணனை வருகின்றதோ. அம்மாதிரி மற்றைய இடங்களிலும் வருகின்றன. அந்தந்த உபாசனைகளில் ஒவ்வொரு அங்கத்தைத் தனித்தனியாக வழிபட வேண்டுமா அல்லது எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து வழிபட வேண்டுமா என்பதற்கு சூத்திரம்:-

4 2 3
## ஸூ· பூம்ந: க்ரதுவத் ஜ்யாயஸ்த்வம் ததாஹி தர்ஸயதி
3—3—57

4 2 3
பூம் ந:, க்ரதுவத், ஜ்யாயஸ்த்வம், ததா, ஹி, தர்ஸயதி என்று பிரிக்கவும்.

ப.உ. பூம் ந: = எல்லா உபாசனைகளையும். ஜ்யாய ஸ்த்வம்=முக்கியமாக மொழியப் பட்டிருக்கிறது. க்ரதுவத்= தர்ச பௌர்ணமாச யாகத்தில் எல்லா அங்கங்களையும் ஒன்ருகச் சேர்த்து உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது. ததாஹி = அவ்வாறு. தர்ஸயதி = சுருதிகளில் அருளப் பெற்றிருக்கிறது.

வி.உ.''பிராச்சீன சால ஔபமந்யவ:'' உபமந்யுவின் புதல்வன் பிராச்சீன சாலன் என்னும் நாமத்தையுடைய வனும், அஸ்வபதியென்னும் மன்னனும் வைசுவாநர என்னும் வித்தையை உசாவிக் கொண்டனர். அங்கு சகல உபாசனைகளையும் ஒன்று சேர்த்து உரைக்கப் பட்டிருக்கிறது. திவிலோக முதல் எல்லா அவயவங்களையும் வைசுவானர ஞேடு கலந்து வழிபட வேண்டுமென்று வரைந்திருக்கிறது. அஸ்வபதி யென்னும் அரசன் உபமன்யுவை யழைத்து நீ, எதை வைசுவாநரனென்று வழிபடுகின்ருய் என்று வினவினன். உபமன்யு-அரசே! திவிலோகத்தை வைசுவா நரனென்று வழிபடுகிறேன்'' என்ருன்.

அரசன்-நீ யெதை ஆன்மாவென்று வழிபடுகின்ருயோ அது சுதேஜா என்னும் பெயரையுடைய வைசுவாநர ஆன்மாவாகும். இவ்வாறு அனைத்தையும் சேர்த்து வழி பட்டிருக்கிறது. ''தஸ்ய ஹ வா..., வைசுவாநர ஆத்மா விற்கு திவிலோகம் சிரசாகவும், கண் சூரியனுகவும்,

பிராணன் வாயுவாகவும், தேகத்தின் நடுப்பாகம் மிகுந்த ஆகாசமாகவும், மூத்ரஸ்தானம் தண்ணீராகவும், நிலம் இருகால்களாகவும் இவ்வாறு எல்லா உறுப்புக்களேயும் இணேத்திருக்கிறது.

இங்கு ஐயமுண்டாகிறது. என்ன ஐயம்? மேலே சொன்ன வாக்கியத்தில் வியஸ்த சமஸ்த. தனித்தனியாகவும் எல்லாஞ்சேர்ந்ததுமான இரண்டுவித உபாசனேயும் வெவ்வேரு அல்லது ஒன்ரு என்பது தான் சம்சயம். உனது மதமென்னே? வெவ்வேறு என்பதுதான். வியஸ்த உபாசனே தான். ஏனெனின், பல சுருதியில் சுத, பிரசுத, ஆசுத என்று பல பேதங்கள் காணப்படுகின்றன. சுத = குறைந்த சோமதிரவியம். சித்தாந்தி — நீ மொழிந்தது முறையன்று. ஏனெனின், எல்லா உறுப்புக்களேயும் ஒன்று சேர்த்து எவன் வழிபடுகின்ருனே அவன் அநந்தம் பலமஸ்நுதே,, என் கின்றது ச.பாஷ்யம். ஒவ்வொரு உபாசனேக்கும் குறைந்த பலமும் எல்லாவற்றையும் இணேத்து வழிபடுவதற்கு நிறைந்த பயனும் கிடைக்குமென்று நிகழ்த்தப்பட்டிருக் கிறது. பூமாவை ஜ்யாயானென்று பேசப்பட்டிருக்கிறது. பூமா-ஆன்மா. ஜ்யாயான்—உயர்ந்தது.

பிராச்சீன சாலன் முதல் உத்தாலகர் இறுதியாக ஆறுரிஷிகள் வைசுவாநர வித்தையில் உறுதி பெருமல் அஸ்வபதி மன்னனிடஞ் சென்று அதைப் பற்றி வினவ, மன்னன்—நீங்கள் அனேவரும் ஒவ்வொரு அவயவத்தை வைசுவாநரன் என்று வழிபடுகின்றீர். நல்ல வேளே யென்னிடம் வந்தீர். இல்லேயேல் உங்கள் சிரசு வெடித்து விடும், என்றனன். இதனுலும் எல்லா அங்கங்களேயும் இணேத்து வழிபடுபவர்க்கு அநந்த பயன் உண்டாகும் என்பது இனிது புலனும்.

யாகத்தைப் போல. அமாவாசைக்குத் தர்ச மென்று பெயர். மாசம் இரு முறை செய்கின்ற யாகத்திற்கு தர்ச

பௌர்ணமாசயாக மென்று பெயர். இந்த யாகத்தில் எல்லா அங்கங்களையும் சேர்த்து யாகம் செய்ய வேண்டு மென்று கர்ம காண்டத்தில் கழறப்பட்டிருக்கிறது. கழறுதல் — சொல்லுதல். தனித்தனியாக அங்கங்களை வழிபடுவது நிந்தை யென்றும் அஸ்வபதி மன்னன் அருளினன். வ்யஸ்த அங்க வழிபாடு சிறந்த தென்பது சித்தாந்தபக்ஷம். சூ. 57.

3 3 3 4 3 4
33 சப்தாதி பேதாதிகரணம்.

*அவதாரிகை.*

வேறு வேருக விளம்பப்பட்ட பிரஹ்ம வித்தை வேறு வேரு அல்லது ஒன்ரு என்பதற்குப் பதில் சூத்திரம் :-

3 3 3 4 3
**சூ. நாநா சப்தாதி பேதாத் 3—3—58**

நா நா, சப்தாதி, பேதாத் என்று பிரிக்கவும்.

ப. உ. நா நா = வித்தை வெவ்வேறு. சப்தாதி பேதாத் = ஏனெனின் வேத, உபாசீத இம்மாதிரி சப்த பேதம் காணப்படுகிறது.

வி. உ. வித்தை அநந்தம். பல என்பது பொருள். சத்வித்தை, பூமவித்தை, தகரவித்தை, உபகோசலவித்தை, சாண்டில்ய வித்தை, வைசுவாநர வித்தை, ஆனந்தமய வித்தை, அக்ஷரவித்தை இம்மாதிரி வித்தைகள் அநந்தம். அவைகளின் நாமம், பிரகாரம் இவைகளின் பேதம் தெரியப் படுகின்றன. வித்தை பலவாருக இருப்பினும் முக்தி யென்னும் பயன் ஒன்றே. பேதம் அதிகாரி நிமித்தம். ஒரு மருந்து ஒரு நோயைக் கேட்கும். மற்றொரு மருந்து மற்றொரு நோயைக் கேட்கும்.

அது போல் ஒரு அதிகாரிக்கு ஒரு வித்தையில் பிரியமுண்டாகும் மற்றொரு அதிகாரிக்கு மற்றொரு

வித்தையில் பிரியமுண்டாகும். எல்லா நோய்க்கும் ஒரு அமிர்தாஞ்சனம் போதாது. எனவே வித்தை யநேகமாக இருக்க வேண்டுவதில்லை. எந்த உணவை யுண்டாலும் பசிப் போகுதல் உறுதி. ஆன்மாவின் அடைவு ஒன்ருயிருந்தாலும் வித்தை வேறு என்பது கருத்து. சூ. 58

4

விகல்போ அவிசிஷ்ட அதிகரணம்

*அவதாரிகை.*

மேலே சொன்ன எல்லாவற்றையும் (சமுச்சயம்) சேர்க்க வேண்டும் என்று விளம்பியிருக்கிறதா அல்லது விகல் பத்தை விளம்பியிருக்கிறதா என்பதற்கு பதில் சூத்திரம் வருமாறு:-

2

**ஸூ. விகல்போ அவிசிஷ்ட பலத்வாத் 3—3—59**

விகல்ப:, அவிசிஷ்ட பலத்வாத், என்று பிரிக்கவும்.

ப. உ. விகல்ப := சகுண வித்தைக்கு விகல்பம் சிறந்தது. அவிசிஷ்ட பலத்வாத் = வேத்திய வஸ்துவின் சாக்ஷாத்கார மென்னும் பலம் சமானமாக இருப்பதால்.

வி. உ. இந்த அதிகரணத்தில் வித்தைகளை அநுஷ் டிப்பதின் முறைகளை அருளப்படுகிறது. உபாசனை மூன்று விதம் — அஹங்கிரஹம், தடஸ்தம், அங்காஸ்ரிதம் என்பன வாம். இவை மூன்றில் இங்கு அஹங்கிரஹ, உபாசனையைப் பற்றி விசாரஞ் செய்யப்படுகிறது. அஹங்கிரஹ உபாசனை — தனது இஷ்ட தெய்வத்தைத் தனது வடிவமாக வழி படுதல். விரும்பியவாறும் விகல்பமாகவும் கூறியிருப்பதால் வித்தை பலவாருகப் பன்னப் பட்டிருக்கிறது. பன்னுதல் — பகர்தல். எனவே இங்கு சந்தேகமுண்டாகிறது.

பூர்வபக்ஷி — உபாசனை பலவாருக இருப்பதால் சமுச்சயத்திற்கு ஒரு காரணமுமில்லை. உபாசனைகளில்

பௌர்ணமாசயாக மென்று பெயர். இந்த யாகத்தில் எல்லா அங்கங்களையும் சேர்த்து யாகம் செய்ய வேண்டு மென்று கர்ம காண்டத்தில் கழறப்பட்டிருக்கிறது. கழறுதல் — சொல்லுதல். தனித்தனியாக அங்கங்களை வழிபடுவது நிந்தை யென்றும் அஸ்வபதி மன்னன் அருளினன். வ்யஸ்த அங்க வழிபாடு சிறந்த தென்பது சித்தாந்தபக்ஷம். சூ. 57.

3 3 3 4 3 4
33 சப்தாதி பேதாதிகரணம்.

*அவதாரிகை.*

வேறு வேருக விளம்பப்பட்ட பிரஹ்ம வித்தை வேறு வேரு அல்லது ஒன்ரு என்பதற்குப் பதில் சூத்திரம் :-

3 3 3 4 3
**ஸூ. நாநா சப்தாதி பேதாத் 3—3—58**

நா நா, சப்தாதி, பேதாத் என்று பிரிக்கவும்.

ப. உ. நா நா = வித்தை வெவ்வேறு. சப்தாதி பேதாத் = ஏனெனின் வேத, உபாசீத இம்மாதிரி சப்த பேதம் காணப்படுகிறது.

வி. உ. வித்தை அநந்தம். பல என்பது பொருள். சத்வித்தை, பூமவித்தை, தகரவித்தை, உபகோசலவித்தை, சாண்டில்ய வித்தை, வைசுவாநர வித்தை, ஆனந்தமய வித்தை, அக்ஷரவித்தை இம்மாதிரி வித்தைகள் அநந்தம். அவைகளின் நாமம், பிரகாரம் இவைகளின் பேதம் தெரியப் படுகின்றன. வித்தை பலவாருக இருப்பினும் முக்தி யென்னும் பயன் ஒன்றே. பேதம் அதிகாரி நிமித்தம். ஒரு மருந்து ஒரு நோயைக் கேட்கும். மற்ருெரு மருந்து மற்ருெரு நோயைக் கேட்கும்.

அது போல் ஒரு அதிகாரிக்கு ஒரு வித்தையில் பிரியமுண்டாகும் மற்ருெரு அதிகாரிக்கு மற்ருெரு

வித்தையில் பிரியமுண்டாகும். எல்லா நோய்க்கும் ஒரு அமிர்தாஞ்சனம் போதாது. எனவே வித்தை யநேகமாக இருக்க வேண்டுவதில்லை. எந்த உணவை யுண்டாலும் பசிப் போகுதல் உறுதி. ஆன்மாவின் அடைவு ஒன்ருயிருந்தாலும் வித்தை வேறு என்பது கருத்து. ஸூ. 58

4

## விகல்போ அவிசிஷ்ட அதிகரணம்

*அவதாரிகை.*

மேலே சொன்ன எல்லாவற்றையும் (சமுச்சயம்) சேர்க்க வேண்டும் என்று விளம்பியிருக்கிறதா அல்லது விகல் பத்தை விளம்பியிருக்கிறதா என்பதற்கு பதில் சூத்திரம் வருமாறு:-

2

## ஸூ. விகல்போ அவிசிஷ்ட பலத்வாத் 3—3—59

விகல்ப:, அவிசிஷ்ட பலத்வாத், என்று பிரிக்கவும்.

ப. உ. விகல்ப := சகுண வித்தைக்கு விகல்பம் சிறந்தது. அவிசிஷ்ட பலத்வாத் = வேத்திய வஸ்துவின் சாக்ஷாத்கார மென்னும் பலம் சமானமாக இருப்பதால்.

வி. உ. இந்த அதிகரணத்தில் வித்தைகளை அநுஷ் டிப்பதின் முறைகளை அருளப்படுகிறது. உபாசனை மூன்று விதம் — அஹங்கிரஹம், தடஸ்தம், அங்காஸ்ரிதம் என்பன வாம். இவை மூன்றில் இங்கு அஹங்கிரஹ, உபாசனையைப் பற்றி விசாரஞ் செய்யப்படுகிறது. அஹங்கிரஹ உபாசனை — தனது இஷ்ட தெய்வத்தைத் தனது வடிவமாக வழி படுதல். விரும்பியவாறும் விகல்பமாகவும் கூறியிருப்பதால் வித்தை பலவாருகப் பன்னப் பட்டிருக்கிறது. பன்னுதல் — பகர்தல். எனவே இங்கு சந்தேகமுண்டாகிறது.

பூர்வபக்ஷி — உபாசனை பலவாருக இருப்பதால் சமுச்சயத்திற்கு ஒரு காரணமுமில்லை. உபாசனைகளில்

நித்தியமென்னும் சுருதியும் காணப்படவில்லை. ஆகையால் சமுச்சயம் என்பதற்கு நியாயமில்லை. ஏவம் இம்மாதிரி விகல்பத்திற்கும் நியாயமில்லை. ஒரு வித்தைக்கு உரியவனை மற்றொரு வித்தைக்கு அதிகாரியில்லையென்று ஒதுக்கவில்லை அவரவர்கள் விருப்பப்படியென்று சொல்லப் பட்டிருக்கிறது.

இவ்வித்தைக்குச் சமான பலமுண்டாவதால் விகல்ப சமுச்சயம் பொருந்தும். ஏனெனின், ''மநோமய : பிராண
2
சரீர:, 'கம் பிரஹ்ம, கம்பிரஹ்ம, சத்யகாம:, சத்ய சங்கல்ப:' இம்மாதிரியான சுருதி சமானமாக இறைவனையடை வதென்னும் (பலம் — பயன்) பலத்தை அறிவிக்கின்றது. இவைகளால் குற்றமொன்றுமில்லை. இதுவரை பூர்வபக்ஷம். இனி சித்தாந்தி — இவ்வுபாசனைகளைச் செய்து உபாஸ்ய வடிவ பயனைப் பெறுவதுதான் சமான ரூப பலம்.

ஒரு உபாசனையால் இறைவன் தெரிசனங்கிடைத்த போது வேறு உபாசனை பயனற்றுப் போகின்றது. சமுச்சய பக்ஷத்தில் சாக்ஷாத்காரம் உண்டாகிறதில்லை. ஏனெனின் சமுச்சயம் சித்த விக்ஷேபத்திற்குக் காரணம். ''யஸ்ய ஸ்யாத்
4
அத்தா'' நான் இறந்து இதை யடைவேன் என்று யாருக்கு இந்த எண்ணம் உண்டாகுமோ அவனுக்கு இறைவன் அடைவு உண்டாவதில் சந்தேகமில்லை. மேலும்
3 4 3
''தேவோ பூத்வா தேவாந் அப்யேதி'' அவன்இவ்வுலகில் தேவனாகி (தேவனை) இறைவனை அடைகிறான் என்பது
3 4 4
பொருள். ''சதா தத்பாவ பாவித:., ப. கீ. அதை எப்போதும் எண்ணுபவன் யடைகிறானென்பது கீதையின் வசனம். அதை-ஆன்மாவை. தனது எண்ணம் நிறைவேறும் வரை யொன்றையே வழிபட்டுவர வேண்டும் என்பது கருத்து. சூ. 59,

## 35 காம்ய அதிகரணம்

அவதாரிகை.

சகாம உபாசனே தனித்தனியாகச் செய்யவேண்டும் என்று கூறியிருக்கிறதே. அதை யநுஷ்டிக்கும் முறை இங்கு அருளப்படுகிறது. சூத்திரம்:-

**ஸூ. காம்யாஸ்து யதாகாமம் சமுச்சீயேரந் நவா, பூர்வ ஹேத்வ பாவாத் 3—3—60**

காம்யா:, து, யதாகாமம், சமுச்சீயேரந், நவா, பூர்வஹேத்வா பாவாத் என்று பிரிக்கவும். காம்யாஸ்து = காம்ய வித்தையின். யதாகாமம் = இச்சாநுசாரம். சமுச்சீயேரந் நவா = சேர்க்க வேண்டுமா அல்லது வேண்டாமா? பூர்வ ஹேத்வாபாவாத் = ஏனெனின், சமான பலரூப ஹேதுவிற்கு அபாவம்.

வி.உ. சகாம் உபாசனேக்குப்பயன் வெவ்வேருக விளம்பப்பட்டிருக்கிறது. ஒன்ருகக் கூறவில்லே. எத்தனே யுபாசனேயோ அத்தனே பயன் அருளப்பட்டிருக்கிறது. முன்னே சொன்ன காரணம் இங்கு இல்லாததாலும், இன்ன மாதிரிதான் செய்ய வேண்டுமென்னும் நியமம் இன்மை யாலும் விரும்பியவாறு செய்யலாம். எந்த எந்த பொருளே அடைய வேண்டுமென்று விரும்புகின்ருனே அந்த அந்த விழைவுக்குத் தக்கவாறு வினேகளேச் செய்யலாம். காமியின் போகத்திற்கு அளவு இல்லாதது போல் அவனது உபாசனே — வழிபாட்டிற்கும் அளவில்லே. இந்த அதிகாரி தனித் தனியாகவும், சேர்த்தும் வழிபாடுகளேச் செய்யலாம் சூ.60

## 36 யதா ஆஸ்ரய பாவ அதிகரணம் சூ.61 சூ 66.

அவதாரிகை.

கர்மத்திற்கு அங்கமாக விதிக்கப் பெற்ற உத்கீத முதலிய வைகள் பற்றியிருக்கும் மூன்று வேதங்களில் மொழியப்பட்ட

உபாசனைகள் எல்லாம் ஒன்று சேர வேண்டுமா அல்லது அவரவர்கள் மனம் போல வழிபட வேண்டுமா என்பதற்கு சூத்திரம்:-

3 2 4
சூ· அங்கேஷு யதா ஆஸ்ரயபாவ: 3—3—61
அங்கேஷு, யதா, ஆஸ்ரயபாவ: என்று பிரிக்கவும்.

ப.உ. அங்கேஷு=கர்ம அங்கவடிவ உத்கீதஆதி உபாசனைகளில். யதா ஆஸ்ரயபாவ;=எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டு மென்பது நியமம். எங்ஙனம் யாகங்களில் கொள்ளப்பட்ட அங்கங்களைச் செய்ய வேண்டும் என்பது போல அறிக.

வி.உ. யாகங்களுடைய அங்கங்களும் அவைகளைப் பற்றிய உபாசனைகளும் மூன்று வேதங்களிலும் முறையாக வர்ணிக்கப் பெற்றிருக்கின்றன. ஆனால் மூன்றையும் சமானமாக மொழிந்திருக்கின்றன. எனவே அங்கத்திற்குச் சமானமாக உபாசனைகளையும் வழிபட வேண்டுமென்பது கருத்து. ஆனால் பசு பால்கறக்குந்தன்மை போலன்று. அதுசமஸ் என்னும் பாத்திரத்தில் விதிக்கப் பட்டிருக்கிறது.

சமாகரணம் — சமானமாகச் செய்வது. குற்றத்தை ஆராய்வது சமாஹாரம். இந்த சமாஹாரலிங்கத்தினாலும் உபாசனைகளைச் சேர்க்கவேண்டும் என்பது வெளியாகின்றது. எங்ஙனமெனின், ரிக்வேதிகளுக்கு எந்த ஓங்காரம் உண்டோ, அதுசாம வேதிகளுக்கும் உரியது. இம்மாதிரி சாந்தோக்கியத்தில் சாற்றப்பட்ட எந்த உத்கீததியானம் உண்டோ அது முண்டகத்திலும் மொழிந்திருக்கிறது. இவை யெல்லாம் சமுச்சயத்திற்கு அடையாளம் ஆகும். வழிபாடெல்லாம் ஆஸ்ரயத்திற்கு அதீனம். ஆஸ்ரயம்—பற்றுதல். அதீனம்—பரதந்திரம். சூ. 61

கூறியதை வற்புரித்திக் கூறுகின்றூர். சூத்திரம்

## சூ. சிஷ்டேஶ்ச 3—3-62

ப.உ. விதிக்கப்பட்ட போதிலும் அங்கத்திற்கு அநு சாரம் சமுச்சயம். சமுச்சயம்—சேர்த்துக் கொள்வது.

வி.உ. எவ்வாறு மூன்று வேதங்களிலும் துதிகள் சமானமாகத் துதிக்கப் பட்டிருக்கின்றனவோ அவ்வாறு ஆஸ்ரித-தன்னைப்பற்றிய உபாசனைகளும் உரைக்கப் பெற்றி ருக்கின்றன. அங்கங்களுக்கும் உபாசனைகளுக்கும் ஒரு வேற்றுமையுமில்லை. தன்னை—கருமத்தை. சூ. 62

## சூ. சமாஹாராச்ச 3—3—63

ப.உ. வேறு இடத்தில் விளம்பிய பிரணவத்தை மற்றொரு இடத்திலும், சமாஹாராத்=சொன்னபோதிலும் கருமத்தின் அங்கத்தைப் பற்றியிருக்கும் உபாசனை—வழி பாடுகளை சேர்த்திருக்கிறது. கருமத்தின் அங்கங்களையும் அதன் வழிபாடுகளையும் வேதங்களில் ஒருபடித்தாக உரைத் திருக்கின்றன.

உத்கீத உபாசனையில் துதிபாடுபவர் ஹோத்தா எனப்படுவர். அவர்துதிபாடும் பொழுது பிழை இருப்பின் அதையும் சுத்தஞ்செய்து கொள்கின்றூர் என்று மொழிந்-திருக்கிறது. இம்மாதிரி பிரணவத்தையும் உத்கீதத்தையும் ஒன்றென்று உணர்ந்து வழிபட வேண்டுமென்று உணர்த்தி யிருக்கிறது. இவையிரண்டையும் இணைத்திருப்பதாலும் கருமரூப உபாசனைகளுக்கு சமுச்சயம் சாற்றிருக்கிறது என்றறியலாம். சூ 63

அவதாரிகை.

மீண்டும் அதை வலியுறுத்திக் கூறும் சூத்திரம்.

3 4
ஸூ· குண ஸாதாரண்ய ச்ருதேஶ்ச 3—3—64

3
ப.உ. ''தேநேயம் த்ரயி வித்யா வர்ததே'' தேந = ஒங்காரத்தினல். த்ரயி = வேதங்கள். வர்த்ததே = விளங்குகின்றன. இதன் மஹிமை எல்லா வேதங்களிலும் சாதாரணமாகச் சொல்லியிருக்கிறது.

வி.உ. உபாஸ்ய ஓங்காரம் எல்லா இடங்களிலும் ஒன்ருயிருப்பதால் சமுச்சயங் காணப்படுகிறது. தேந = ஓங்காரரூப ஒரெழுத்தால் ரிக்வேத முதலிய வேதங்கள் பிரகாசிக்கின்றன. பிரகாசமாவன — ஓம்என்று சொல்லி அத்வர்யு என்னும் புரோஹிதன் வேதத்தை யோதுகிருன்.

ஓம் என்று சொல்லி ஹோத்தா சம்சனம் செய்கிருர். சம்சனம் — சொல்லுதல். ஓம் என்று சொல்லி உத்காதா சாமவேதத்தைப் படிப்பவர்கள் சாமகானத்தைச் செய்கிருர் கள்.

இந்தச் சுருதிகள் சகுண வித்தையின் ஆஸ்ரய வடிவம் ஓங்காரத்தை மூன்று வேதங்களிலும் பொதுவாகக் கேட்கப் படுகிறது. எனவே ஓங்காரத்தைப் பற்றியிருக்கும் உபாசனை களும் பொதுவானவை. இவை யிதற்கு லிங்கங்களாகும். இதனுலும் கரும அங்க வடிவமான உபாசனைகளுக்கு சமுச் சயம் உண்டாகுமென்பதில் ஐயமில்லை. உசிதம் என்பது முறை. உசிதம் — பொருத்தம்.

ஓங்காரத்தை மூன்று வேதங்களிலும் பொதுவாகக் கூறியிருக்கிறது. ஓங்காரம் சாதாரனமானதால் அதைச்

சார்ந்துள்ள உபாசனையும் சாதாரணமாகும். இது லிங்க தர்சனம். அடையாளமென்பது குறிப்பு.

*அவதாரிகை.*

இம்மாதிரி நான்கு சூத்திர வாயிலாக எதிரியின் வாதத்தை யினிமையாக இயம்பி, இனியிரண்டு சூத்திர மூலமாக எதிரிக்கு இனிய முறையில் சமாதானஞ் செய்து இந்த பாதத்தை முடிக்கின்றுர்

**ஸூ. நவாதத் ஸஹபாவாஸ்ருதே : 3—3—65**

4

ந, வா, தத் ஸஹபாவாஸ்ருதே : என்று பிரிக்கவும்.

ப.உ. ந வா = அங்காஸ்ரித — அங்கத்தைப் பற்றி யிருக்கும். உபாசனைகளுக்கு சமுச்சயங் கூடாது. தத் ஸஹபாவாஸ்ருதே: = ஏனெனின், க்ரஹங் க்ரஹீத்வா, என்று அங்கங்களோடு சொல்லியிருக்கிறதோ அது போல் அங்கங்களோடு இணைத்துச் சொல்லும் சுருதி இல்லை.

வி.உ. நவா என்னும் சொல் எதிரியின் பிடிவாதத்தை இடித்துத் தகர்க்கிறது. வா — உறுதி அங்கத்தைப் பற்றிருக்கும் வழிபாடுகளை பற்றுதலுக்கு அநுசாரம் சமுச்சயமுண்டாக முடியாது. ஏனெனின், அதை யுரைக்கும் சுருதி யில்லாத தால் எவ்வாறு மூன்று வேதங்களிலும் முறையாக வழி பாடுகளை விதித்த மாதிரி எங்ஙனம் கிரஹம் — வீட்டு பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டு, அல்லது சமச பாத்திர மென்னும் ஒரு வித பாத்திரத்தில் சோமரசத்தை நிரப்ப துதியைத் தொடங்குகிறுர் என்றும், ''ஹேபிரஸ்தோதா! நீ, சாமகானம் செய், ஏ ஹோதா! நீ இந்த யாகத்தைச் செய், ''என்று சுருதிகள் சொல்கின்றன. இவ்வாறு உபாசனைகளுக்கு சமுச்சயத்தைக் கூறும் மறைகள் இல்லை.

மேலும் வழிபாடுகள் மனித முயற்சியாகும். ஒன்று கிருத்வர்த்தம், மற்றொன்று புருஷார்த்தம். கிருத்வர்த்தம் — சொர்க்கத்தைத் தருவது, புருஷார்த்தம் ஞான வாயிலாக முக்தியை அளிப்பது. ஆகையால் வழிபாடுகளை தனது மனம் போலச் செய்ய வேண்டும். சூ. 65,

அவதாரிகை.

இந் நிலையை வேறு விதத்தில் உணர்த்துவதற்காக சூத்திரம் :-

சூ. தர்ஸநாச்ச[3] 3—3—66

தர்ஸநாத்,[1] ச என்று பிரிக்கவும்.

ப. உ. தர்ஸநாத் = சுருதியும் மேலே மொழிந்த பொருளை நன்கு விளக்குகின்றது. ச = மேலும்.

வி. உ. மூன்று வேதங்களையும் முறைப்படிக் கற்றுணர்ந்த பிரஹ்ம தேவனால் புரோஹிதர்கள் காப்பாற்றப் படுகிறார்கள். இதனால் எல்லா வழிபாடுகளும் ஒன்றென்பது ஒவ்வாது. வேதங்கள் இவ்வாறு விளம்புகின்றன. "ஏவா வித்ஹவை பிரஹ்மா" இதை நன்கு உணர்ந்த பிரஹ்மா யக்ஞம் யஜமானம் = யாகத்தையும், யஜமானையும், சர்வான் ரித்விஜோ = எல்லா புரோஹிதர்களையும் அபிரக்ஷதி = நன்றாகக் காப்பாற்றுகிறார் என்பது ஆம்நாயத்தின் பொருள். சா. உ. 4-17-10) இச் சுருதி வழிபாடுகளின் தனித்தன்மையை அறிவிக்கின்றது. எல்லா உபாசகர்களும் அறிவாளிகளாக இருந்தால் அயன்யாரையும் இரக்ஷிக்க வேண்டுவதில்லை. எனவே இதனால் வழிபடுபவன் தனது எண்ணம் எவ்வாறோ அவ்வாறு வழிபடலாம் என்பது இனிது புலனாகின்றது. சூ 66, பிரஹ்ம சூத்திர மூன்றாவது அத்யாயத்தின் மூன்றாவது பாதம் முற்றிற்று.

மூன்ருவது அத்யாயத்தின் நான்காவது பாதம். இங்கு நிற்குண வித்தையின் அகம்புற சாதனங்கள் விசாரிக்கப்படுகின்றன.

2 4

(1) புருஷார்த்த அதிகரணம். சூ. (1-17)

அ—கை.

மூன்ருவது பாதத்தில் இறைவனை யடைவதற்குரிய உபாய வடிவ உபாசனைகளை வேறு-வேறு விஷயங்களில் எழுந்த விரோதம் விலக்கப் பெற்றது. மீண்டும் இந்த வழிபாடு களைத் தனித்தனியாக வழிபடுவதா அல்லது சேர்ந்து வழி படுவதா என்றும் விசாரணை செய்யப்பட்டது.

இனி யிந்த பாதத்தில் தத்வ ஞானம் தானுக முக்திக்குச் சாதனமா அல்லது இல்லையா என்றும், தத்வ ஞானம் தானுக சாதனமானுல் அதற்கு அகம் புறம் சாதனங்கள் எவையென்று (பகிரங்கம், அந்தரங்கம்) அறி விக்கப்படுகிறது. மேலும் இந்த அதிகரணத்தில் மோக்ஷத் திற்கு தத்வ ஞானமட்டும் சாதனமா அல்லது கருமத் தோடு கூடிய தத்வஞானம் சாதனமாவென்று ஆராயப்படு கிறது. முதன் முதல் வியாச முனி தமது மதத்தை வலி யுறுத்துகிருர் :-

2 3 3 3 3 3

**சூ. புருஷார்த்தோ அதஸ்ஸப்தாதிதி பாதராயண :**
**3—4—1**

புருஷார்த்த:, அத:, சப்தாத், இதி, பாதராயண : என்று பிரிக்கவும்.

ப. உ. பாதராயண: = வியாசர். அத: = இந்ததத்வ ஞானத்தால் புருஷார்த்த: = முக்தி ரூப வீடு உண்டாகிறது சப்தாத் =மறைகளின் வாக்கியத்தால் காணப்படுகிறதென் பது அவர்கருத்து. அவர்-வியாசர்

வி.உ. முந்திய பாதத்தில் அபரவித்தையின் மஹிமையை முடித்து விட்டு ஆன்மசொரூபத்தை அறிவித்திருக்கிறது. இந் நான்காவது பாதத்தில் கருமத்தை விரும்பாத உபாசனே, நிஷ்காமயக்ஞ முதலியவைகளே பஹிரங்க சாதனமாக மொழியப்படுகிறது.

இதன்பிறகு ஞானத்தை விரும்பும் அதிகாரி மூலமாக மீண்டும் கருமத்தைச் செய்ய வேண்டுமா அல்லது ஞானத்தை மட்டும் விரும்ப வேண்டுமா என்பது விசாரம். இப்படி ஆராயும் பொழுது சூத்திரக்காரர் முதலில் தனது சித்தாந் தத்தையருளுகின்ருர். புருஷார்த்தோ அத: என்று.

அவர் மதம் என்னே? வேதாந்தத்தில் விதிக்கப் பெற்ற விமல ஞானம் ஒன்றினுலேயே வீடு அடையும் என்பதுதான். இது எங்ஙனந் தெரிகிறதெனின் 'சப்தாத், ''தரதி சோகம் ஆத்ம வித்'' சா.உ. (7-1-3) ஆத்ம ஞானி சோகத்தை —தொல்லே நிறைந்த அக்ஞானத்தையும் அதன் காரியவடிவ சம்சாரத்தையும் கடக்கிருன் என்பது மறையின் பொருள் ''சயோ ஹவை தத்பரமம் பிரஹ்மவேத பிரஹ்மைவ பவதி, மு. உ. (3-2-9) . எவன் ஒருவன் பிரஹ்மத்தை யறிகிருனே அவன் பிரஹ்மம் ஆகிருன் என்பது இச் சுருதியின் பொருள். ''பிரஹ்மவித் ஆப்நோதிபரம்,, தை. உ. (2-1-1) ஆன்மாவையறிந்தவன் அரிய பரத்தையடைகிருன் என்கின்றது. பரம்-பரம் பொருள். இன்னும் பற்பலச் சுருதிகள் தத்வஞானத்தை மோக்ஷத்திற்கு நேரடி சாதனமாகச் சொல்லுகின்றன. மேலும் பொருந்திய விருத்தி யொன்றே போதும் மெய்ப் பொருள் காண்போர்க்கே என்றும், விருத்தி யென்றது இங்கு ஞானம்.

ஞானமின்றி நற்கதிக்கு' நல் வழிகள் அம்மே நாடினும் இல்லையென்று நன்றுரைத்தாரம்மே. என்பது வேதாந்த ரத்னம். பொருள் வெளி.

நாடிய நம் சொரூபம் ஞானமின்றி யெய்திடுமோ வேதாந்தரத்னம். என்னும் தமிழ் மறைகளாலும் ஞானம் ஒன்றே வீட்டிற்குச் சிறந்த சாதனமென்பது தெளிவு. சூ.

அ—கை.

மேலே வியாசர் விளம்பிய வேதாந்த சித்தாந்தத்தைக் கீழே வரும் சூத்திரவாயிலாக ஜைமினி கண்டிக்கிறார்— சூத்திரம் வருமாறு—

சூ. சேஷத்வாத் புருஷார்த்த வாதோ யதாஅந்யேஷ்² இதிஜைமிநி: 3—4—2

சேஷத்வாத், புருஷார்த்தவாத: யதா அந்யேஷு², இதி, ஜைமிநி : என்று பிரிக்கவும்.

ப.உ. சேஷத்வாத் = ஞானம் கர்மத்திற்கு அங்கமாதலால். யதா = எங்ஙனம். அந்யேஷு² = வேறு திரவ்யத்திற்குச் சமானம். புருஷார்த்தவாத: = ஞானத்தினால் மோக்ஷமென்ற சுருதியும் அர்த்தவாதமாகும். அர்த்த வாதம் — புகழ்ந்து பாடுவது. உங்களைப் போல உண்டா என்று சொல்வது போல. உண்மையல்ல என்பது கருத்து.

வி.உ. 'சேஷத்வாத்' சேஷம் — கருமம். கருமத்தை ஆத்மா செய்கிறது. ஆகையால் கர்த்திரு ரூபமாக ஆன்மா கருமத்திற்கு அங்கமாகிறது. எனவே அதனது ஞானமும் அங்கமாகும். நெல், புல், தவசம் முதலியவை கருமத்திற்கு அங்கம், அதுபோல் அறிக. இதனால் ஆன்மஞானத்தை முக்திக்குச் சாதனமென்பது அர்த்த வாதம். அவ்வாறு ஜைமினி மகரிஷி செப்புகின்றார்.

எவ்வாறு அன்னிய பொருள் சம்ஸ்கார ரூப கருமத்தில் ''யஸ்ய பர்ணமயி ஜுஹூர் பவதி'' பர்ணம் இலை. அதனால் செய்யப்பட்ட குடீல் பர்ணமயி எனப்படும். அதில் வாழ்பவன் பாவ வார்த்தையைக் காதால் கேட்கிறதில்லையென்றும், அவன் நேத்திரத்தில் (அஞ்சனம்) மைத் தீட்டுகிறான் இதனால் பகைவனுடைய கண் தெரியாமல் போய் விடுகிறது. பிரயாஜ, அனுயாஜ, என்னும் இவை யிரண்டையும் உடம்பில் அணிகிறான். அதனால் யக்ஞத்திற்கும் யஜமானுக்கும் அவையிரண்டும் கவசமாகின்றன. இவையெல்லாம் உண்மையில் அவ்வாறு ஆகிறதில்லை. அது அர்த்தவாத மாகச் சொன்னது.

வேதாந்தி — யக்ஞத்திற்குப் பயன்படாத ஆத்ம ஞானத்தைப் பற்றி ஏன் சந்தேகிக்க வேண்டும்? செய்பவன் வாயிலாக அவனது விக்ஞானம் கர்மத்திற்கு அங்கம் ஏன் ஆகக் கூடாதென்பாயாகில், அது பொருந்தாது. கர்ம வாக்கியத்திற்கும் ஞானத்திற்கும் சம்பந்தமில்லை. உடலுக்கு வேறாக ஆத்மா இருக்கிறது. கருமம் தேகத்தோடு சென்று தேகம் அழிந்ததும் கர்மமும் அழிந்து போகின்றன. அதற்கும் ஆத்ம ஞானத்திற்கும் என்ன உறவு என்பாயாகில்? கர்ம காண்டி, உடல் விழுந்ததும் கருமம் அழிகிறதில்லை, பின்னை, அபூர்வத்தை யுண்டுபண்ணி அழிகின்றது. அபூர்வம் அவ்வினையின் பயனை அளிக்கின்றதென்பது எங்கள் மதம்.

வேதாந்தி — வைதிக ஞானம் கர்மத்திற்கு அங்கமானாலும் வேதாந்த ஞானம் கர்மத்திற்கு அங்கம் எங்ஙனம் பொருந்தும். பூ. பரமாத்ம விஷயக ஞானம் கர்மத்திற்கு அங்கம் ஆகாது போனாலும் சம்சார ஆத்ம ஞானம் அங்கம் ஆவதற்கு ஐயமில்லை சூ. 2,

அ—கை.

ஞானம் கர்மத்திற்கு அங்கம் என்பதை அடுத்த சூத்திர வாயிலாகவும் உணர்த்துகின்ருர் :-

1 3

## ஸூ. ஆசார தர்ஸநாத் 3—4—3

1

ப.உ. ஆசார தர்ஸநாத் = ஜனகன் முதலிய அரசர்களும் ஞானத்தைப் பெற்று வினைகளைச் செய்து வந்திருக்கிருர்கள் என்று ஆரணம் அருளுகின்றது. அது வருமாறு :-

1 3

வி.உ. 'ஜனகோஹ, வைதேஹோ' ... விதேகநாட்டு வேந்தன்ஜனகனென்னும் கோமான் நிரம்பிய தக்ஷிணைகளைக் கொண்டு யாகஞ் செய்யத் தொடங்கினுன். ''யக்ஷ்ய

4 3

மாணோவை பகவந்தோ அஹமஸ்மி'' ஹே பூஜனீய ரிஷி சமுதாயமே! நானும் யக்ஞம் செய்பவன்தான் என்கின்றது பிருகுதாரண்ய சுருதி. (5—11—5)

இவ்வாக்கிய மூலமாக பிரஹ்ம ஞானிகளுக்கும் கருமத்தில் அதிகாரங்காணப்படுகிறது. இம்மாதிரி உத்தாலக முதலியோர்கள் தனது புதல்வர்களுக்கு உபதேசஞ் செய்யும் பொழுது இல்லற தருமங்களை யிணைத்து மொழி வதாலும் தெரிய வருகிறது. வெறும் தத்வ ஞானத்தால் முக்தி உண்டாகுமாஞல் மிக வருந்தத்தக்க வினைகளை மிக முயன்று அறிவாளிகள் ஏன் செய்ய வேண்டும். இல்லத்தில் இனிய தேனிருக்க மலையை நாடி ஏன் ஓடுவானேன் என்னும் முதுமொழிக்கிணங்க என்கின்றது. சூ. 3—4—3

அ—கை

கூறிய பொருளை நிலைநிறுத்தும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு :-

## சூ· தத்ஶ்ருதே : 3—4—4

3 3

ப.உ. ''யதேவ வித்யயா கரோதி'' ஞானத்தைப் பெற்று கருமத்தைச் செய்வாயாக என்னும் மறைமொழியால் ஞானம் கருமத்திற்கு அங்கமென்று தெரிகிறது.

3 3

வி.உ. ''யதேவ வித்யயா... எந்த கருமத்தை அறிவோடும், நம்பிக்கையோடும்; உபநிடதத்தில் உரைக்கப் பெற்ற யோகங்களினாலும் செய்கிறானோ அவனுக்கு அக்கருமம் நல்ல

3

பலன்களை யளிக்கின்றது. ததேவ வீரிய வத்தரம் பவதி யென்பது எஞ்சிய சுருதி. அறியாதவன் செய்த வினைகளைப் பார்க்கிலும் அறிந்தவன் செய்த வினை அதிக லாபத்தைத் தருகிறதென்பது குறிப்பு. சா.உ. (1—1—10)

இவ்வாக்கியங்களாலும் ஞானம் கருமத்திற்கு அங்கமென்பது தெற்றெனத் தெளிவாம். இஃதல்லாமலும் கருமமில்லாத ஞானம் கதிக்குக் காரணமில்லை யென்பது கருத்து. கதி—முக்தி.

அ—கை

மீண்டும் வலியுறுத்திக் கூறுகின்றது. சூத்திரம் அது வருமாறு :-

4

## சூ· சமந்வாரம்பணாத் 3—4—5

3

ப.உ. ''தம் வித்யா கர்மணீ... என்னும் மந்திரத்தால் ஞானமும் கருமமும் சேர்ந்து காணப்படுகின்றன.

'சமந்வாரம்பணுத்' சமுச்சயம் சாற்றப்பட்டிருக்கிற படியால் ஞானம் கருமத்திற்கு அங்க மென்பது காணக்கிடக்கிறது.

வி.உ. முக்தி யென்னும் பயனைத் தரும் விஷயத்தில் வித்யா கர்மணீ... வித்தை—ஞானம், கரும—கருமம். இவை யிரண்டும் காரணம் என்பது கருத்து. ''வித்யா கர்மணீ... பிரு.உ. 4—4—2

இறந்த பிறகு இவ்வுடலை விட்டேகும் போது இவனுடன் இரண்டு தத்வம் செல்கின்றன. ஒன்று ஞானம், மற்றொன்று இவன் செய்த வினை. எதற்காக? இவனுக்குப் பயனை யூட்டுவதற்காக. சூ. 3—4—5

அ—கை :

பூர்வபக்ஷி தனது சித்தாந்தத்தை மேலும் உறுதி செய்கிறான் சூத்திரம் வருமாறு :-

3 4
## சூ. தத்வதோ விதாநாத் 3—4—6

4
தத், வத : விதாநாத் என்று பிரிக்கவும்.

1 3 4
ப.உ. தத்வத := ''ஆசாரிய குலாத் வேத மதீத்ய'' என்னும் சுருதி வாக்கியத்தால் எல்லா வேதங்களையும் நன்கு உணர்ந்தவர்க்கும். விதாநாத் = கருமம் விதிக்கப் பெற்றிருக்கிறது. இதனாலும் ஞானம் கருமத்திற்கு அங்கம்.

1 3 4 2
வி.உ. ஆசாரிய குலாத் வேதம் அதீத்ய யதா
4 3 4
விதாநம் குரோ: கர்ம அதி ஸேஷேண அபிசமாவிருத்ய
3 4 4
குடும்பே சுசௌ தேசே ஸ்வாத்யாயம் அதீயாந : ''என்கின்

றது சுருதி. சா.உ. (8—15—1) [1]ஆசாரிய குலாத் = குரு முந்நிலேயில், [3]வேதம் அதீத்ய = (முறைப்படி) வேதத்தைக் கற்று. [2]யதா [4]விதாநம் = எவ்வித முறையோ அவ்விதம். [3]குரோ : = குருவிற்கு. கர்மாதி சேஷேண = எல்லாப் பணி களேயும். அபி சமாவிருத்ய = நன்கு முடித்துவிட்டு. குடும்பே = குடும்பத்தில். சுசௌ தேசே = நல்ல இடங்களி லிருந்து. ஸ்வாத்யாயம் [4]அதீயாந : = வேதங்களேக் கற்றும் கற்பித்தும், வாழ வேண்டுமென்று விளம்பியிருக்கிறது. இதனுல் எல்லா வேதங்களேயும் எளிதில் இனிது உணர்ந்த வர்க்கும் கருமத்தில் அதிகாரம் வழங்கியிருக்கிறது. இதனுலும் ஆத்மஞானம் தன்னந்தனியாக முக்திக்கு வித் தன்று. வித்து—காரணம். சி. இங்கு '[4]அதீத்ய' என்னும் சொல் அத்யயனத்தை மட்டும் உணர்த்துகின்றதே ஒழிய ஞானத்தை யுணர்த்தவில்லே யென்பாயாகில், அதனுல் குற்ற மொன்றுமில்லே. எங்ஙனம் எனின், வேத அத்யயனம் அர்த்தக் ஞான பர்யந்தம் என்பது ஜைமிநிமதம். வேதத்தைக் கற்பது கருமத்தைச் செய்வதற்கு என்பது கருத்து. ஆகையால் தத்வ ஞானம் கருமத்திற்கு அங்க மென்பது உறுதி. சூ. 6

அ — கை.

மேலும் கூறுவதற்குச் சூத்திரம் :-

## சூ. நியமாச்ச 3—4—7

ப.உ. குருவந் நேவேஹ'' என்னும் மறைமொழி யால் வாழ்நாள் முழுதும் கருமத்தை முறையாகவும் நியமாத் = நியமமாகவும் செய்ய வேண்டும் என்பது விதி. இதனுலும் ஞானம் கருமத்திற்கு அங்க மென்பது தெளிவு.

வி.உ. உபநிஷத்துக்களில் ஈசாவஸ்ய மென்னும் உபநிஷத்து சாலச் சிறந்தது. அங்கு இஃது இரண்டாவது மந்திரமாக வருகின்றது :- குருவந்நேவேஹ கர்மாணி
2
ஜிஜீவிஷேத் சதம் சமா : ஏவம் த்வயி நாந்யதே தோஸ்தி நகர்ம லிப்யதே நரே" ஈ.வா. 2—11—2 இஹ = இவ்வுலகில், இவ்வுடம்பு இருக்கும் பொழுது, (இறந்த பிறகு அல்ல) கருமாணி = கருமத்தை குருவன் ஏவ = வினைகளைச் செய்து கொண்டே. ஜிஜீவிஷேத் = வாழ விரும்பு, சதம் சமா : = நூருண்டு. ஏவம் நரே த்வயி = இங்ஙனம் வாழும் மனிதனுகிய உன்னை ந கர்மலிப்யதே = வினைகள் பற்ற
2
மாட்டா. அந்யதா = இதைத் தவிர ந இதோ அஸ்தி = வேறு வழியில்லை என்கின்றது ஆரணம். மேலும்—''ஏதத்
3 3
வை ஜராமர்த்யம் சத்ரம் யதக்நி ஹோத்ரம் ஜரயாவாஹ் யேவ அஸ்மான் முச்யதே மிருத்யுநா வா''

ப. உ. ஏதத்வை = இந்த அக்நிஹோத்ர கருமம் மூப்புப் பிணிச்சாக்காடு வரை. சத்ரம் — யாகம். இந்த யாக கருமங்களால் மனிதன் கிழப்பருவத்திலிருந்தும், மரணத்திலிருந்தும் விடுதலைப் பெறுகின்றுன் என்பது சுருதிப் பொருள். இந்நியமத்தினுலும் ஞானம் கருமத்திற்கு அங்கமென்பது அறியலாயிற்று. சூ. 7

அ—கை.

இதுவரை பூர்வபக்ஷியின் அதாவது ஜைமிநிசித்தாந்தத்தை யெடுத்துரைத்து இனி யதை வேதாந்த ரீதியாகக் கண்டனஞ் செய்வதற்கு சூத்திரம் :-

4 3 3 3
## சூ. அதிகோப தேசாத்து பாதராயணஸ்ய ஏவம்தத் தர்ஸநாத் 3—4—8

அதிக உப தேஸாத், து, பாதராயணஸ்ய, ஏவம். தத்தர்ஸநாத் என்று பிரிக்கவும்.

ப. உ. து = இந்த, து என்னும் சொல் எதிரியின் பிடிவாதத்தை யிடித்து நொறுக்குவதற்காக. அதிக உப தேசாத் = உபநிடதங்களில் மிகுதியாக பிரஹ்ம உபதேசம் காணக்கிடக்கின்றன. ஏவம்=இம்மாதிரி பாதராயணஸ்ய= பகவான் வியாசர்மதம். தத்தர்சநாத் = சுருதிகளில் காணப் படுகிறது.

வி.உ. ஜைமிநிமதாநுயாயிகள் வரைவதாவது — தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கம் என்கின்றனர். வரைவது — சொல்லுதல். இது பொருளற்றது. ஏனெனின்? தத்வ நூல்களில் சம்சாரி ஜீவனுக்கு வேறாக பிரஹ்மத்தை மிகுதியாக மொழியப் பட்டிருக்கின்றன. ஆன்மா சேதனமென்றும், அகர்தாவென்றும், இன்பதுன்பத்தை நுகராதவதன் என்றும் சொல்லியிருக்கிறது. இதனுல் தத்வ ஞானத்தின் பயன் முக்தியை மொழியும் சுருதி அர்த்த வாதமல்ல. அர்த்த வாதம்-புகழ்தல். இதுதான் வியாசருக்கு உடன்பாடு. எங்ஙனந் தெரிகிறதெனின்? தர்சநாத்,

''ய: சர்வக்ஞ: சர்வவித்; எவன், எந்த ஆன்மா சாமாந்ய மாகவும், விசேஷமாகவும் எல்லாவற்றையும். அறிந்திருக்கிறதோ அந்த ஆன்மா பிரஹ்மம் என்பது சுருதிப் பொருள். இச்சுருதி ஜீவனிலிருந்து ஆன்மாவை அகற்று கிறது. சேஷத்வாத் புருஷார்த்தவாதம் என்று கருமிகள் கரைந்தார்களே அந்த வாக்கியத்தை வேதாந்த வாக்கியம் விரட்டுகிறது.

வேதாந்தத்தில் ஜீவனை மட்டும் செப்பியிருந்தால் அவன் ஞானம் கருமத்திற்கு அங்கம் என்று அறையலாம். தத்வ நூல்களில் ஆன்மாவை அசங்கமென்றும், அசம்சாரி யென்றும், அபஹதப் பாப்மாவென்றும் அருளியிருக்கிறது. அந்த அசங்க ஞானம் கருமத்திற்கு அங்கம் எங்ஙனம் பொருந்தும், ஜீவாத்ம தருமத்திலிருந்து பரமாத்மாவை

வேறு பிரித்து அதை அபஹத பாப்மாவென்றும், பசிதாகம் இன்றியதென்றும், சோக மோகம் அற்றதென்றும், இன்னும் பற்பல விசேஷணம் உடையதென்றும் விளம்பியிருக்கிறது. இவ் விசேஷணங்கள் கூடிய ஆன்மாவை யறிய வேண்டு மென்று வேதாந்தத்தில் விதிக்கப் பட்டிருக்கிறது.

ஆகையால் அதனது ஞானம் கருமத்திற்கு அங்க மென்பது பொருளற்றப் பேச்சாகும். ஆத்ம ஞானம் கருமத் திற்கு அங்கமல்ல, ஆனால் அதைக் கெடுக்கும் தன்மை யுடையது. அதை கருமத்தை. ''உபமர்ந்தஞ்ச'' மதயானை வளப்பமுள்ள கரும்புத் தோட்டத்துக்குள் நுழைந்துஎப்படி அவ்வனத்தை யழிக்கின்றதோ அது போல் ஞானமென்கின்ற மதயானை கருமம் என்கின்ற கரும்பு வனத்தை நாசம் செய்கின்றது. இக்கருத்தை 'உபமர்ந்தஞ்ச' என்னுஞ் சூத்திரம் உணர்த்துகின்றது.

''இதனால் புருஷார்த்தோ அத.'' என்னும் சூத்திரத்தில் உரைத்த தத்வ ஞானம் மட்டும் முக்திக்கு வித்து என்பதில் முட்டு ஒன்றும் இல்லை. முட்டு —தடை. ஜைமினியின் ஹேதுக்கள் வியாசர் மதத்தை அசைக்க இயலமாட்டா.

எல்லாவற்றையும் அசைக்கும் தன்மையுடைய ஆன்மாவை யார் அசைப்பது. எதன் அச்சத்தால் காற்று அசைகிறதோ, சூரியன் உதயமாகிறானே, எதனது அச்சத் தால் அக்னி எரிகிறதோ எதனது ஆணையால் ஆதவனும் அம்புலியும் நிலைத்திருக்கின்றனவோ என்றெல்லாம் மறை கள் ஓதுகின்றன. அவ்வகைப் பட்ட ஆன்மாவை அசைப் பவர் யாவர், ஒருவருமிலர்.

இஃதன்றியும் எல்லோருக்கும் ஆன்மாபிரியமானது, ஆன்ம தர்சனம் பண்ணவேண்டும். உனக்கு ஆத்மாவைப் பற்றிக் கூறுகின்றேன், என்றெல்லாம் சுருதி சொல்லுகின்றது.

இதனுலும் தத்வ் ஞானம் கருமத்திற்கு அங்கமில்லை யென்பது இனிது புலனும் சூ. 8

அ—கை.

1
பூர்வபக்ஷி, ஆசார தர்சனுத்து என்னுஞ் சூத்திரத் தால் தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கமென்று அருளினுனே அதற்குப் பதில் சூத்திரம் :-

3
## ஆ துல்யந்து தர்ஸனம் 3—4—9

துல்யம், து, தர்சனம் என்று பிரிக்கவும்.

ப. உ. தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கம் அல்ல. ஏனெனின், இங்கும் ''ஏதத்ஹஸ்மவை, ஆன்ம ஞானம் முக்திக்குக் காரணம் என்னும் தர்சனம் சமானம். தர்சனம்— ஆசாரதர்சனம். து = து, வென்னும் சொல் கருமத்தை நோக்க ஞானம் பலமுடையதென்பதை யுணர்த்துகின்றது.

வி.உ. ஆசாரதர்சனுத்து என்றுக்கூறி ஞானம் கருமத் திற்கு அங்கம் என்று கரும காண்டிகள் கழறினுர்கள். அது முறையன்று. ஏனெனின்? ஆசாரதர்சனம்-அருமை வேதாந் தத்திலும் காணப்படுகிறது. எங்ஙனமெனின்? ''ஏதத்ஹஸ்ம வை தத் வித்வாம்ச : ஆஹுர் ரிஷய; காவஷேயா: கிமர்த்தா 4
வயம் அத்யேஷ்யாமஹே கிமர்த்தாவயம் யக்ஷயாமஹே ஏதத் 3
ஹஸ்மவை தத் பூர்வே வித்வாம்சோ அக்நி ஹோத்ரம் 1
நஜுஹ்ற வாம் சக்ரிரே'' என்கின்றது சுருதி.

ஏதத்ஹஸ்ம = இதையறிந்து காவஷேயா : = கவஷ என்னும் ரிஷிப் புதல்வர்கள் கிமர்த்தம் = எதன் நிமித்தம் அத்யேஷ்யாமஹே = கருமகாண்டத்தைக் கற்க வேண்டும்

கிமர்த்தம் = என்னிமித்தம் யக்ஷயாமஹே = (நாம்) யாகஞ் செய்ய வேண்டும். ஏதத் ஹஸ்ம = இதை நன்கு தெரிந்த வர்கள் தத் = ஆகையால் பூர்வே = முன்னமே இதன் நிலையை உணர்ந்து யக்ஞ யாகங்களைச் செய்யாமல் விட்டு விட்டார்கள். இந்த ஆன்மாவாகிய நான் பிரஹ்ம சொரூபமாக இருக்கிறேன் என்று அறிந்து பிராஹ்மணர்கள் (ஞானிகள்) மூன்று வித, பிள்ளை ஆசை, பொருளாசை, உலக் ஆசை முதலிய ஆசைகளை யறவே விட்டு ஏழு இல்லத்தில் இரந்துண்டு காலங் கழிக்க வேண்டுமென்று ஆம்நாயம் அருளுகின்றது.

மேலும் யாக்ஞவல்க்கியர் முதலியோர் கருமங்களை யுதறி யெறிந்து விட்டு ஞான நிஷ்ட்டராய் திகழ்ந்ததாகச் சாற்றி யிருக்கிறது :- ஏதாவதரே[2] கலு அமிர்தத்வம் என்று இயம்பி வவ்ராஜ = சென்று விட்டார். பி.உ. (4—5—15) என்கின்றது. ஜனகன் யாகத்தைச் செய்து கொண்டு வாழ்கிறேன் என்றது வைசுவானர வித்தையைக் குறித்து. எனவே ஞானம் கருமத்திற்கு அங்கம் அன்றென்பது உறுதி. சூ. 9

அ—கை.

பூர்வபக்ஷி (3—4—4) சூத்திரத்தில் தத்சுருதே : என்னும் இடத்தில்[3] "யதேவ வித்யயா கரோதி ... என்னும் மந்திரத் தின் மூலமாக ஞானம் கருமத்திற்கு அங்கமென்று கூறினுனே அதற்குப் பதில் சூத்திரம்.

## சூ. அசார்வத்ரிகி 3—4—10

ப.உ.[3] யதேவ வித்யயா கரோதி என்னும் சுருதி எல்லா வித்தையின் விஷயமன்று. பின்னே, உத்கீத வித்தை

யின் விஷயம். இந்தச் சுருதி யெந்த இடத்தில் மொழியப் பட்டிருக்கிறதோ அங்கு உத்கீத வித்தையைப் பற்றிப் பேசப் படுகிறது. உத்கீதை வித்தை ஓங்காரத்தைப் பற்றிப் பேசும் வித்தை. எனவே அதற்கு எல்லா இடங்களிலும், சகல வித்தைகளோடும் சம்பந்தமில்லை. ஆகையால் தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கம் அன்று. சூ.10

அ—கை

வித்யாகர்மணீ... என்னும் சூத்திர வாயிலாக ஞானம் கருமத்திற்கு அங்கம் என்று அருளியதற்குப் பதில் சூத்திரம்:-

## சூ. விபாக: சதவத் 3—4—11
(4 3)

விபாக:, சதவத் என்று பிரிக்கவும்.

ப,உ. விபாக: = தம் வித்யா கர்மணீ யென்னும் சுருதியில் சொல்லிய வித்தை வேறு மனிதர்களுக்கும், கருமம் வேறு மனிதர்களுக்கும் என்று அறியவும். இம்மாதிரி விபாகம் = வேறுபடுத்திக் கூறியிருக்கிறது. (எதுபோல வெனின்?) சதவத் = இவர் இருவருக்கும் நூறு ரூபாயைக் கொடுக்க வேண்டுமென்றால் ஐம்பது ஐம்பது பிரித்து அளிப்பது போலவென்று அறிக.

வி.உ. வித்யாகர்மணீ—வித்தையும் கருமமும் பரலோகத்திற்குச் செல்லும் மனிதனோடு செல்கின்றன. கருமத்தோடு வித்தை செல்கின்றது என்றதனால் வித்தைக்கு ஸ்வதந்திரம் இல்லையென்று தெரிகிறது என்ற எதிரியின் வழக்கிற்குப் பதில் வித்தை வேறு மனிதனைத் தொடர்ந்து செல்கின்றதென்றும், கருமம் வேறுமனிதனைத் தொடர்ந்து செல்கின்றதென்றும் சொல்லப்படுகிறது. இவண் இரண்டை யும் ஒன்று சேர்க்காமல் இரண்டாகப் பிரித்துக் கொள்ள வேண்டும்.

இங்கு ஜீவனோடு இரண்டும் சேர்ந்து செல்கின்றன என்றது முமுட்சுக்களைக் குறித்து அல்ல. முமுட்சு அகாமய மாந : = ஆசையற்றவன். சம்சாரி காமயமாந : = ஆசை யுற்றவன். அவனைக் குறித்து உரைக்கப் பெற்றது. வித்தை அதிகாரிக்குப் பின்சென்று அமிர்தத்தையும், கருமம் சம்சாரி யின் பின் சென்று உலகத்தையுமளிக்கின்றன என்று அறியவும். இதனாலும் ஞானம் அங்கமன்று. சூ. 11

அ—கை.

தத்வதோ விதானாத் என்னும் சூத்திரத்திற்கு கண்டனம்.

## சூ. அத்யயந மாத்ரவத : 3—4—12

ப.உ. அத்யயந மாத்ரவத. : வேதத்தைப் படிப்ப வர்க்கு மட்டும் "ஆசாரிய குலாத் வேதம் அதீத்ய என்னும் இவ்வாக்கியத்தில் கரும காண்டத்தை மட்டும் ஓதுபவனுக்கு விதித்திருக்கிறது. உபநிஷத்து தத்வ ஞானத்தை யோது பவனுக்கல்ல.

வி.உ. தத்வதோ விதானாத்து என்னும் சூத்திர வாயிலாக எதிரி இயம்பினனே யதற்குப் பதில். ஆசாரிய குலாத்—ஆசான் முந்நிலையில் வேதத்தைக் கற்று என்பது மறையின் பொருள். இவ்வாக்கியம் வேதம் படிக்க வேண்டும் என்பதை யுணர்த்துகின்றது. இந்த வேதம் ஓதுவது கருமத்திற்கு லிங்கம். வேத ஞானம் கருமத்திற்கு அங்கம் என்பதை வேதாந்த ஞானம் மறுக்கவில்லை. பின்னை, தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கமென்பதை மறுக்கிறது. பார்ப் பதற்குக் காது சாதனமில்லை யென்றல் கண்ணும் சாதன மில்லையென்று அர்த்தமல்ல. எது எதற்குச் சாதனமோ அது

அதற்குச் சாதனம் என்பதுதான் விவேகம். எங்ஙனம் ஒரு யாகத்திற்குரிய ஞானம் மற்றொரு யாகத்திற்கு உதவாதோ அது போல் தத்வ ஞானம் கருமத்திற்கு அங்கமாகாது என்பது குறிப்பு. சூ 12

அ—கை.

நியமாச்ச என்னுஞ் சூத்திரமூலமாக ஆயுள் உள்ளளவும் கருமம் செய்யவேண்டுமென்று சொன்னதற்குப் பதில் சூத்திரம்:—

## ஸூ· நாவிசேஷாத் 3—4—13

ந, அவிசேஷாத், என்று பிரிக்கவும்.

ப.உ குர்வன் னேவேஹ கர்மாணீ யென்னும் சுருதியில் விதித்த நியமம் தத்வ ஞானிக்கன்று. ஏனெனின் அவிசேஷாத். தத்வ ஞானியை விசேஷப்படுத்தி விளம்பவில்லை.

வி. உ. நூறு ஆண்டு கருமங்களைச் செய்துகொண்டே வாழவேண்டுமென்று வித்வானை விசேஷப்படுத்திச் சொன்னதாகக்காணோம். பொதுவாகச் சொன்னதேயொழிய ஞானிக்கும் இதில் அதிகாரம் உண்டென்று உரைக்கக் காணோம். சூ. 13.

முடிவு என்னை? வாழ்நாள் முழுவதும் கருமங்களைச் செய்து வாழ வேண்டுமென்று சொன்னது வித்தையின் பெருமையை விளக்கும் பொருட்டு. எனவே ஸ்துதயே யென்கின்றது. கருமம் ஞானிகளுக்குப்பந்தத்தைக் கொடுக்காதென்பது கருத்து. சூ. 14,

அ—கை.

தனது எண்ணப்படி அக்னிஹோத்ர கருமத்திற்குக் கருவியாக இருக்கும் பொன், பிள்ளைகள் முதலிய சாதனங்

களைத்தியாகஞ் செய்து வந்தாலும் வித்தை தானகப் பயனைத் தரவல்லது. ஆகையால் ஞானம் கருமத்திற்கு அங்கம் அன்றென்பது உறுதி யென்பதற்கு சூத்திரம்:-

## சூ. காமகாரேணச் சைகே 3—4—15

காமகாரேண,[1] ச,[1] ஏகே என்று பிரிக்கவும்.

ப.உ. ச = மேலும். ஏகே = சில ஞானிகள். காம காரேண = தனது இச்சையினுல் கருமத்திற்கு அங்கமான சாதனங்களைப் பரித்தியாகஞ் செய்திருக்கிருர்கள்.

வித்தையின் பயனை விரும்பும் சில வித்வான்கள் ஞானத்தைப் பற்றிக் கொண்டு வேறு பயனைத்தரும் பிரஜை, பொன், பொருள் நிலம், புலம் இவைகளைப் பற்றி விசாரணை செய்கின்ருர்கள். மேலே மொழிந்த பிரஜை முதலிய பொருள்களால் ஒரு பயனும் இல்லையென்று உணரு கின்றனர். ஏனெனின்? ''ஏதத்ஹஸ்ம வை தத்பூர்வே வித் வாம்ச : பிரஜாம் ந காமயந்தே கிம் பிரஜயா கரிஷ்யாமோ யேஷாம் நோ அயமாத்மா அயம்லோக: பி.ரு.(4—4—22) இ—ள் ஏதத்ஹஸ்ம = நமக்கு முன்னுள்ளோர்கள். வித் வாம்ச:- அறிவாளிகள். பிரஜாம் ந காமயந்தே = சந்தானம் கருமம், இவைகளை விரும்பினதில்லை. கிம் பிரஜயா கரிஷ் யாம : = பிள்ளைகளால் நமக்கு என்னபயன். யேஷாம்நோ = தியாகிகளாகிய நம்மனேருக்கு. அயமாத்மா = இந்த ஆன்மா. அயம்லோக: இவ்வாத்மாவே நமக்கு விரும்ப தக்கது என்று சிந்தித்தனர்.

ஞானத்திற்குப் பலன் உடனே கிடைக்கின்றது. கருமபலத்தைப்போல மற்றொரு காலத்தில் கிடைப்பதல்ல, என்று நாங்கள் பன்முறை பகர்ந்திருக்கிருேம். நாங்கள்

— வேதாந்திகள். இதனுலும் வித்தை கரும சேஷம் அன்று. சேஷம்—அங்கம். வித்தையின் பலம் பொய்யன்று சூ. 15

மேலும் கூறிய பொருளே சீரிய முறையில் நிலை நிறுத்தும் பொருட்டு அடுத்த சூத்திரம் :-

3

## ஸூ. உபமர்தஞ்ச 3—4—16

1

ப.உ. ச = மேலும். ''யத்ரவா அஸ்ய'' இந்தமாதிரி சுருதிகளால் தத்வ ஞானம், கருமங்களுக்குக் காரணமான அக்ஞானம், கிரியை, காரக, ஹேது, பலம் இவைகளே
3
உபமர்தஞ் செய்கின்றது. உபமர்தம் = நொறுக்குதல்.

வி. உ. கருமத்தைச் செய்ய் வேண்டுமானுல் முதன் முதல் அஞ்ஞானம் வேண்டும். அதன் பிறகு கருமம் செய்ய வேண்டுமென்று எண்ணம் உதிக்கின்றது. அதன் பிறகு அவன் கருமத்தைச் செய்கின்ருன். அவ்வாறு வினை யின் விளைவால் விளைந்ததுதான் இவ்வுலகம். இவ்வுலகத் தை அவித்யாகிருத பிரபஞ்சம் என்று ஆசாரிய சுவாமிகள் அருளியிருக்கிருர்கள். இதைத்தத்வ ஞானம் நொறுக்கி யெறிகிறது. சுருதியென்ன சொல்லுகின்றது — எந்த நிலை யில் எல்லாம் ஆத்மாவாக ஆகிவிட்டனவோ அந்த ஞானிக் குக்கருமம், கர்த்தா, கரணம் இவையெல்லாம் எங்ஙனம் பொருந்தும்? பொருந்தாது தானே. ஆத்மாவிற்கு வேருக ஒரு பொருளிருக்குமானுல் அதை யவன் பார்ப்பான், கேட் பான், முகருவான். அங்ஙனம் இல்லாததால் அவ்வாறு பார்க்க, கேட்க முகர முடியாததல்லவா! ஆகையால் தத்வ ஞானம் கருமத்தையும் கரும அங்கங்களேயும் விரட்டு கின்றது. எனவே வித்தை ஸ்வதந்திரமென்பது குறிப்பு. சூ. 16,

அ — கை.

இதற்கு இன்னொரு காரணங் கூறும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

4 1 3
சூ. ஊர்த்வரேதஸ்ஸு ச சப்தேஹி 3—4—17

ஊர்தவ ரேதஸ்ஸு, ச, சப்தே, ஹி என்று பிரிக்கவும்.

4
ப,உ. ச=மேலும். ஊர்த்வரேதஸ்ஸு=சந்நியாசம் என்னும் நான்காம் ஆஸ்ரமத்தில். பிரஹ்மவித்தை பேசப்படுகிறது. இதனாலும் வித்தை கருமத்திற்கு அங்கம் அன்று. ஹி=ஏனெனின் சப்தே=ஆரணத்தில் அவ்வாறு அருளியிருக்கிறது.

4
வி. உ. ஊர்த்வரேத : என்பது துறவறத்திற்கு ஒரு பெயர். தத்வ ஞானம் அவர்களுக்கு என்று அருளி யிருக்கிறது. அவர்கள் — சந்நியாசிகள். எங்கு அருளி யிருக்கிறதெனின்? வேதத்தில் தெரியக்காணேமே என்பா

4 4
யாகில் அஃது வருமாறு :- ''த்ரயோதர்மஸ்கந்தா : '' தருமத்திற்கு மூன்று தூண்கள் என்று மொழிந்து இறுதி யில் ''பிரஹ்மஸம்ஸ்த்தோ அமிர்தத்வம் ஏதி'யென்று நான்காம் ஆஸ்ரமத்தை அருளியிருக்கிறது. இதனாலும் ஞானம் கருமத்திற்கு அங்கமென்பது அந்யாயமாகும்.

துறவறத்தில் கருமத்திற்கு இன்மைக் காணப்படு கிறது. வைதிக கருமங்களனைத்தும் துறவறமென்னும் தூயஆஸ்ரமத்தில் இல்லை. சந்நியாசமென்னுஞ் சொல் ஒரு கருமமும் அவர்களுக்கு இல்லையென்பதைத் தான் உணர்த்துகின்றது. சந்நியாசி சகல கருமத்தையும் சந்நியாசம் செய்து கொள்கிருன் என்கின்றது சுருதி.

பிரஹ்மச்சரிய ஆஸ்ரமத்தில் இருந்தே சந்யாசம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்றும் மறைகள் உணர்த்துகின்றன.

பிரஹ்மச்சரியத்திலிருந்து ரிஷிகடனையும், யாகத்தினுல் தேவகடனையும், சந்தானத்தால் பித்ருகடனையும் முடிக்க வேண்டுமென்றும், நான்காவது அநிருண: அதாவது சந்நியாசிக்கு கடன் இல்லையென்றும் வேதம் விளம்புகின்றது. இதனுலும் வித்தை ஸ்வதந்திரம் என்று துணியப்படுகிறது. சூ. 17,

## (2) பராமர்சாதிகரணம்.[4] சூ. (18—20

அ—கை.

முந்திய அதிகரணத்தில் த்ரயோ 'தர்மஸ்கந்தா[4] :, என்னும் சுருதி சந்நியாச மென்னும் துறவறத்தில் ஞானம் விதிக்கப்பட்டதால் ஞானிகளுக்குக் கருமம் விதிக்கப் படவில்லையென்று சொன்னதை மீண்டும் பூர்வபக்ஷி ஆட்சேபத்தைக் கிளப்பி அதை உறுதி செய்யும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

**சூ. பராமர்ஸம் ஜைமிநி[1] :[3] அசோதனு[1]ச அபவததிஹி[3]**
**3—4—18**

பராமர்ஸம், ஜைமிநி: அசோதநா, ச, அபவததி[3], ஹி, என்று பிரிக்கவும்.

ப.உ. பராமர்ஸம் = (பிரஹ்ம சம்ஸ்த்தோ அமிர்தத்வ மேதி என்னும் சாஸ்த்திரம் பராமர்ச மெனப்படும். இது அந்த விசுவாசம் என்று ஜைமிநி கூறுகின்ருர். ஹி =

ஏனெனின், அசோதநா = விதிவாக்கியமன்று. ச=மேலும். அபவததி = 'வீரஹா' என்னும் சுருதி துறவறத்தை விலக்குகின்றது.

வி. உ. மூன்று தருமஸ்கந்தங்கள் என்னும் மந்திர இறுதியில் பிரஹ்ம சம்ஸ்த்தம் என்னும் வாக்கியம் துற வறத்தையுறுதிப் படுத்த இயலாது. எதனாலோ வெனின்? ஜைமிநி ஆசாரியர். இச் சுருதியில் இல்லற முதலிய வேறு அறத்தினரை ஒப்புக் கொள்கின்றனர். அதற்கு அவர்தரும் காரணமாவது — விதி வாக்கியம் காணப்படாத தால் என்பது. இதற்கு முன் மொழிந்த வாக்கியங்கள் மூன்று ஆஸ்ரமத்தை மொழிந்து விட்டு நான்காவது பிரஹ்மசம்ஸ்த்தம் என்னும் சொல் துறவறத்தை துதி பாடுகிறது என்பது அவர்மதம். அப்படியாயினும் துற வறம் சொல்லித்தானே யிருக்கிறதென்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், ஸ்மிருதிகளில் சொல்லியிருப் பினும் சுருதிகளில் சொல்லவில்லை.

கருமத்தைச் செய்யாது போனால் வீரனைக் கொன்ற பாவம் வரும் என்பது முறைதான். ஆனால் அதைத் பார்க் கிலும் அதிகம் பாவம் ஆன்மாவை யறியாததால் வருமென்று வேதாந்தம் விளம்புகின்றது. துறவறத்தைப் பற்றி பிரத்யக்ஷ சுருதி சொல்லாததால் அநாதரணீயம். விரும்பத் தக்க தன்று. அக்னிஹோத்ர கருமத்தை விதித்திருப்பதால் இல்லறத்தை இனிய சுருதிகள் இடித்து உரைக்கின்றன. நன்கு கூறுகின்றன என்பது பொருள்.

மேலும் ஆத்ம லோகத்தையடைய விரும்புகின்ற வர்கள் எல்லா வினைகளையும் எளிதில் விட்டு விட்டு துற வறத்தையடைவதென்பது விதிவாக்கியமில்லை. சூ. 18,

அ—கை.

ஜைமினியின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு :-

33

**சூ. அநுஷட்டேயம் பாதராயண : சாம்யசுருதே : 3—4—19**

அநுஷ்ட்டேயம் பாதராயண : சாம்ய சுருதே என்று பிரிக்கவும்.

ப.உ. வாதராயண : = வாதராயணரின் மதம். அநுஷ்டேயம் = நான்காம் துறவறத்தையும் கையாள வேண்டும். சாம்ய சுருதே : = எல்லா ஆஸ்ரமத்தையும் இயல்பாகக் கையாள வேண்டுமென்று விளம்பி இருப்பதால்.

வி.உ. த்ரயோ தருமஸ் கந்தா : 'இல்லறத்தை ஆதரித்தது போல் 'பிரஹ்ம சம்ஸ்தோ' என்று சொல்லி துறவறத்தையும் ஆதரிக்கச் சொல்லியிருக்கிறது. இஃது பொதுவான சுருதி. உடம்புக்குரிய உறுப்புக்களில் சிரசை உத்தமாங்கம் என்று உரைப்பார்கள். அதுபோல் நான்காவதான தூய துறவறம் தொன்மையான தென்பது சொல்லாமலே துணியலாம். அதையில்லையென்று சொல்பவரை அறைய வேண்டும் கன்னத்தில். துறவறத்தையேற்றுக் கொள்ளாது இல்லறத்தை யேற்றுக் கொள்வது தலையைப் பற்ருது வாலைப் பிடிப்பது போல வாகும். இதைத்தான் புச்சா வலம்பன நியாயமென்று புகல்வர் பெரியோர். புச்சம்—வால்.

வேதம் ஏனைய மூன்று ஆஸ்ரமத்தையும் மொழிந்து விட்டு நான்காவதான துறவத்தை மொழியாததற்கு என்ன முறையிருக்கிறது? அங்ஙனமாயின் பொதுவான மறையை நீ சங்கியாதே யென்று புலவர்கள் எவ்வாறு கூறியிருப்பார்

கள்? இருக்கமாட்டார்கள் என்பது இயல்பு. எனவே சந்நி-யாச ஆஸ்ரமமும் சமானமாக விசாரிக்கப்பட்டிருக்கிறது. சந்நியாசம் நான்கு வகைப்படும். 1. குடீசகம் 2. வெகூதகம் 3. அம்சம் 4. பரம அம்சம்.

1 குடீசகம் — தனது பிள்ளை இல்லத்தில் உணவு ஏற்று உண்டு கரத்தில் தண்டம் தரித்து வாழ்வது குடீசகம்.

2. வெகூதகம்—பை, கமண்டலம், பூனூல் பாதுகை, ஆசனம்,குடும்பி,கௌபீனம், கல்லாடை இவைகளோடு தீர்த்தங்களில் திரிபவன், பிட்சையேற்று உண்பவன், ஆத்மாவை யறிய விருப்பு உடையவன், தண்டம் ஏந்தியிருப்பவன் வெகூதகன்.

3. அம்சன். கல்வியை விட்டு, பூனூலைத் தரித்து, கையில் பையையும், கமண்டலத்தையும் எடுத்து, கிராமத்தில் ஒரு இரவு தங்கி விரதங்களை யநுஷ்ட்டித்து ஒரு தண்டத்தை யேந்தியவனாய் திரிபவன் அம்சன்.

4. பரம அம்சன்—ஒரு தண்டத்தை ஏந்தியவனாயும் சிகையின்றியவனாயும், பூனூல்களைக்களைந்தவனாயும் வினை களிலிருந்து விலகியவனாயும், ஞான நிஷ்டையுடையவனா யும், இருப்பவன் பரம அம்சன் எனப்படுபவன். இவ்வாறு சந்நியாசம் நான்கு விதமெனப்படும்.

ஆத்மலோகத்தை யடைய விரும்புகின்ற சந்நியாசி யெல்லாவற்றையும் எறிந்து விட்டுச் செல்கின்றான் என்று வேதத்தில் விளம்பியிருக்கிறது. எனவே சந்நியாசம் என்னும் சொல் தள்ளத் தக்கது என்னும் சொல்லைத் தள்ள வேண்டும். சூ. 19

அ—கை

கூறிய பொருளை வேறுவிதமாக வலியுறுத்தும் பொருட்டு சூத்திரம் :—

4 4
**ஸூ. விதிர்வா தாரணவத் 3—4—20**

விதிர், வா, தாரணவத் என்று பிரிக்கவும்.

ப. உ. வா = அல்லது. விதி : = அந்ய ஆஸ்ரம விதியை யொப்புக்கொள்ள வேண்டும். தாரணவத் = எவ் வாறு ''அதஸ்தாத் சமிதம்'' என்னும் மந்திரத்தில் சமித்து தாரணத்தில் விதி.

2
வி.உ. அத்வா இது வேறு ஆஸ்மரத்தின் விதியென லாம். மூன்று தருமஸ்கந்தங்கள் புண்ணிய உலகத்தைக் கொடுக்குந் தன்மையன. பிரஹ்ம சம்ஸ்த்தம் அமிர்தத்வ பலத்தைத் தருவது- முன்னே மொழிந்த சுருதியில் நான்கு ஆஸ்ரமத்தைப் பற்றியும் வர்ணித்து இருக்கின்றன. அதை அநுவாதமென்று அருளாமல் விதியென்றே யருள வேண்டும். வேறு மறைகளிலும் நான்கு ஆஸ்ரமங்கள்

1
நன்கு மொழியப்பட்டிருக்கின்றன. ''பிரஹ்மசரியம் பரி
3 4 4
சமாப்ய கிருஹீ பவேத், கிருஹீ பூத்வா வநீபவேத் வநீ பூத்வா பிரவிரஜேத்'' என்கின்றது சுருதி. (ஜா. பா. உ. பு) பிரஹ்மசரிய ஆஸ்ரமத்திலிருந்து இல்லறத்திற்குப் போக வேண்டும், இல்லறத்திலிருந்து வனவாசம் பண்ண வேண்டும், வனவாசத்திலிருந்து துறக்க வேண்டும் என்பது மேலே சொன்ன மறையின் பொருள். இது ஒரு முறை. மற்றொரு முறை—பிரஹ்மச்சரிய ஆஸ்ரமத்திலிருந்தோ

இல்லறத்திலிருந்தோ, வானப் பிரஸ்த்தத்திலிருந்தோ சந்நியாசம் பண்ணிக் கொள்ளலாம். முன்னே மொழிந்தது மந்த மத்யம அதிகாரிகளுக்கும் பின்னே பேசியது உத்தம அதிகாரிகளுக்கு ஆம். எந்த நாளில் ஆசை யொழிந்ததோ அந்த நாளில் துறக்கலாம் என்பது அறிவு நூலின் ஆணே. இம்மாதிரி அந்நிய மறைகளிலும் அருளி இருக்கின்றது.

எங்கு சாமான்ய ரூபமாக விதி விதித்திருக்கிறதோ அங்கு சாமான்யரூபமாகக் கொள்ளவேண்டும். எங்கு க்ருமத்தை விலக்க வேண்டும் என்று விதித்திருக்கிறதோ அங்கு கருமத்தில் அழுத்தமானவனே நோக்கி அவ்வாறு அறையலாயின. கருமத்தில் வெறுப்பு உடையவர்களே நோக்கி சொன்னதல்ல. இவ்வாறு ஆயும் பொழுது கருமத்தின் உதவியின்றியே வெறும் ஞானத்தால் மோக்ஷஞ் சித்திக்கும் என்பது முடிவு. இதனுலும் சந்நியாசமும் அதற்குரிய ஞானமும் ஸ்வதந்திர மென்று சொல்லாமலே துணியலாம். சூ. 2.

4

3 ஸ்துதிமாத்திர அதிகரணம்

முந்திய பிரகரணத்தில் துறவற்த்தை யுறுதிபடுத்தியிருக்கிறது. இப்பொழுது யக்ஞகருமத்திற்கு அங்கமான உத்கீத வித்தையை உபாசிக்கும் தன்மையும், வித்தை கருமத்திற்கு அங்கம் அன்றென்பதையும் உணர்த்தும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

3

**ஸூ. ஸ்துதிமாத்ரமுபாதாநா திதிச்சேந்ந அபூர்வத்வாத் 3—4—21**

ஸ்துதி, மாத்ரம், உபாதாஞத், இதி, சேத், ந, அபூர்வத்வாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஸ்துதிமாத்ரம் = வெறும் புகழ்வதுதான். உபாதானுத் = உத்கீத முதலிய அங்கங்களைச் சேர்த்திருக்கிறது. இதிசேத் ந = அவ்வாறு சொல்வாயாகில். அது பொருந்தாது. ஏனெனின் அஃது அபூர்வ விதியாகும்.

வி.உ. ''ச ஏஷ ரசாணும்'' இந்த உத்கீத மென்னும் ஓங்காரம் எல்லா ரசத்திற்கும் மூலகாரணம். நிலம், நீர், ஓஷதி, புருஷன், வாக், ரிக், சாமம் என்னும் ஏழு ரசங்கள். இதில் வரையப்பட்ட ஏழு ரசங்களினும் எட்டாவது ரசம் உத்கீதம். ரசம்—சிறந்தது, உத்கீதத்திற்கு அவயவ ரூபமாக உள்ளது ஓங்காரம். இதைச் சிறந்த ரசம் என்று செப்பியிருக்கிறது. ஏனெனின் அது இறைவனுக்குக் குறியாக இருக்கிறது. எனவே இறைவனைப் போல இதையும் வழிபட வேண்டும்.

இம்மாதிரி உத்கீதத்தைத் துதிபாடுவதற்காகவா அல்லது உபாசனு விதிக்காகவா என்று ஐயமுண்டாகிறது. 'ஸ்துதி மாத்ரம்' புகழ்ந்து பாடுவதற்காக என்பதுதான் பொருத்தம். எங்ஙன மெனின்? உத்கீத ஆதி கருமத்திற்கு அங்கங்களைக் கொண்டு அறியலாம். 'இயமேவ' இப்பூமி ஜுஹூ, ஆதவன் முந்நிலையில் வைக்கப் பெற்ரு கூர்மம்— ஒருவிதமான அந்நம். புரோடாசம். சுவர்க்க லோகம் ஆஹவனீய அக்னி' இம்மாதிரியான சுருதிகள் தெரிய வருகிறது. ஸ்துதி மந்திரம் என்பது பொருள், இவ்வாறு பூர்வ பக்ஷிப் புகன்ருல் அஃது பொருந்தாது.

இச்சுருதிகளுக்கு அபூர்வ விதியருளப்பட்டிருக்கிறது. எவ்வித பிரமாணத்திற்கும் எது விஷயமாகாதோ அது அபூர்வம் எனப்படும். இந்த உபாசனை, இதனது குணங்கள் இவையெல்லாம் வேறு இடங்களில் விளம்பப்படவில்லை. அநுமான முதலிய பிரமாணத்திற்கு விஷயமும் அன்று. எனவே அபூர்வம் என்று மொழிந்தது. ஆகையால் துதியின்

பொருட்டன்று. உத்கீதத்தை யடையாளமாகக் கொண்டு உபாஸ்ய தேவதையை வழிபடும் பொருட்டு என்று கொள்ளவும். எனவே வித்தை கருமத்திற்கு அங்கமன்று.

சூ. 21

அ—கை

உரைத்ததை யுறுதியாக உணர்த்தும் பொருட்டு சூத்திரம்.

4 3 3 3

## சூ. பாவசப்தாச்ச 3—4—22

ப.உ.ச=இஃதன்றியும் அந்தப் பிரகரணத்தில்

4

பாவ சப்தாத்=இம்மாதிரி வழிபாடுசெய்ய வேண்டும் என்று கூறியிருப்பதால்.

வி.உ. 'உத்கீதம் உபாசீத' உத்கீதத்தை வழிபட வேண்டு மென்று உரைத்திருக்கிறது. 'சாமம் உபாசீத, சாமத்தை வழிபட வேண்டும் என்றும், நான் பிராணன் என்றும் தியானஞ் செய்ய வேண்டு மென்றுஞ் சொல்லி யிருப்பதால் விதியைப் போதிக்கும் சுருதிகள் காணக்கிடக் கின்றன. துதி மாத்திரம் என்று ஒப்புக் கொண்டால் கிரியேத், குரியாத், செய்ய வேண்டும், கடமை, என்னும் பொருள் உண்டாகும். பவேத், ஸ்யாத், இந்த சொற்க ளெல்லாம் விதியை நன்கு விளக்குகின்றன. ''ஆபயிதா ஹவை'' அப்பயனை யஜமானுக்கு அடைவிக்கிருன் என்பது அதன் பொருள். 'ஆபயிதாஹவை, ஆப்தி குணவிசிஷ்ட அதிகாரி யஜமானுக்கு விரும்பியவற்றை அளிக்கிருன் என்று பொருள் கொள்ளவும். உத்கானம் செய்கின்ற இவனுக்கு எல்லா வலிமையும் உண்டாகின்றன. உத்கானம்—சாம வேதத்தை யோதுவது. இவ்வாக்கிய மெல்லாம் வழிபாட்டை வலியுறுத்துகின்றன. சூ. 22

4
பாரிப்லவ அதிகரணம்

அ—கை.

வேறு வேறு இடங்களில் வரலாறு வரையலாயிற்றே அதற்குப் பொருள் என்ன? இதற்கு உறுதி செய்து, வித்தை கருமத்திற்கு அங்கமன்று என நிலை நிறுத்தும் பொருட்டு மற்றொரு பிரகரணத்தைத் தொடக்குகின்றார்.

**௲. பாரிப்லவார்த்தா இதிச்சேந்தவிசேஷிதத்வாத் : 3—4—23**

பாரிப்லவார்த்தா; இதி, சேத், ந' விசேஷித்தவாத் என்று பிரிக்கவும்.

ப. உ. பாரிப்லவார்த்தா: = உபநிஷத்தில் வருகின்ற கதைகள் பாரிப்லவ மென்னும் கருமத்திற்கு அங்கமாகும், இதிசேத் = அவ்வாறு கூறுவாயாகில். ந = அது பொருந்தாது. ஏனெனின், விசேஷிதத்வாத் = ''பாரிப்லவம் ஆசக்ஷீத என்று சுருதியில் அருளியிருப்பதால்.

வி. உ. உபநிடதங்களில் மந்த மத்யம அதிகாரிகளுக்காக இடையிடையே சில முனிவர்களது வரலாறு மொழிந்திருக்கின்றன. அதற்கு ஆக்யான மென்று பெயர். யாகங்கள் செய்து முடிந்த மாலை நேரத்தில் களைப்பாறும் பொருட்டு கதை சொல்வதும் மரபு. அதற்குப் பாரிப்லவ மென்று பெயர். அக்கதையைக் கேட்டு யஜமான்கள் இன்புறுவார்கள்.

உபநிஷத்தில் வரும் ஆக்யானம் — யாக்ஞவல்க்ய ரென்னும் இனிய முனிக்கு இரு தாரங்கள் இருந்தனர்

என்றும், அதில் ஒருவர் பெயர் மைத்ரேயீ மற்றொருவர் பெயர் காத்யாயினீ என்றும்' பிரதர்தனன் என்னும் ஒரு அரசன் இருந்தான். அவன் இந்திரனோடு போரிட்டான் என்றும், ஜானசுருதி யென்பவன் ஒரு வேந்தன் அவன் ரைக்வனிடம் சென்று சம்வர்க்க வித்தையைக் கேட்டான் என்றும் உரைத்திருக்கின்றன. இவையெல்லாம் ஆக்யானம்.

இங்கு உபநிஷத்தில் உரைக்கப் பெற்ற ஆக்யானம் கருமத்திற்கு அங்கமா அல்லது வேதாந்த வித்தையை விளக்கும் பொருட்டா என்பது ஐயம். உனக்கு எவ்வாறு தெரிகிறதெனின்? கருமத்திற்கு அங்கமென்று தெரிகிறது. ஏனெனின், இதில் ஆக்யானம் சமானமாக இருக்கிறது. பொதுவாக இருப்பதால் வித்தை முக்கியமல்ல. சி. அவ்வாறு பூர்வபக்ஷி சொல்வாயாகில் அது பொருந்தாது. எதனாலோ வெனின், 'விசேஷிதத்வாத்' ஒன்றைக் குறித்து சொன்னதால் ''பாரிப்லவம் ஆசக்ஷீத ஆக்கியானத்தைச் சொல்லுங்கள் என்றும், 'மநுர்வைஸ்வ தோ ராஜா, சூரியனது புதல்வன் ராஜாமநு வென்றும் விசேஷமாக விளம்பியிருக்கிறது. சுருதியில் பொதுவாகக் கூறியிருந்தால் பாரிப்லவம் என்னும் விசேடம் பொருளற்றதாகும். எனவே வேதாந்தத்தில் விளம்பிய உபாக்யானம் வித்தையை விளக்கும் பொருட்டென்பது உறுதி. சூ. 23.

மேலும் அதைத்தானே அறுதியிட்டு உறுதியாக அருளுகின்றார்.

**ஸூ. ததா[2] சைக[1] வாக்யதோ பபந்தாத்[4] : 3—4—24**

ததா,[1] ச, ஏக வாக்யத: உபபந்தாத்[3 4] என்று பிரிக்கவும்.

ப.உ. ச[1] = இன்னும். ததா[2] = மேலே சொன்ன மாதிரி. ஏகவாக்யதா உபபந்தாத் = அந்தந்த ஆக்யானத்திற்கு அண்மையில் வரப்பட்ட அந்தந்த வித்தையோடு சம்பந்தம் இருப்பதால்.

வி.உ. ஆக்கியானத்திற்கு பாரிப்லவ அர்த்தம் பொருந்தாதென்று புகன்ற பின்னர் அதற்கு அண்மையிலிருக்கும் வித்தை நிமித்தமென்று[1] தான் பொருள் கொள்ள வேண்டும். அது தான் முறை. இரண்டிற்கும் தொடர்பு இருக்கிறது. ஆங்காங்கு வருகிற கதை ஆங்காங்கு உள்ள வித்தையை விளக்கவும் ஞானத்தைத் துலக்கவும் சௌகரியமாக இருக்கும். இரண்டும் இணைந்திருப்பதால் ஒரு வாக்யம் என்று உணரவேண்டும். மைத்ரேயி என்னும் தன் மனையாளுக்கு யாக்ஞவல்க்கியர் 'ஆத்மாவா அரேதிருஷ்டவ்ய என்று சொன்னார். அரே! அருமைமனைவியே! ஆத்மாவைத் தரிசிக்கவேண்டும் என்று கூறினமையாலும் வித்தையோடு ஆக்யானமும் சேர்ந்திருப்பதாலும் ஏக வாக்கியம் என்று எளிதில் உணரலாம். மேலும் ''பிராஞோஸ்மி பிரக்ஞாத்மா'' நான் அறிவு வடிவ பிராணன் என்பதாலும் வாக்கியத்தின் ஒற்றுமைக் காணப்படுகிறது.

மேலும், ஜானசுருதியின் கதையில் ''வாயுர்வாவ சம்வர்க்க:,, என்றதால் ஏக வாக்கியம் காணப்படுகிறது. இவை யனைத்தையும் எண்ணிப் பார்க்கும் பொழுது ஆக்யானங்களனைத்தும் பாரிப்லவ் அர்த்தத்தின் பொருட்டன்று. பின்னை, வித்தையை விளக்கும் பொருட்டு என்று அறியவும். சூ. 24

4 3 4
(5) அக்னி இந்தனுதி அதிகரணம்.

அ—கை

இது வரை இயம்பியது என்னே, பிரஹ்ம வித்தை யக்ஞ கருமத்திற்கு அங்கமில்லே. அது இயல்பாக முக்தியைத் தரத்தக்கது. இதை வலியுறுத்த சூத்திரம்:-

1 3 4 3
**சூ. அதஏவச அக்நி இந்தநாதி அநபேக்ஷா : 3—4—25**

அத:, ஏவ, ச, அக்நி, இந்தனுதி, அநபேக்ஷா என்று பிரிக்கவும்.

ப.உ. அத ஏவ = வித்தைமுக்தியைத் தரத்தக்கதால்; அக்னி இந்தநாதி = கருமங்களே அநபேக்ஷா = விரும்புவதில்லே.

வி. உ. ''புருஷார்த்தோ அத:'' என்னும் வாக்கியத்தால் தத்வ ஞானம் வீட்டையளிக்கும் என்று விளம்பியிருக்கிறது. இதனுல் அக்னி சம்பந்தி வர்ண, ஆசிரம கருமங்கள் ஞானத்திற்குத் தேவையில்லே. தத்வ ஞானம், 'தத்துவ ஞானமொன்றே தந்திடும் கைவல்யத்தை என்கின்றது சமயோ சிதமாலே'. கருமத்தை விரும்பாமலே மக்களுக்கு முக்தியை நல்கின்றது. ''தத்வ ஞானம் — மெய்யுணர்வு. கைவல்யம் = வீடு. மற்றவை வெளி. மெய்யணர்வு வினேகளே விரும்பாமலேத் வீட்டைத் தருகின்றதா அல்லது விரும்பித் தருகின்றதா வென்று சந்தேகம் எழுந்த போது ''தேனைதி பிரஹ்மவித் புண்யகிருத் தைஜஸ:'' தூய மனத்தையுடைய ஆத்ம ஞானி தத்வஞானத்தால் முக்தியைப் பெறுகிருன் என்று பெருமறை பேசுகின்றது. அக்னி இந்தனம் என்ற வாக்யம் கருமத்தைக் குறிக்கின்றது. எனவே தத்வஞானம் தானுகவே தந்திடும் வீட்டையென்பது உறுதி. சூ. 25,

(6) சர்வா பேக்ஷா அதிகரணம்.

அ—கை.

தத்வஞானம், வீடு என்னும் பயனையளிப்பதற்கு கருமத்தை விரும்பவில்லை. ஆனாலும் ஞானத்திற்காகக் கருமம் வேண்டுவதுதானே யென்னும் சங்கையை நீக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

**சூ. சர்வாபேக்ஷாச யக்ஞாதி சுருதேரஸ்வவத் : 3 – 4—26**

சர்வா பேக்ஷா ச யக்ஞாதி சுருதே:, அஸ்வவத் என்று பிரிக்கவும்.

ப.உ. சர்வாபேக்ஷா = ஞானம் எல்லாக்கருமங்களையும் விரும்புகின்றது. யக்ஞாதிசுருதே: = யக்ஞமுதலிய கருமங்களால் ஞானத்தைப் பெறவிரும்புகின்றார்கள் என்று சொல்வதால். அஸ்வவத் = எவ்வாறு குதிரை தேரில் பூட்டப்படுகிறதோ அவ்வாறு கலபபையில் அல்ல; அதுபோல் கருமமும் ஞானத்திற்குச் சாதனமேயன்றி முக்திக்கு அல்ல என்று அறிக.

வி: உ. இங்கு கரும ஞானத்தைப் பற்றி விசாரிக்கப் படுகிறது. ஞானத்திற்கு முற்றிலும் கருமம் தேவையா, தேவை யில்லையா? தேவை யென்றால் முழுக்கத் தேவையா, சிறிதளவு தேவையா? சிறிதளவு தேவையானால் முந்திய சூத்திரத்தில் அநபேக்ஷா வென்று சொல்லி முற்றிலும் தேவையில்லை யென்று மொழிந்திருக்கிறீர்களே, அது நியாயமா? என்பாயாகில் பதில் கூறுவோம். சர்வா பேக்ஷா = ஞானம் கருமங்களை விரும்புகின்றது. பூ. அது என்னை, முன்னர் ஞானம் கருமத்தை விரும்பவில்லை யென்றீர், இப்பொழுது விரும்புகின்றது என்கின்றீர். இது முறைதானா? சி. முறைதான். எங்ஙனமெனின்.

ஞானம் தனது உத்பத்திக்காக சில கருமத்தை விரும்புகின்றது. எல்லா கருமத்தையும் விரும்பவில்லை. மேலும், உத்பத்திக்காக விரும்புகின்றதோயன்றி முக்திக்காக அல்ல. இதற்கு என்னபிரமாணம் என்பாயாகில், யக் ஞாதி சுருதிப் பிரமாணம். அது என்ன என்பாயாகில்,

3

''தமேதம் வேதாநுவசநேந" ஞானிகள் அந்த ஆன்மாவை யாகம், தானம், தபசு முதலிய சாதனங்களால் அறிய விரும்புகிருர்கள் என்று மறை மொழிகின்றது. இதனுல் வித்தை கருமத்திற்கு அங்கமென்று தெரிகிறது. ஆன்மாவை யறிவதற்கு வித்தை சாதன மென்று தெரிகிறது.

மேலும் எல்லா வேதங்களும் எந்தப் பொருளை விளக்கு கின்றதோ, எதைப் பெறுவதற்கு தபசுகளைச் சொல்லுகின்ற னவோ, எதை யறிய வேண்டு மென்று பிரஹ்மச்சரியத்தைப் பாலனஞ் செய்கின்றனரோ, அப்பொருளை யுனக்கு சுருக்கமாகச் சொல்லுகின்றேன் என்று சுருதி யுரைக்கின்றது. இதனுலும் ஆஸ்ரம கருமத்திற்கு வித்தை சாதனமாகக் காணப்படுகிறது. இன்னும் 'கஷாயபக்தி' கருமம், வெறுப்பு, விருப்பு என்னும் குற்றங்களைப் போக்கி, அகத்தை தூய்மை செய்வது கருமம். ஞானம் பரம கதியான மோக்ஷத்திற்குச் சாதனம். வினையினுல் பாவம் அகன்ற பின்னர் ஞானமுண்டா கின்றது. ஆகையால் ஆஸ்ரம கருமம் மோக்ஷத்திற்குக் காரணம்அன்றென்பது உறுதி. சூ.26

அ—கை.

ஆன்மாவையடைவதற்கு விரிவான சாதனம் ஏதாவது உண்டா? எல்லோருக்கும் அது பொதுவாக இருக்குமா என்னும் வினுவிற்குப் பதிலாக சூத்திரம் வருமாறு :-

**ஸூ: ஸமதம ஆதியுபேத ஸ்யாத் ததாபி து தத்விதே: ததங்கதயா தேஷாம் அவஸ்ய அநுஷ்ட்டேயத்வாத் :**
3—4—27

சமதமாதியுபேத :, ஸ்யாத், ததாபி, து, தத்விதே:, ததங்கதயா, தேஷாம், அவஸ்ய, அநுஷ்ட்டேயத்வாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ததாபி = விதியில்லாதிருப்பினும் சமதமாதி உபேத ; ஸ்யாத் = தத்வ ஞானத்தை விரும்பும் மக்கள் சமதம முதலிய சாதனங்களைச் சம்பாதிக்க வேண்டும். ததங்கதயா = (ஏனெனின்) ஞானத்திற்கு அங்கமாக அதை சொல்லிருக்கிறது. அது—சாதனம். தேஷாம் = சமமுதலிய சாதனங்களை விதித்திருக்கிறது. அவஸ்ய அநுஷ்ட்டேயத்வாத் = சாதனங்களை விதித்திருப்பதால் (அவைகளை) உறுதியாகச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

வி.உ. யாராவது ஒருவேளை சாதனங்களைச் சொல்வது முறையல்ல வென்று எண்ணினால் அது முறையல்ல. சாதனங்களைச் சாத்திரங்களில் விதிக்கவில்லை யென்றுசொன்னாலும் அதுவும் முறையன்று. கருமங்களை விதிக்காது போனாலும் சாதனங்களை விதித்திருக்கிறது. ''தஸ்மாத் ஏவம் வித்'' என்று பகவான் யாக்ஞ்ய வல்க்யர் ஜனகனுக்கு அருளுகின்றனர் — 'சாந்தோதாந்த...' என்னும் வாக்கிய மூலமாக சமதம முதலிய கருவிகளை விதித்திருப்பதால் அவஸ்யம் அவைகளைச் சம்பாதித்தல் வேண்டும்.

பஸ்யதி என்னும் பதத்தால் விதியைக் காணோமே என்பாயாகில் அது முறையன்று. மாத்யந்திநி சாகையை யோதுபவர் 'பஸ்யேத்' என்று படித்திருக்கிருர்கள். அதனல் விதி காணப்படுகிறது. எனவே கருவி கரணங்களைத் தேடிக் கொள்வது அவஸ்யமாகும். மந்த மத்யம அதி காரிகளுக்கு யக்ஞாதி கருமங்களும் சாதனமாம். இதை யினிய கீதையில் இறைவன் அருளுகின்றனன். "யக்ஞோ
3
தானம் தபஸ்சைவ பாவனநி மநீஷிணும்" கீ. (18-3) தனஞ்ஜய! யக்ஞம், தானம், தபசு இவை யெல்லாம் அதிகாரிகளைத் தூய்மைப் படுத்துகின்றன, என்று தாமோதரன் சாற்றுகின்றனன்.

இதை வேறு விதமாக விளம்பினும் அமையும். யக்ஞ யாகாதி கருமம் பரம்பரா சாதன மென்றும், சமதமாதி சாதனம் பஹிரங்க சாதனமென்றும் பகரலாம். ஆகையால் சாதனங்களைத்தேடுவது நலம் சூ. 27

4

(7) சர்வாந்ந அநுமதிஅதிகரணம். 28—31

அ—கை.

மறையில் சில இடங்களில் பிராண வித்தையின் முறைகளை உணர்ந்தவர்கள் எதை யுண்டாலும் ஒரு குற்றமும் இல்லை யென்று உரைத்திருக்கிறது. ஆகையால் அதிகாரிகளுக்கு அன்ன விசாரஞ் செய்ய வேண்டுமா வேண்டாமா என்பது வினு. அதற்குப் பதில்

1 3

## சூ. சர்வாந்நாநுமதிஸ்ச பிராணுத்யயே தத்தர்ஸநாத்: 3—4—28

1

சர்வாந்ந அநுமதி:, ச, பிராண, அத்யயே, தத் தர்ஸநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிராண அத்யயே = பிராணன் பிரியும் தருணத்தில் சர்வ அந்ந அநுமதி : = எந்த உணவையும் உண்ண அநுமதி வழங்குகின்றன. நூல்கள் என்பது கருத்து. தத் தர்சனுத் = ஆரணங்கள் அருளுகின்றன.

வி.உ. சாந்தோக்கிய உபநிடதத்தில் பிராணசம்வாதம் என்னும் ஒருபகுதி வருகிறது. அதில் அன்னத்தைப் பற்றி விசாரிக்கப்படுகிறது. பிராணன் பிரிகிறபோது "நஹவா அஸ்ய,, பிராணனைப் பற்றி நன்கு உணர்ந்தவன் ஆவி பிரிகிற பொழுது எந்த அன்னத்தை யுண்ணவேண்டும், எதை யுண்ணக் கூடாது என்று விசாரிக்க வேண்டுவதில்லை. சகல உடம்புக்குள்ளிருந்து உணவே யுண்கின்ற பிராணன் நானுக இருக்கிறேன் என்று ஞானியறிகிருன். அவனுக்குப் பசி வந்தபோது எதையும் உண்ணலாமென்று உரைத்திருக்கிறது. இவ்விதி சமதம முதலிய சாதனங்களை வித்தைக்கு அங்கமாக விதித்திருக்கிறதே அதைப்போன்று இதுவும் விதித்திருக்கிறதா என்பது கேள்வி. அல்லது வித்தையைத் துதிக்கும் பொருட்டா என்று பூர்வபட்சியின் வினு. நினது மதம் என்ன, எனது மதம் எதையும் உண்ணலாமென்பது தான். ஏனெனின் உண்ணலா மென்று விசேஷப் படுத்தி விளம்பியிருப்பதால்.

சி. அங்ஙனம் ஆயின் இதை யுண்ண வேண்டும் இதை யுண்ணக் கூடாதென்று உரைக்கும் நூல்களுக்கு முரண்வருமே. பூ. வாராது. ஏனெனின், சாமான்ய விசேஷ ரூபமாக விலக்கு உண்டாகும். பொதுவாக ஹிம்சை செய்யக் கூடாதென்று உரைப்பினும், யாகத்தில் வதை செய்யலா மென்று வரைந்திருக்கிறது. அது போலறிக. மேலும் எந்தப் பெண்ணையும் விரும்பலாம் என்பது வாம தேவ வித்தை. இது பொது. ஆனல் தரும நூல் உரிய மங்கையை

மட்டும் மணந்து கொள்ள வேண்டு மென்று மொழிகின்றது. இம்மாதிரி சாமான்ய விபாக சாத்திரம் எவ்வுணவையும் உண்ணலாம் என்னும் விசேட சாத்திரத்தை மறுக்க இயலாது.

சி. அவ்வாறு நீ, கூறுவாயாகில் அது பொருந்தாது. எவ்வுணவையும் உண்ணலாம் என்பது விதியல்ல. எங்ஙனமெனின், இங்கு விதாயக சப்தமன்று. 'நஹவா' என்னும் சுருதி பிராணோபாசகனுக்கு எவ்வுணவையும் உண்ணலாமென்று நிகழ் காலத்தில் நிகழ்த்திருப்பதால் விதியில்லை. எல்லா உணவுகளையும் உண்ணலாமென்னும் இடத்தில் நாய்மாம்சத்தையும் சேர்ந்திருக்கிறது. ஆனால் மனித உடம்போடிருக்கும் ஜீவன் நாய் மாம்சத்தையுண்ண இயலாது. எனவே யெல்லா உணவும் பிராணனுக்கு உரியவை யென்று எண்ணலாம்.

ஆகவே எல்லா உணவையும் உண்ணலாமென்னும் வாதம் அர்த்த வாதமகும். அர்த்தவாதம்—புகழ்ந்து பாடுதல். அதுவும் (பிராணாத்யயே) என்னும் சொல், ஆவிபிரியுந் தருணத்தில் அதைக் காக்கும் பொருட்டு உண்ணலா மென்று உரைத்திருக்கிறது. இதற்கு ஓரிதிகாசமுளது. பாஞ்ஜாலம் என்னும் மாநிலத்தில் குருதேசம் என்னும் சிறிய தேசம் இருந்தது. அங்கு காலத்தின் வலியால் மழைபொய்த்தது. அதனால் பஞ்சம் நேர்ந்தது. விளைந்த அன்னமும் பனி மழையால் பாழாயிற்று.

அங்கு சாக்ராயணர் என்னும் ஒரு வேதியர் இருந்தார். அவர் அரும் பசியின் கொடுமையால் தன் இல்லக் கிழத்தியுடன் நாடு கடந்து காடுவழியாக வரும் நாளில் ஒரு சிறிய கிராமம் தென்பட்டது. அங்கு வீட்டின் முற்றத்திலிருந்து ஒருயானைப்பாகன் மட்கலத்தில் நனைந்த

உழுந்தைத் தின்று கொண்டிருந்தான். அவனிடம் இவ் வேதியர் சென்று அப்பா! பசிப்பிணியால் வருந்துகின்றேன் நீ உண்ணும் உணவில் சிறிது தருவாயாக என்றார். அவன் ஐயா! இது உணவல்ல உழுந்து, அதுவும் உண்ட சேஷம், எச்சில், இப்பாவத்தை யெவ்வாறு செய்வேன் என்றான். அவர் அப்பா! ''ஆபத்துக் காலத்தில் மரியாதா நாஸ்தி. என்னும் பழ மொழி போல் இதைக்கொடுத்து எனது பிராணனைக் காப்பாயாகவென்று வாங்கி உண்டார் என்பது இதிகாசம்.

இச்சுருதிக்கு நினைவு என்னை? உடம்புக்குள் இருக்கும் உறுப்புக்களில், பிராணன் சிறந்தது. அதை ரக்ஷிக்கும் பொருட்டு ஆவிதுறக்கும் சமயத்தில் இன்னது இனிய தென்று பாராமல் உண்ணலாம் என்பதுதான் மறைமுடிவு. எனவே சர்வ அன்ன அநுமதி விதியல்ல என்பது வேதாந் தத்தின் துணிபு. சூ. 28,

அ—கை.

வேறு விதமாகவும் இதை விரித்து உரைப்பதற்கு சூத்திரம் வருமாறு :-

3 4
சூ அபாதாசச : 3—4—29

ப.உ. உண்பன உண்ணுதென என்னும்விபாகம் — பிரிவு நூல்களை விலக்க முடியாததால் சர்வான்ன அநுமதி விதியல்ல. 'நஹறவா' என்னும் சாஸ்திரம் அர்த்த வாதம் எனப்படும்.

வி.உ. இவ்வாறு நிரூபணஞ் செய்த பிறகு நல்ல நிலையில் இதை யுண்ணவேண்டும் இதை யுண்ணலாகாது என்று உறுதி செய்திருக்கிறது :-

ஆஹார சுத்தௌ சத்வசுத்தி:, சத்வ சுத்தௌ
4
துர்வாஸ்மிருதி : ஸ்மிருதி லம்பே சர்வகிரந்தீநாம் விப்ர மோக்ஷ :- 11

பொ.ள். ஆஹார சுத்தௌ = உணவு (ஒருவனுக்கு) தூய்மை யாக இருக்குமானுல். சத்வ சுத்தி: = மனத் தூய்மை உண்டாகும். சத்வசுத்தௌ = தூய்மையான மனதில் துர்வாஸ்மிருதி: = உறுதியான உணர்வு உதிக்கும். ஸ்மிருதிலம்பே = மெய்ஞ் ஞானம் தோன்றியபிறகு, சர்வ கிரந்தீநாம் (இதயத்திலிருக்கும்) எல்லாத் துன்பங்களும் விப்ரமோக்ஷ: = விரைந்தோடும். என்பது சாந்தோக்கியத் தின் கருத்து. இதனுல் உணவை உணர்ந்து உண்ண வேண்டும் என்பது இனிது புலனும். சூ, 29,

அ—கை.

ஆபத்துக் காலத்தில் அக்ஞன், அறிஞன் அனைவரும் கிடைத்த உணவையருந்தலாம் என்றும், நல்ல நிலையில் யாரும் நல்ல உணவை உண்ணவேண்டும் என்றும் ஸ்மிருதி நூல்களில் உரைத்திருக்கிற தென்பதற்கு சூத்திரம் :-

1
## சூ. அபிசஸ்மர்யதே : 3—4—30

1
அபிச, ஸ்மர்யதே என்று பிரிக்கவும்.

ப.உ. அபிச = மேலும். ஜீவித அத்யயம் ஆபந்நோ'' என்னும் ஸ்மிருதி நூல்களில் வித்வான் அல்லது அவித்வான் யாராயிருப்பினும் நல்ல உணவு கிடைக்காத காலத்தில் எதையும் அருந்தலாம் என்று அருளி இருக்கிறது.

வி.உ. மனித இனம் இரு பிரிவாக இருக்கிறது. அக்ஞன் என்றும் அறிஞனென்றும். இருவரும் உணவுக்குப்

பஞ்சம் ஏற்பட்டு அன்னங் கிடைக்காத வேளேயில் எதை யருந்திலுைம் தோஷமில்லே. என்று சொல்லியிருக்கிறது. அறநூல்களில். அவை ஜீவித அத்யயம் ஆபந்நோயோ அந்நம் அத்தியதஸ்தத : லிப்யதே நஸபாபேந பத்மபத்ரம் இவாம்பஸா''

பொ.ள். ஜீவித அத்யயம் = வாழ்நாளில் ஆபத்து வந்த போது ஆபந்ந : = அதையடைத்தவன். யத; தத: அந்நம் அத்தி = எந்த உணவை உண்ணுகின்ருனே. (அவன்) பாபேந = பாவத்தால். ந லிப்யதே=பற்றமாட் டான். (எதுபோல) அம்பசா பத்மபத்ரம் இவ=தண்ணீரில் தாமரைப் பற்ருதது போல என்று உணரவும். இது உண வில்லாத போழ்து எதையும் உண்ணலாம் என்பதற்கு ஸ்மிருதி.

இனி நல்ல நிலேயில் உள்ளவர்கள் எதையும் அருந் தவோ பருகவோக் கூடாதென்பதற்குப் பிரமாணம். ''மத்யம் நித்யம் பிராஹ்மண:'' அறிவாளிகள் குடிப் பழக்கத்தை முற்றிலும் விட்டுவிட வேண்டுமென்றும், ''சுராபஸ்ய பிராஹ்மணஸ்ய உஷ்ணும் ஆசிஞ்சேயு:'' குடிப்பழக்கமுடைய அந்தணன் தொண்டையில் கொதிக்கிற சாராயத்தை விட வேண்டும். சுராபா : கிருமயோபவந்தி அபக்ஷ்யபக்ஷணுத் என்றுங் கூறியிருக்கிறது. கள் அருந்துபவர் விஷக் கிருமியாகப் பிறக்கிருர்கள் என்று அற நூல்கள் அறைகின் றன. இதனுல் அறிவுள்ள மக்கள் ஆராய்ந்து உணவை யுண்ண வேண்டுமென்பது தெளிவாகிறது. சூ. 30.

அ—கை.

இப்பொழுது சுருதி மூலமாகவும் விரும்பத் தகாத உணவை வெறுக்கத் தக்கதென்று உணர்த்தும் பொருட்டு சூத்திரம் :-

3 3

## சூ. ஸப்தஸ்ச அதோ அகாமகாரே : 3—4—31

1

சப்த:, ச, அத:, அகாமகாரே என்று பிரிக்கவும்.

ப.உ. அகாமகாரே = மனம் போல வியவகாரம் செய்யப்படா தென்பதற்காக சப்த: = "தஸ்மாத் பிராஹ்மண:" என்னும் சுருதி பிரமாணம். அத: = பிராணனை யறிந்தவன் எதையும் உண்ணலாம் என்று மொழிந்தது அர்த்த வாதமாகும்.

வி.உ. மனம் போனப் போக்கெல்லாம் போக வேண்டாம் மாற்றானை உறவென்றுக் கொள்ள வேண்டாம் என்பது உலகநீதி. எனவே மனதில் தோன்றியவாறு செய்யப்படாது. இதை சுருதியும் விலக்குகின்றது. இதை—அசைவ உணவை. இந்நிஷேதத்தை கடவல்லியைக் கற்கின்ற வேதியர்கள் விளக்குகின்றனர். இவ்வாக்கியங்களெல்லாம் அர்த்த வாதமேயன்றி விதியன்று. சூ. 31.

4

### (8) ஆஸ்ரம கருமாதிகரணம். (32—'35)

அ—கை.

இதுவரைக் கூறியதாவது—ஞானம் வந்த பிறகும் தீய உணவுகளை யுண்ணலாகாதென சொல்லப்பட்டது. இனி ஞானிக்குக் கருமம் செய்ய வேண்டுமா வேண்டாமா? வேண்டுமானால், எதைச் செய்ய வேண்டும் எதைச் செய்யக் கூடாது என எழும் ஐயத்தை யகற்றும் பொருட்டு சூத்திரம் :-

## சூ. விஹிதத்வாச்ச ஆஸ்ரம கர்மாபி 3—4—32

1

விஹிதத்வாத், ச, ஆஸ்ரமகர்ம, அபி யென்று பிரிக்கவும்.

ப.உ.ச=ஐயத்தை யகற்றும் பொருட்டு. அபி=ஆஸ்ர மத்தில் அழுந்தியிருக்கும் முமுக்ஷுவிற்கும். ஆஸ்ரமகர்ம= நித்யகருமம் செய்ய வேண்டும். ஏனெனில், விஹிதத்வாத்= நூல்களில் 'யாவத் ஜீவம்' என்று மொழிந்திருப்பதால்.

வி.உ. மேலே ஞானி யென்றது ஞானத்தை யடைய விரும்புபவனே. ''சர்வாபேக்ஷாச'' என்னுஞ் சூத்திர உரை யில் கருமத்தைச் செய்வது வித்தைக்காக என்று விளம்பி யிருக்கிறது. இப்பொழுது வித்தையை விரும்பாதவன் வினைகளைச் செய்ய வேண்டுமா வேண்டாமா என்னும் ஐயத்தை ஆராய்கின்றனர்.

பூ. வேதத்தில் வித்தைக்காக நித்திய கருமத்தைச் செய்ய வேண்டும் என்றதால் வித்தையை விரும்பாதவன் செய்ய வேண்டுவதில்லை. வேறு பயனை விரும்புபவனும் அதைச் செய்ய வேண்டுமானால் நித்திய கருமம் வித்தைக்கு என்பது வீணாகும். அது மட்டும் அல்லாமல் நித்திய அநித்தி யங்களுக்குப் பகையேற்படும் என்பது பூர்வ பட்சம். சி. இவ்வாறு சொல்லுவாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், ஆஸ்ரம நிஷ்ட்டை யுடையவனுக்கு அவஸ்யம் நித்திய கருமங்கள் செய்ய வேண்டும். அதிகாரியானாலுஞ் சரி, அனதிகாரியானாலுஞ் சரி கடமையைச் செய்வது முறை யாகும். வித்தை விரும்பாதவன் நல்வினை செய்வானானால் அது அவனுக்கு வித்தையில் விருப்பை யூட்டும், முமுக்ஷு செய்வானாயின் அவனுக்கு அது ஞானத்தை நல்கும். ஆக ஞானிநீங்கலாக யாவரும் நல்வினை செய்வது நலமேசூ. 32.

அ—கை.

வித்தையை விரும்பாதவனுக்கும் நித்திய கருமத்தை விதித்தால் வித்தைக்கு அது எங்ஙனம் சாதனமாகும் என்ற கேள்விக்குப்பதில் சூத்திரம் :-

## ஸூ. சஹகாரித்வேந ச 3—4—33

ப.உ. ச = மேலும். சஹகாரித்வேந = (வித்தைக்கு (இது) உபகாரியாயிருக்கின்றது.

வி.உ. பொதுவாக எல்லோரும் நல்வினையை நலம்பெறச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. அங்ஙனம் ஆயின் யக்ஞ ஆதி கருமங்கள் ஞானத்திற்கு உதவமாட்டா என்றதற்குப்பதில் சித்தாந்தி — யக்ஞயாகாதி கருமங்கள் ஞானத்திற்கு உதவாதென்பது முறையன்று. ''தமேதம் வேதாநுவசநேந'' என்னும் மறையால் விதித்திருக்கிறது. குலாசார வினைகளும் தீய குணங்களைப் போக்கித் தூய உணர்வை நல்கும் என்பதில் சிறிதளவேனும் ஐயமில்லை. எங்ஙனம் காமிய வினைகள் சொர்க்கத்தைப் பயக்குமோ அங்ஙனம் நிஷ்காம வினைகளும் தத்வ ஞானத்தைத் தரும் என்பதில் என்ன சந்தேகம்.

தர்ச பூர்ணமாச கர்ம சொர்க்கத்தை யளிப்பதற்கு அன்னிய கருமத்தின் உதவியை விரும்புகின்றது, ஆனால் ஞானம் எதையும் விரும்புகிறதில்லை. இருப்பினும் நிஷ் காம கருமம் ஞானத்திற்கு உதவி புரிகின்றது. எனவே ''சாஸ்த்ரீயம் கர்ம ஸர்வை : கர்த்தவ்யம்'' என்பது சங்கர பாஷ்யம். நூல்களில் கூறிய வினைகளை நுண்ணியர்கள் செய்ய வேண்டுமென்பது மேற்கூறிய வாக்கியத்தின் பொருள். நல்வினை பக்தி வாயிலாக அறிவை வளர்க்கும். ''பக்திர் ஞாநாய கல்பதே'' என்பது பாகவதம். பக்தி ஞானத்தைப் பெருகச் செய்யும் என்கின்றது. ''யாவத் ஜீவம்'' என்னும் கல்பித வாக்கியம். விதி நித்யம். அதற்குப் பலன் வித்தையன்று. 'வேதாநு' என்னும் விதி வாக்கிய நித்தியம் அன்று. அதற்குப் பயன் வித்தை. எனவே நல்ல கருமம் அறிவிற்கு உபகாரகம் என்பது கருத்து. சூ. 33

அ—கை

இதுவரை அதிகாரிகளுக்கு அகத் தூய்மைக்கும், அறிஞர்களுக்கு உலகத்தின் பொருட்டும் பயனைக் கருதாது நல்வினைகளைச் செய்ய வேண்டும் என்று மொழிந்து, வழி பாட்டிற்காக வினைகளை எவ்வாறு செய்ய வேண்டுமென் பதை வரும் சூத்திரத்தினால் வரையப்படுகிறது :-

சூ சர்வதாபி த ஏவ உபய லிங்காத் 3—4—34

சர்வதா, அபி, த, ஏவ, உபய லிங்காத் என்று பிரிக்கவும்.

ப.உ. தேஏவ = யக்ஞாதி கருமம். சர்வதாபி = ஆஸ்ரமத்தைக் கருதியும், வித்தையைக் கருதியும் எப்போதும் கருமத்தைச் செய்ய வேண்டும். உபயலிங்காத் = (இவ் விஷயத்தில்) 'யக்ஞேந விவிதிஷந்தி என்பதும், அநாஸ்ரித கர்மபலம் என்னும் ஸ்மிருதியும் லிங்கமாகும். லிங்கம் — பிரமாணம்.

வி.உ. ஆஸ்ரமத்தை நோக்கும் போது — நித்திய கருமங்களையும், வித்தையை நோக்கும் போது அக்னி ஹோத்திர கருமங்களையும் செய்ய வேண்டும். தஏவ என்ற சொல் கருமங்களில் வருகின்ற ஐயத்தை யகற்றுகின்றது. இவ்விஷயத்தில் சுருதியும் ஸ்மிருதியும் பிரமாணமாகும். சுருதியில் என்ன சொல்லியிருக்கிறது? அறிவாளி உபநிஷத் தில் உரைக்கப் பெற்ற ஆன்மாவை யறிய அவாக் கொள்ள வேண்டும் என்று உரைத்திருக்கிறது.

ஸ்மிருதியில் என்ன மொழிந்திருக்கிறது? உள்ளத்தின் தூய்மைக்காகப் பயனைக் கருதாது வினைகளைக் குயிற்ற வேண்டும் என்று விளம்பி இருக்கிறது. குயிற்றுதல் —

செய்தல். இவையிரண்டும் ஞானத்திற்காகத்தான். வேத முறைப்படி கருப்பாதானத்திலிருந்து மரணம் வரை நாற்பத்தெட்டு சம்ஸ்காரம் அறநூல்களில் அருளியிருக்கின்றன. அவை :- கருப்பாதானம் 14 மஹாயக்ஞம் 5 சோமஸ்தம் 7 அவி: சமஸ்தம் 7 பாகசமஸ்தம் 7 வேதாத்யயனம் 1 பிராயணம் 1 கருமம் 1 ஜபம் 1 மரணம் 1 உடல் வெந்து நீருவது 1 எலும்புகளைக் குவிப்பது 1சிரார்த்தம் முதலியவை. இவையெல்லாம் ஞானத்திற் கென்றே கொள்ள வேண்டும். சூ. 34.

அ—கை

கூறிய தருமத்தின் மகிமையை மீண்டும் கூறல் :-

## சூ. அநபிபவம்ச தர்ஸயதி 3—4—35

அநபிபவம், ச, தர்ஸயதி என்று பிரிக்கவும்.

ப.உ. ச = மேலும் அநபிபவம்=பிரமசரிய முதலிய சாதனத்தோடு கூடிய அதிகாரியின் ஆத்மா அழிகிறதில்லை. தர்ஸயதி = ''ஏஷஹி ஆத்மா என்னும் மறை வரைகின்றது. வரைவது — சொல்வது.

வி.உ. ஆஸ்ரம கருமம் வித்தைக்குத் துணைக் காரணம். இது எங்ஙனம் தெரிகிறதெனின்? ''ஏஷஹீ ஆத்மா ந நஸ்யதி யம் பிரஹ்மசரியேண அநுவிந்ததே" சா.உ. (8-5-3) யம் = எந்த ஆத்மா=ஆத்மாவை. பிரஹ்மசரியேண =தவமுதலிய சாதனத்தால். அநுவிந்ததே = அடைகிருனே அந்த ஆத்மா ந நஸ்யதி = அது நாசத்தை யுறுவதில்லை. என்பது மறையின் பொருள். இதனாலும் ஆஸ்ரம கருமங்கள் வித்தைக்கு உதவியாக இருக்கிறதென்பது தெளிவாகிறது, சூ. 35

அ—கை

மீண்டும் வழிபடுங் கருமங்களை வலியுறுத்தி மொழிகின்றது வருஞ் சூத்திரம் :-

சூ. அந்தரா[1] சாபிது[3] தத் திருஷ்டே: 3—4—36

அந்தரா, ச, அபி, து, தத் திருஷ்டே : என்று பிரிக்கவும்.

ப.உ. து = எதிரியின் வாதத்தை யிடிப்பதற்கு. அந்தரா= எந்த ஆஸ்ரமத்திலும் சேராதவனுக்கும் பிரஹ்ம வித்தையில் அதிகாரமுண்டு. தத்திருஷ்டே: = ரைக்குவன் முதலிய மறைகள் காணக் கிடக்கின்றன.

வி.உ. எந்த ஆஸ்ரமத்திலும் இணையாதவனை விதுரன் என்று சொல்லப்படுகிறது. பொன், பொருள் முதலிய செல்வங்கள் ஒன்றுமில்லாமலும் ஒரு ஆஸ்ரமத்தோடு உறவு கொள்ளாமலும் திரிகிறவனுக்கு தத்வ ஞானத்தில் உரிமை யுண்டா இல்லையா என சங்கையுண்டாகிறது. உன் மதம் என்ன? பூ. அவனுக்கு தத்வ ஞானத்தில் உரிமையில்லை. ஏனெனின், ஆஸ்ரம கருமங்கள் ஞானத்திற்கு நிமித்தமாக நவிலப் பட்டிருக்கிறது; நவிலுதல் — சொல்லுதல். ஆனால் அவர்களுக்கு கருமங்களில் அதிகாரமில்லை. சித்தாந்தி — ''அந்தரா சாபிது'' ஆஸ்ரமங்களில் எதிலும் சேராதவனுக்கு ஜெபம் அர்ச்சனை, பூஜை முதலியவற்றின் வாயிலாகத் தத்வஞானத்திற்கு அதிகாரம் உண்டு. எவ்வாறு எனின்? அவ்வாறு மறைகள் காணக் கிடக்கின்றன. ரைக்குவன் வாசக்னவீ முதலிய மகான்கள் எந்த ஆஸ்ரமத்திலும் இணையாமல் இருந்தும் பிரஹ்ம ஞானத்தைப் பெற்றிருக்கின்றனர் என்று பெரும் மறைகள் பேசுகின்றன. இதனாலும் விதுரர்களுக்கு வித்தையில் உரிமையுண்டென்பது தெளிவாகிறது. சூ. 36.

அ—கை

இதைப்பற்றி ஸ்மிருதி நூல்களும் இயம்புகின்றன.

## சூ. அபிசஸ்மர்யதே[1] 3—4—37

அபி,ச, ஸ்மர்யதே என்று பிரிக்கவும்.

ப.உ. ஆஸ்ரமங்களில் சேராத சம்வர்த்த ஆதிகளை யும் மகா யோகி யென்று வரைந்திருக்கிறது.

வி.உ. சம்வர்த்தர் என்னும் சில யோகிகள் பிறந்த கோலத்தோடுத் திரிந்தார்கள். அவர்களையும் ஸ்மிருதி தத்வ ஞானி யென்று சொல்லுகின்றது. சூ. 37

அ—கை.

இவ்வறிவு நூல்களும் அற நூல்களும் அருளியதால் ஆன பயனென்ன என்பவர்க்குப் பதில் சூத்திரம் :-

## சூ. விசேஷ அநுக்ரஹஸ்ச[3][1] 3—4—38

விசேஷ அநுக்ரஹ :, ச, என்று பிரிக்கவும்.

ப.உ. ச = மேலும். அநுக்ரஹ : = ரைக்குவன் முதலிய ஆஸ்ரமத்தில் பொருந்தாதவர்க்கும் தயவு செய்து ஆன்ம ஞானத்தை யருளியிருக்கிறது. ரைக்குவன் மெய் உணர்வைப் பெற்று மேதினியில் திகழ்ந்தான் என்று மறையிற் கண்டோமே.

வி.உ. மறைகளில் "ஜப்யே நைவது" என்கின்றது. இறைவன் நாமத்தைச் சொல்வதால் ஞானி இயல்பாகத் தூய்மை அடைகிறுன் என்பது மேலே மொழிந்த வாக்கியத் தின் பொருள். ஜெபம், தபம், நாமஸ் மரணம் முதலியவைகளை

யிறைவன் அவர்களுக்கு கிருபை செய்து அளிக்கிருன் என்பது கருத்து. இந்த ஜென்மத்தில் வினைகளைச் செய்யா திருப்பினும் ஜென்மாந்தரத்தில் செய்த வினைப் பயனுக அவர்களுக்கு மெய்யுணர்வில் உரிமை உண்டென்பதில் உறுதி.

3 4

அநேக ஜன்ம சம்சித்தஸ் ததோயாதி பராங் கதிம். கீதை 6-45

கீழ்ப் போன அநந்த பிறவிகளில் செய்த தவப் பயனுக மனத் தூய்மையை அடைந்து மெய்யுணர்வால் முக்தியை அடைகிரு னென்பது கீதையின் கருத்து. இதனுலும் இவனுக்கு வித்தையில் அதிகாரம் உண்டென்பது சொல்லாமலே தெரிகிறது. கண்கண்ட பயனைத் தரும் தத்வ ஞானம் விலக்குதல் இல்லாமலே மாணவனுக்கு அதிகாரத் தை யளிக்கின்றது. இதனுலும் விதுரனுக்கு வித்தையில் உரிமை யிருக்கிற தென்பது தெளிவு. சூ. 38

அ—கை

உரைத்ததை மீண்டும் உறையும் பொருட்டு சூத்திரம் :-

3

## சூ. அதஸ்து இதரஜ்ஜ்யாயோ லிங்காச்ச 3—4—39

3 1

அத:, து, இதர, ஜ்யாய:, லிங்காத், ச, என்று பிரிக்கவும்.

ப.உ. அதஸ்து = ஆஸ்ரமங்களில் சேராதவனைப் பார்க்கிலும். இதர — ஆஸ்ரமிகள். ஜ்யாய : = சிறந்த வர்கள். லிங்காத் = சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் பிரமாண வாக்கியம் உள.

வி.உ. எதிலும் சேராதவனைப் பார்க்கிலும் ஏதாவது ஒன்றில் சேர்பவன் சிறந்தவன். நான்கு ஆஸ்ரமத்தில் ஏதாவது ஒன்றில் இணைந்திருப்பது நலம். இதனால் ஞானத்திற்கு அதிகாரி யெளிதில் ஆகிறான். இஃது எங்ஙனம் தெரிகிறதெனின். ''தேனைதி பிரஹ்மவித் புண்யகிருத் தைஜஸஸ்ச[1]'' பிரு. உ. (4-4-9) புண்யகிருத் = தெளிந்த மனத்தையுடையவன் தைஜஸஸ்ச = தெள்ளிய மதியுடையவன். பிரஹ்மவித் = ஆத்மஞானி. வீட்டையடைகிறான் என்பது வேதத்தின்பொருள். இது சுருதிலிங்கம். ''அநாஸ்ரமி நதிஷ்டேத'' இது ஸ்மிருதிலிங்கம். ஒரு நாளும் ஆஸ்ரமங்களில் சேராமல் இருக்கக் கூடாது. அங்ஙனம் இருப்பானாகில் ஒரு ஆண்டு கடும் தவம் செய்ய வேண்டும் என்பது ஸ்மிருதிலிங்கம். லிங்கம் — பிரமாண வாக்கியம். சூ. 39.

## 10 தத்பூத அதிகரணம். சூ. 40

அ—கை.

விதுர பிரசங்கத்தை முடித்து விட்டு அன்னிய பிரகரணத்தைத் தொடக்குகின்றார். யாராவது ஆஸ்ரமத்தை விட விரும்பினால் விடலாமா விடக்கூடாதா? விட்டுவிட்டால் அவன் என்னவாகிறான் எனபதற்கு சூத்திரம் வருமாறு :-

### தத்[3] பூதஸ்ய[4]து நாதத்பாவோ[3] ஜைமி[4]நேரபி நியமாத்தத்[4]ரூப[4] அபாவேப்ய: 3—4—40

ப.உ. தத் பூதஸ்ய, து, ந, அதத்பாவ:, ஜைமிநே;, அபி, நியம, அதத்ரூப, அபாவேப்ய : என்று பிரிக்கவும்.

தத்பூதஸ்ய[4] = சிறந்த ஆஸ்ரமத்தை யடைந்த மனிதனுக்கு அதத்பாவ:[4] = அந்த ஆஸ்ரமம்: ந = நழுவதில்லை

ஜைமிநேர்பி = (இது) ஆசாரிய ஜைமிநிக்கும் சம்மதம். நியம அதத்ரூப அபாவேப்ய: = நியமம், அதத்ரூபம், அபாவம் இவையெல்லாம் காரணம்.

வி.உ. பிரஹ்மசரிய ஆஸ்ரமத்திலிருந்து இல்லறப் திற்குச் செல்ல வேண்டும் என்ருல் தனது எண்ணத்தைப் பொருத்திருக்கிறது. அதுபோல் நழுவுதலும் உண்டு என்பது பூர்வ பக்ஷியின் மதம். சித்தாந்தி — அது பொருந்தாது. ஏனெனின், ஊர்த்வரேத ஆஸ்ரமம் என்று முன் மொழிந் திருக்கிறது. நான்காவதான சந்யாஸ ஆஸ்ரமத்திலிருந்து நழுவுதல் கூடும் என்பது பரமதம். கூடாதென்பது வேதாந்த மதம். இங்ஙனம் சூத்திரத்தில் இரு சொல் வந்திருக்கின் றன. ஒன்று தத்பூதம், மற்றது அதத்பாவம். தத்பூதம் = துரிய ஆஸ்ரமத்தை யடைந்தவன். அதத்பாவம் — ஒரு போதும் நழுவுவதில்லை யென்பதை இரு சொல்லும் உணர்த்து கின்றன. அதத்பாவம் என்னும் சொல் நழுவுதல் இல்லை யென்பதை யிடித்துப் புகட்டுகின்றது.

மேலும் வழுவுதற்குரிய சாதனம் இன்மையால் துரிய ஆஸ்ரமி எங்ஙனம் விழுவான். எந்த ஆஸ்ரமங்களிலும் திடமாக இருந்து இறையருளையும் குருவருளையும் பேணிக் காத்து நல்லறமென்னும் துறவறம் பூண்டவன் அல்லல் நிறைந்தஅந்நிய அறங்களில் எவ்வாறு இறங்குவான். என்பதைக் குறிக்கும் பொருட்டு நியமம், அதத்ரூபம், அபாவம்என்ருர்.

ஆசாருேடு அணுகியிருந்து துறவறத்தை நன்ருகப் பேணி நலம் பெற வேண்டும் என்பது உபநிஷத்தின் கருத்து. உபநிடதங்கள் அனைத்தும் படிப்படியாக ஏறச் சொல்வதே யொழிய இறங்கச் சொல்வதல்ல. ஏறியவன் இறங்குவது முறையுமல்ல, பூர்வ வினைகளைச் செய்யும்



நிமித்தம் மேலே ஏறியவன் சிறந்தவனுகான். “ஸ்வதர்மே

நி[4]தனம் ஸ்ரேய:" என்று செங்கண்மால் செப்புகின்ருர். கீதை.

முறையென்ன? எவனுக்கு எதை விதித்திருக்கிறதோ அது அவனுக்கு தருமம், எவனால் எது செய்ய இயலுமோ அது அவனுக்குத் தருமமன்று. வேதத்தில் எது விதித்திருக்கிறதோ அது தருமம் எனப்படும். ''நேதம் யதிதம் உபாசதே'' நீ யெதை வழிபடுகின்ருயோ அது பிரஹ்மம் அன்று என்பது கேனம். இதனாலும் நியமநூல் வலிமையுடைய தென்பது தெற்றெனத் தெளிவாம். இவ்விஷயத்தில் ஜைமிநி வியாசர் இருவர் கருத்தும் ஒரே மாதிரி என்பது உண்மை. சூ. 40,

(11) அதி[4]கார அதிகரணம்: சூ. 41-42

அ—கை

தவறின போதிலும் அதற்காகப் பிராயசித்தஞ் செய்து கொள்ள இயலுமா இயலாதா என்பதற்குச் சூத்திரம் :-

**சூ. ந[1]சாதி[4]காரிகமபி பதநாநுமாநாத் த[3]த்யோகா[3]த் 3—4—41**

ந[1], ச, ஆதி[4]காரிக[1]ம், அபி, பதநாநுமாநாத், தத் அயோகாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஆதிகாரிகம் அபி = உரிமையை அடைந்த பிரமசாரிக்கும். ந = இல்லை. பதநாநுமாநாத் = ஆருடனுக்கு பாவத்திலிருந்து விடுதலையில்லை யென்று அறநூல்களில் அருளியிருக்கிறது. தத் அயோகாத் = அஃது பொருத்தமின்மையால்.

வி.உ. உறுதியான விரதம் பூண்ட பிரமசாரி ஒரு வேளை தனது நிலையில் இருந்து நழுவுவானாகில் அவன் பிரமசரிய அவகீர்ணி யெனப்படுபவன். அவன் அக்குற்றத் திலிருந்து தப்புவதற்குப் பெரும துன்பத்தை யநுபவிக்க வேண்டும். இதுதான் இவனுக்குப் பிராயச்சித்தம் எனப் படும். இது உண்மையா இல்லையா என்பது சந்தேகம். நைஷ்டிக பிரமசாரிக்கு பிராய சித்தமில்லை. ஆனால் உப குர்வாணனுக்கு உண்டு. பிரமசாரி இருவகைப் படுவன். ஒருவன் நைஷ்டிகன், மற்றொருவன் உபகுர்வாணன். ஒருபடி குறைந்தவன். இவன் ஒரு குற்றத்தைச் செய்வானா னால் அதற்குப் பரிகாரம் உண்டு. ஆனால் நைஷ்டிகன் செய் வானாகில் அவனுக்கு அது இல்லை அது—பரிகாரம். அரிந்த சிரசு எவ்வாறு பொருந்தாதோ அது போலறிக. சூ. 41

அ—கை.

இவர்கள் விஷயத்தில் இன்னும் சில ஆசாரியர் மதத்தை மொழிவதற்கு வரும் சூத்திரம்:—

## சூ உபபூர்வமபி த்வேகே பாவம் அஸநவத் ததுக்தம் 3—4—42

(4 above "பாவம்", 3 above "ததுக்தம்")

உபபூர்வம், அபி, து, ஏகே, பாவம், அஸநவத் தத், உக்தம் என்று பிரிக்கவும்.

ப. உ. அபிதுஏகே=சில வாதிகள். (இதை) உப பூர்வம்=பாதகம் என்று எண்ணாமல் உபபாதகமென்று எண்ணுகிறார்கள். அஸநவத்=தகாத உணவையுண்ணும் உபகுர்வாண பிரமசாரிக்கு பாவமும், அதற்குப் பரிகாரமும் சொல்லப்பட்டிருக்கிறது. அது போல நைஷ்டிக பிரமசாரிக் கும் பரிகாரம் சொல்லி இருக்கிறது. ததுக்தம்=நூல்களில் உரைக்கப்பட்டிருக்கிறது.

வி. உ. சிலர் கூறுவதாவது சாதாரண பிரமசாரி பாவத்தைச் செய்த போதிலும் அவர்க்கு பரிகாரம் வழங்கி யிருப்பது போல நைஷ்ட்டிகனுக்கும் பரிகாரஞ் சொல்லியிருக் கிறதென்பர். மகாபாதகமாயிருந்தால் பிராயசித்தமில்லை, இது உபபாதகந்தான். எனவே இதற்கு விலக்கு உண்டு. யாதோ ஒரு கால வேற்றுமையால் உணவின் மாற்றம் ஏற் பட்ட போதினும் அதற்குப் பரிகாரம் இருப்பது போல இதற் கும் உண்டென்பது உறுதி. சூ. 42.

12 பஹிர் அதிகரணம். சூ. 43.

அ—கை

இவ்விஷயத்தில் வியாசர் தமது மதத்தை யுணர்த் துகிறார். சூத்திரம் :-

**சூ பஹிஸ்து உபயதாபி ஸ்மிருதேர் ஆசாராச்ச**[3 4 2 1]
**3—4—43**

பஹி:, து, உபயதா, அபிஸ்மிருதே:, ஆசாராத், ச, [4 2 1 1] என்று பிரிக்கவும்.

ப.உ. உபயதாபி = நைஷ்ட்டிகனுக்கு மகாபாதக மாய் இருந்தாலுஞ் சரி அல்லது உபபாதகமாயிருந்தாலும் சரி. பஹிஸ்து = (அவனை) வெறுக்க வேண்டும் ஸ்மிருதே: = ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கிறது. ஆசாராத் = அவ்வாறு ஆன்றோர் ஒழுகி வந்திருக்கிறார்கள். ச = உறுதி.

வி.உ. நைஷ்ட்டிகனுக்கும் உபகுர்வாணனுக்கும் உள்ள வேற்றுமை யென்னை? முறையே அவன் விவாகம் பண்ணக் கூடாது இரண்டாமவன் பண்ணிக் கொள்ளலாம். யாராக இருந்தாலும் சரி, மகாபாதகமாயிருப்பினும் அல்லது உபபாதகமாயிருப்பினும், இவர்களை அறிஞர்கள் விலக்கி வைத்திருக்கிறார்கள். நூல்களும் நிந்தித்திருக்கின்றன.

இதனை ஆசாரதர்ஸநாத்து என்னும் சூத்திரத்தில் இனிது காணலாம். சூ. 43,

சுவாமி அதிகரணம். சூ. 44-46

அ—கை

இதுவரை மேலேயேறி கீழே விழுந்த பிரமசாரிக்கு வித்தையில் உரிமையில்லை யென்று சொல்லி இனி வழிபாட்டிற்கு உரியவன் யஜமானனா. அல்லது புரோகிதனா என்ற ஐயத்தை அகற்றும் பொருட்டு சூத்திரம் :-

**சூ. ஸ்வாமிந : பலசுருதே : இதிஆத்ரேய : 3—4—44**

சுவாந்:, பலசுருதே:, இதி, ஆத்ரேய என்று பிரிக்கவும்.

ப.உ. சுவாமிந: = யஜமான் என்பவனே வழிபாட்டிற்கு உரியவன். இதி ஆத்ரேய: = ஆத்ரேயரென்னும் முனிவின் பதம். பலசுருதே: = இந்த விஷயத்தில் பயனைச் சொல்லும் சுருதித் தெரிய வருகிறது.

வி.உ. அங்கங்களோடு வழிபடும் உபாசனையில் யஜமானுக்கும் புரோகிதருக்கும் உரிமை இருப்பது போலக் காணப்படுகிறது. இவர்கள் இருவரில் எவர்க்கு உரிமை யென்பதை யுணர்த்தும் பொருட்டு 'சுவாமிந :' என்கின்றது. பூர்வபக்ஷி = வழிபாடு கருமம் யஜமானுக்கு சொந்தம். ஏனெனின்? இங்கு பலனைக் கூறும் மறை காணப்படுகிறது. ''வர்ஷதி ஹாஸ்மை வர்ஷயதி ஹயு ஏத தேவம் வித்வான் விருஸ்டௌ பஞ்சவிதம் சாமோபாஸ்தே''

சா.உ. (2—3—2) வர்ஷதி ஹாஸ்மை=எவனொருவன் மேலே மொழிந்த மாதிரி வித்வான்=அறிகிறானோ

அவன். வர்ஷயதி=மழையை யுண்டு பண்ணுகிறன். பஞ்ச விதம்=ஐந்து விதம். சாமம்=ஒருவிதமான சாம பக்தி விசேஷம். எவன் ஐந்து விதமான வழிபாட்டைச் செய்கிருனே அவனுக்காக மழை பெய்கிறது. இதுதான் பல சுருதி பயனைக் கூறும் சுருதி யென்பது பொருள். மழையில் ஐந்து விதமான வழிபாடு செய்யும் பொழுது அவனல் மழையை யுண்டு பண்ண இயலும். இம்மழை பெரிய பயன். இது யஜமானுக்கும் பயன் கர்த்தாவிற்கும் பயனுகும்.

ஏனெனின், அங்கத்தோடு வழிபடுவதால் அனைவர்க்கும் உரிய பயனை யளிக்கும் என்பதில் ஐயம் இல்லை. 'வர்ஷத்யஸ்மை' எவன் மழையை வழிபடுகிருனே அவனுக்காக நிறைய மழை பெய்கின்றது என்பது பொருள். "நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம். தொல்லுலகில் நல்லாரொருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழை, என்னும் ஔவையின் அமுத மொழியை ஈண்டு எண்ணி உணரப்பாலது. பொருள் வெளி ஆத்ம நேவா யஜமாநாய

3

வாயம் காமம் காமயநேதமாகாயதி" சென்பது சுருதி. பி.உ. (1—3=28)

இ-ள் ஆத்ம நேவா=தன் பொருட்டாவது. யஜமா நாயவா=சுவாமிக்காவது. யம் காமம் காமயதே=உத்காதா—உத்கானம் செய்பவன் யாருக்காகச் செய்கிருனே தம்

3

ஆகாயதி=அவனுக்காக அந்தப் பலன் சித்தியாகின்றது என்று ஆரணம் அருளுகின்றதே யெனின், அது சரியல்ல. எதனுலோ வெனின், அவன் வாசனீகன். வாயால் சொல்லுபவன். அவன்—புரோகிதன் என்று ஆத்ரேயரின் கருத்து. யஜமானுக் கென்பது முடிபொருள். சூ. 44,

அ—கை.

இந்த விஷயத்தில் இன்னும் ஔடுலோமி முநியின் மதத்தை அறிவிப்பதற்குச் சூத்திரம் :-

3

**சூ. ஆர்த்விஜ்யமித்யௌடுலோமிஸ்தஸ்மை ஹிபரிக்ரியதே 3—4—45**

ஆர்த்விஜ்யம், இதி, ஔடுலோமி:, தஸ்மை, ஹி, பரிக்ரியதே யென்று பிரிக்கவும்.

ப,உ. ஆர்த்விஜ்யம் = இவ்வுபாசனைக்குக் கர்த்தா இதி ஔடுலோமி: = இவ்வாறு ஔடுலோமி முநிவர் அருளுகின்ருர். ஹி = ஏனெனின், தஸ்மை = அந்த அங்கத் தோடு கூடிய வழிபாட்டிற்கு. பரிக்ரீயதே = தக்ஷிணை மூலமாக அவனை விலைக்கு வாங்கப்படுகிறது. அவனை = புரோகிதனை

வி.உ. நான் செய்கிறேன் என்னும் தன்மை யஜ மானுக்குக் கிடையாது என்று ஔடுலோமி மொழிகிருர். கர்த்திருத்வம் சுவாமியிடம் இருப்பதற்கு நியாயமில்லை. புரோகிதன் செய்கிருன். அதனுல் அவனிடம் இருப்பதற்கு நியாயமுண்டு. அங்ஙனம் இருப்பினும், பலன் கிடைப்பது சுவாமிக்குத்தான். ஏனெனின், யஜமான் அக்கருமத்தைச் செய்யும் நிமித்தம் பணம் கொடுத்து புரோகிதனை விலைக்கு வாங்கிக் கொண்டான். அவனுல் இவன் விற்கப்பட்டான். அவன்—சுவாமி. இவன்—புரோகிதன்.

ஆகையால் இவனுக்குப் பொருள் வாங்குவதில் மட்டும் உரிமையுண்டு, புண்ணியத்தில் இல்லை. பொருள் சிலவிட்ட சுவாமிக்குத்தான் புண்ணியத்தில் உரிமையுண் டென்பது ஔடுலோமி முநிவரின் மதம். சூ. 45

அ—கை.

இவ்விஷயத்தில் பகவான் வியாசர் தனது சம்மதத்தைச் சாற்றுகிருர். சூத்திரம் :-

## ஸூ. சுருதேஸ்ச[1] 3—4—46

ப.உ. ''யாம்வை காஞ்சந[1] என்னும் சுருதி[1] புரோகிதன் செய்யும் வினையின் பலன் யஜமானுக்கென்று கூறுகின்றது.

வி.உ. யாம்வை காஞ்சந யக்ஞேரித் விஜ ஆசிஷமாசாஸத இதி யஜமாநாளயவ தாமாசாஸத இதிஹோவாச[1] இதி, தஸ்மாத் உஹூ ஏவம் வித்[3] உத்காதா[3] பரூயாத்கம்[3] தேகாம மாகாயாநி[3]'' சா.உ. (1—8=9) என்கின்றது. யாம்வை காஞ்சந=புரோகிதன். யக்ஞே=யாகத்தில், ஏதாவதொன்றை விரும்புவாளுகில், அதை சுவாமிக்காகவே விரும்புவான். அம்மாதிரி அவன் சொன்ஞன். தஸ்மாத்=அதனுல். ஏவம் வித்=இம்மாதிரி யறிந்தவன். உத்காதா—புரோகிதன் சுவாமியிடம் மொழிகிருன்—உன்னிமித்தம் எதை விரும்பி வழிபாடு செய்வது என்று கேட்டதாகச் சுருதி சொல்லுகிறது. இதனுல் பலன் சுவாமிக்கு என்பதும், கருமம் புரோகிதனுக்கு என்பதும் இனிது புலனும். சூ. 46,

### சஹகாரியந்தர[4] வித்யதிகரணம்[4] சூ. 47-49

இம்மாதிரி பிரசங்க அநுசாரம் சகாம உபாசனையின் பலனையும், கர்த்தா இன்னுர் என்பதையும் உரைத்து விட்டு, இனி தத்வ ஞானத்திற்கு உரிமை ஒரு ஆஸ்ரமத்திற்கா அல்லது எல்லா ஆஸ்ரமத்திற்குமா என்னும் வினவிற்கு விடையளிக்கும் பொருட்டு சூத்திரம் :-

## 1 4 3<br>ஞ. சஹகாரியந்தரவிதி: பக்ஷேண திருதீயம் தத்வதோ<br>4 3<br>வித்யாதிவத் 3—4—47

4
சஹகாரியந்தர விதி:, பக்ஷேண, திருதீயம், தத்வத:, வித்யாதிவத் என்று பிரிக்கவும்.

ப.உ. சஹகாரியந்தரவிதி: = வேதத்தில் தத்வ ஞானத்திற்கு உதவி செய்கின்ற மௌனம் அபூர்வம் ஆனதால் அதை விதியென்று கொள்ள வேண்டும். திருதீயம் = சிரவணாதி சாதனங்களில் மூன்றாவது நிதித்யாசனம் மவுனம் என்று கொள்ளப்படுகிறது. தத்வத: = சாமான்ய ஞானத்தோடு கூடிய துறவிகளுக்கு இது விதிக்கப் பெற்றிருக்கிறது. பக்ஷேண = எந்த பட்சத்தில் வேற்றுமையுண்டாகுமோ அந்த பட்சத்தில் திட ஞானம் உண்டாகாமையால் இந்த விதி பொருத்தமேயாம். வித்யாதிவத் = எங்ஙனம் தர்ச பூர்ணமாச முக்கிய விதியில் அந்வாதான அங்கம் விதியாகுமோ அது போல இங்கும் மவுனம் விதியெனப்படும்.

வி.உ. விதுர ஆதி கடைமாணுக்கர்களுக்கு ஞானத்திற்குச் சாதனம் ஜெபம், தபசு, முதலியவை. இடைமாணுக்கனுக்கு சாங்க உபாசனை யென்று உரைத்துவிட்டு, தலை மாணுக்கனுக்குச் சாதனத்தை மொழியும் பொருட்டு சககாரியந்தர விதி யென்று விளம்பப்படுகிறது. பூர்வ பட்சத்தில் மாணுக்கனுக்கு மவுனம் இருக்க வேண்டுவதில்லை. சித்தாந்தப் பட்சத்தில் மவுனம் இருக்க வேண்டும்.

தர்சம் — அமாவாசை. பௌர்ணம் — பௌர்ணை. ''தஸ்மாத் பிராஹ்மண: பாண்டித்யம்'' அத: = ஆகையால் பிராமணன் தத்வ ஞானத்தை முழுதையும் அடைந்து

ஞானவலிமையால் இறை நிலையில் இருக்கப் பழக வேண்டும் என்றும், பிறகு பால்யத்தையும் அறிவையும் நன்கு பெற்று முனியாகின்றான் என்றும் மொழிந்திருக்கிறது. மௌனத்தையும் அமௌனத்தையும் நன்கு அடைந்து ஞானி கிருத கிருத்யனாகின்றான். பெற வேண்டியதைப் பெற்றவனாகின்றானென்பதுபொருள். இவ்வாறு பிரு.உ. (3-5,1)

இவண் சந்தேகம் உண்டாகிறது. என்ன சந்தேகம்? மவுனத்தை விதித்திருக்கிறதா இல்லையா என்பது ஐயம் பூர்வபட்சி — மவுனம் விதிக்க வில்லை: ஏனெனின் பால்யேநதிஷ்ட்டாசேத், குழந்தையைப் போல் இரு என்பதில் விதி முடிந்து விடுகிறது. 'அதமுனி' என்னும் வாக்கியத்தில் விதிக்கின்ற வேற்றுமையைக் காணோம். இதனால் இது அநுவாதம்.

சித்தாந்தி — அங்ஙனம் மொழிவாயாகில் அது பொருந்தாது. ஏனெனின்? விதியிருக்கிறது. என்ன விதி? சககாரி விதி. ஞானத்திற்கு உதவி புரிகின்ற விதி. ஞானியைப் போலவும் இருக்க வேண்டும் குழந்தையைப் போலவும் விருப்பு வெறுப்பு அற்று இருக்க வேண்டுமென்பது குறிப்பு. முனியென்னும் சொல் ஞானத்தைக் குறிக்கிறது. முநிநாமபியஹம் வியாச:, என்று கீதையில் சொல்வீரன் சொல்கின்றான். முநிகளில் நான் வியாசர் என்பது கீதையின் பொருள்.

தத்வதோ — அறிஞன் — துறவி இஃது எங்ஙனந்



தெரிகிறது? ''ஆத்மானம் விதித்வா'' ஆன்மாவை அடைந்த பிறகு மூன்று விதப் பற்றுக்களையும் அற்று விடவேண்டும். அதன் பிறகு இல்லந்தோறும் இரக்க வேண்டுமென்று இசைத்திருக்கிறது. இசைப்பது — உரைப்பது. இம்மாதிரி துறவிகளுக்கு அதிகாரம் வழங்கியிருக்கிறது. எனவே மௌனம் அதிக ஞானம் இல்லாத இடத்தில் விதியென்பது உறுதி. சூ. 47,

அ—கை.

இந்த மாதிரி பால்யாதி விசிஷ்டம் மௌனம் துறவறத்திற்குச் சொல்லியிருக்கிற போது சாந்தோக்கிய உபநிடதத்தில் ''அபிசமாவிருத்ய குடும்பே'' [4] என்று எவ்வாறு மொழிந்திருக்கிற தென்பது வினு. அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு :-

## சூ. கிருத்ஸ்ந [4] பாவாத்து க்ருஹிணோ [3] பசம்ஹார : 3—4—48

கிருத்ஸ்நபாவாத் [4], து, கிருஹிண [3], உபசம்ஹார : என்று பிரிக்கவும்.

ப.உ. கிருத்ஸ்நபாவாத் = இல்லறத்தில் விசேஷமாக விளங்குவதால். து = அதனுல் சமம், மௌனம் முதலிய சாதனங்கள் அவர்களுக்கு விதிக்கப் பெற்றிருக்கின்றன. கிருஹிணு = இல்லறத்தவருக்கும் உபசம்ஹார: = பொருத்தப்பட்டிருக்கிறது.

வி.உ. இங்கு சந்நியாச ஆஸ்ரமத்தை யொதிக்கி இல்லறத்தவர்க்கென்று சொல்லவில்லை பின்னே? துறவறத்தைக் கூறும் வாக்கியங்கள் மிகுதியாக இருப்பதால் சுருதியிலும் ஸ்மிருதியிலும் சொல்லியிருக்கிறதென்பது பொருள்.

சூத்திரத்தில் உள்ளது, என்னும் சொல் விசேடத்தை விளக்கும் பொருட்டு. இது மூலமாகத் துறவறத்தைத் துணிவுடன் விளக்கியிருக்கிறது. ''அபி சமாவிருத்ய [4] குடும்பே'' சா.உ. (8-15-1) குருகுலத்தில் இருந்து வெளியேறி இல்லம் புகுந்து புனித இடத்திலிருந்து வேதத்தை யோதுவதும் ஓதிவைப்பதும் என்று மொழிந்திருக்கிறதே, அங்ஙனம் இருப்ப, சமம், மௌனம் முதலியவை

யெவ்வாறு பொருந்தும் என்பது எதிரியின் வாதம். இதை நீக்குவதற்காக 'து' என்பதை உபயோகித்தார். இல்லறத் தவர்க்குப் பெரும் சுமைகளை விதித்திருக்கின்றது வேதம். தானம் பண்ணுங்கள், தருமஞ் செய்யுங்கள், யாகம் பண்ணுங் கள் என்றெல்லாம் பலவித காரியங்களை அவர்களுக்கு சுமத்தப் பட்டிருக்கின்றன. ஆகையால் அவர்களுக்கு ஆயாச மும் பிரயாசமும் அதிகம். இவை நீங்கலாக ஏனைய ஆஸ்ரமத்தாருக்கு விதிக்கப்பட்டதால் குற்றம் ஒன்றுமில்லை. சூ. 48,

அ—கை

மேலும் எல்லா ஆஸ்ரமத்தாருக்கு ப்ரஹ்ம வித்தை யில் உரிமையுண்டென்பதை யுணர்த்தும் பொருட்டு சூத்திரம் :4

3

சூ. **மௌநவத் இதரேஷாமபி உபதேஸாத் 3—4—49**

மௌவுனவத், இதரேஷாம், அபி, உபதேஸாத் என்று பிரிக்கவும்,

ப.உ. மௌனவத் = எங்ஙனம் மௌனமும் இல்லற மும் வேதத்திற்கு சம்மதமோ அங்ஙனம், இதரேஷாமபி = வானப் பிரஸ்த்தமும் பிரமச்சரியமும் கொள்ளப்பட்டிருக் கின்றன. உபதேசாத் = நான்கு ஆஸ்ரமங்களிலும் உள்ள வர்க்கு வேதத்தில் உபதேசம் செய்திருக்கிறது.

வி.உ. எவ்வாறு மௌனம் நான்காவது ஆஸ்ரமத் தாருக்கும் இல்லறத்தார்க்கும் சுருதியில் சொல்லி இருக் கிறதோ அவ்வாறு மற்றைய இரண்டு ஆஸ்ரமத்தாருக்கும் வேதத்தில் விதித்திருக்கிறது. இரண்டாவது தர்மஸ்கந்தத் தால் வனவாசியையும், மூன்றாவது தருமஸ்கந்தத்தால்

பிரம்மச்சாரிய ஆஸ்ரமத்தையும் கொள்ள வேண்டும் என்று முன்னே ஆரணம் அருளியிருக்கிறது. எனவே யெல்லோர்க்கும் தத்வ ஞானத்தில் உரிமையுண்டென்பது தெளிவு. இதரேஷாம் என்று பன்மையில் பகர்ந்தது பயிற்சியாளரின் வேற்றுமையால் என்று உணர்க. சூ. 49,

4

15 அநாவிஷ்கார அதிகரணம். சூ. 50

அ—கை.

முந்திய 'அதிகரணத்தில்' பால்யேன திஷ்ட்டாசேத், என்று மொழிந்திருக்கிறது. அங்கு பால்ய சப்தம் குழந்தையின் குணத்தைக் குறிக்கிறதா அல்லது கருமத்தைக் குறிக்கிறதா என்பது கேள்வி. அதற்குப் பதில் சூத்திரம் :-

## சூ. அநாவிஷ் குர்வந் நந்வயாத் 3—4—50

அநாவிஷ்குர்வத், அந்வயாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அநாவிஷ்குர்வந் = தனது குணங்களை வெளிப்படுத்தாது இருத்தல். அந்வயாத்=அவ்வளவுதான் ஞானப் பழக்கத்திருக்கு முறையாகும்.

வி.உ. ஞானிகள் தனது ஞான முதலிய பெருங் குணங்களை வெளிப்படுத்துவதில்லை. எது போல வெனின், பாலகனைப் போல. குழந்தைகள் தனது உள்ளக் கிடக்கையை யுரைக்கிறதில்லை. அதுபோல் அறிஞனும் தனது உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவதன்று. அவர்களுடைய பெரும் குணங்கள் அவர் செயலைக் கொண்டே தெரிந்து கொள்ளலாம். அவர்கள் உள்ளத்தில் தூய்மையான எண்ணமும் உடலில் தூய்மையான செய்கையும் இருக்கும்.

3 1

''அவ்யக்த லிங்கோ அவ்யக்த ஆசார:'' என்கின்றது சுருதி. அவர்களுடைய அடையாளங்களும் அவர்களுடைய

செயலும் மறைவாகவே யிருக்கும் என்பது மறையின் பொருள்.

இதனுல் ஞானிகள் ஞானத்தைப் பெற்று வலிமையாக இருக்க வேண்டுமென்று மறைகள் அருளுகின்றன. இவண் பால்யம் என்றது குழந்தையின் குணத்தைக் குறிக்குமே யன்றிக் கருமத்தைக் குறிக்காது. குழந்தையின் கருமம் மல மூத்திரங் கழிப்பது. இச்செயலே ஞானியோடு ஒப்பிட்டு பேச முடியாது. குழந்தையின் குணங்கள்—விருப்பு வெறுப்பு அற்ற நிலே. ராக துவேசம் இன்றிய தென்பது கருத்து. இதை ஞானியோடு ஒப்பிட்டு பால்ய பாவம் என்று மொழிந் திருக்கிறது.

இதற்கு மற்ருெரு அருத்தமும் உண்டு. பலம்—வலிமை. பலத்தின் அதிகம் பால்யம்—நிரம்பிய வலிமை யென்பது தெளிவு. ஞானத்தை யடைந்து நிரம்பிய வலிமை யுடையவனுக இருக்க வேண்டு மென்பது வேதத்தின் முடி பொருள். ஞானி—குழந்தையைப் போல மல மூத்திரம் கழிக்க வேண்டும் என்பது பூர்வ பட்சியின் மதம். குழந்தை யைப் போல புனிதமான உள்ளத்தை யுடையவனுக இருக்க வேண்டும் என்பது சித்தாந்தப் பட்சம்.

இதைப் பற்றி அற நூல்களும் விளக்குகின்றன—

யம் நசந்தம் நசாசந்தம் (1) நாசுருத்ம் ந பஹு (3) சுருதம்
நசுவிருத்தம் (3) நதுர்விருத்தம் (3) வேதகஸ்சித் ச (1) பிராஹ்மண:!!

இ—ள்

எவன் ஒருவன் சத்தையும், அசத்தையும், நல்லதை யும் கெட்டதையும் கேள்வியையும் மிகக்கேட்பதையும் அறிகிறதில்லேயோ அவன் பிராஹ்மணன். ஞானி என்பது பொருள்.

3 1
கூட தருமாஸ்ரிதோ வித்வான் அக்ஞாத சரிதம் சரேத் !
4 1 1
அந்தவத் ஜடவச்சாபி மூகவத் மஹீம் சரேத் !!

இ—ள்

ரகஸ்யமான தருமங்களைச் செய்து கொண்டு ஞானி யொன்றுந் தெரியாதவனைப் போலும், குருடனைப் போலும், ஊமனைப் போலும் மண்ணில் திரிய வேண்டும் என்கின்றன அறநூல்கள். இதனாலும் ஞானிகள் குழந்தையைப் போல அடக்கமாக இருக்க வேண்டும் என்பது இனிது புலனாகின்றது. சூ. 50,

4
(16) ஐஹிக அதிகரணம். சூ. 51

அ—கை

'சர்வா பேக்ஷாச' 3—4—26 என்னும் சூத்திரத்தில் இருந்து இதுவரை பலவிதமாக ஞானத்திற்குச் சாதனங்களை உறுதி செய்திருக்கின்றன. இச்சாதனத்தினால் விளைந்த தத்வ ஞானம் இந்த ஜென்மத்தில் கிடைக்குமா வேறு ஜென்மத்தில் கிடைக்குமா என்பதைப் பற்றி இவண் விசாரிக்கப்படுகிறது. இவண்—இங்கு. சூத்திரம் :-

4 3 3
**சூ ஐஹிகமபி அப்ரஸ்துத ப்ரதிபந்தே தத் தர்ஸநாத் 3—4—51**

ஐஹிகம், அபி, அப்ரஸ்துத பிரதி பந்தே' தத், தர்ஸநாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அப்ரஸ்துத பிரதி பந்தே=யாதொரு தடையும் இல்லை யெனின்; ஐஹிகம் அபி=இந்த ஜென்மத்திலும் ஞானம் உண்டாகும். தத்தர்ஸநாத்=அவ்வாறு அருளியிருக்கிறது ஆரணத்தில். ஆரணம்=வேதம்.

வி.உ. விசாரஞ் செய்த பிறகு என்ன உண்டாயிற்று?
பூ. இந்த ஜென்மத்திலேயே ஞானம் உண்டாகும். ஏனெனின், ஞானம் கேள்வியை முந்நிலையாகக் கொண்டிருக்கிறது. எனக்கு அடுத்த ஜென்மத்தில் ஞான முண்டாகட்டும் என்று யாரும் விரும்பமாட்டார்கள். ஆனால் இப்பிறவியிலேயே ஞானம் உண்டாகட்டும் என்றுதான் முயற்சிப்பார்கள்.

யக்ஞங்களும் கேள்வி மூலமாகத்தான் ஞானத்தையுண்டு பண்ணுகின்றது. எதனாலோ வெனின், ஞானம் பிரமாண ஜன்யம். பிரமாணத்தால் உண்டாகப் பட்டது. எனவே ஞானம் இப்பிறவியில் உண்டாக வேண்டும் என்பது பூர்வ பட்சம்.

சித்தாந்தி—அது முறையல்ல. என்னை? தடையில்லையென்னில் இந்தப் பிறவியிலும் உண்டாகலாம். தடையிருக்குமானால் மறுபிறவியிலும் உண்டாகலாம். பழவினையின் பயனைகத் தடைகள் வரும். தடை — அக்ஞானம், சந்தேகம், விபரீதம். இவைகள், "பல சென்ம பழக்கத்தாலே உடனுடன் வரும்" கைவல்யம். இவைகள் இருந்தால் இப்பிறவியில் வாராது. இல்லையாகில் வரும். வினைப் பயனை வெல்ல இயலாது. நல்லதென்று செய்வோம். அதற்கு மாருகத் தீமை வந்துசேரும். பழவினையில் வினையின் பரிபாகம் இருக்கிறது. பரிபாகம்—விளைவைக் கொடுக்கும் வலிமை. அது, தேச, கால நிமித்தங்களைப் பார்த்து தடைகளை விதிக்கின்றது. அது ஞானத்திற்குப் பிரதிபந்தம். அது இருக்குமானல் ஞானம் உதிக்காது. அது—தடை.

கேள்வியாலும் மனத்தாலும் உண்டாகும் ஞானமும் தடையின்றிதான் உண்டாகும், ஆகையால் இப்பிறவியிலும் உண்டாகலாம், மறு பிறவியிலும் உண்டாகலாம். இதை மனதில் வைத்துத்தான் நசிகேதனுக்கு நமன் நவில்கின்ருர். நிரம்பக் கேட்ட போதிலும், அதையடைகிறதில்லை. தெளிந்தவர்களும் அதைப் பெறுகிறதில்லை. சொல்வதும் ஆச்சரியம், கேட்பதும் புதுமை. வாமதேவர் கருவுற்ற நாள்

முதலாகக் கலைகளை நன்கு உணர்ந்திருந்தனர் என்றும், நெடுநாள் பயின்றும் விரோசன முதலியோர் மாறுபட்ட ஞானத்தை அடைந்தனரென்றும் மறைகள் கூறுகின்றன.

இவ் வாக்கியங்களால் வேறு வேறு பிறவிகளிலும் ஞானமுண்டாகும் என்பது தெளிவு. இன்னும் ஈசுவர கீதையும் இயம்புகின்றது — ஞானத்தைப் பெருமல் சரீரத்தை விட்டவன் துர்கதியை அடையமாட்டான் என்றும், மறு ஜென்மத்தில் ஞானிகள் குலத்தில் பிறப்பானென்றும், முந்திய பிறவிகளில் செய்த நல்வினைப் பயனுக இப்பிறவியில் ஞானம் உடனே வரும் என்றும் பகவான் உரைக்கின்ருர். இதனுலும் தடையில்லாதிருந்தால் இந்த ஜென்மத்திலும், தடையிருக்குமாளுல் ஜென்மாந்தரத்திலும் ஞானம் உதிக்கும் என்பது புலனுகின்றது. சூ. 51

4
முக்திப் பலாதி கரணம். சூ. 52,

அ—கை.

முக்தியை அடைய விரும்புபவர் முமுக்ஷு எனப்படுவர். அவர்கள் முதலில் சாதனங்களைப் பற்ற வேண்டும். அவ்வாறு பற்றினுலும் விக்னங்கள் இருக்குமானுல் மறு பிறவியிலும், இல்லாது போனுல் இப்பிறவியிலும் ஞானமுண்டாகுமென்று நவின்றிருக்கிறது. அதுபோல் முக்தி விஷயத்திலும் மேன்மை, தாழ்மையென்னும் சில விசேஷ நியமங்கள் உண்டா இல்லையா என்னும் ஐயத்தை யகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் ;-

**சூ. ஏவம் முக்திபல[2] அநியமஸ்[3]தத[2]வஸ்[4]த்தா அவதிருதே: [3]தத[2]வஸ்[4]த்தா அவதிருதே: 3—4—52**

ஏவம், முக்திப் பல அநியம:, ததவஸ்த்தா அவதிருதே:, ததவஸ்த்தா அவதிருதே: என்று பிரிக்கவும்.

ப.உ. ஏவம் = பிரஹ்மத்தை ஐயமற அறிவது போல, முக்தி பலாநியம: = முக்தியென்னும் பயனிலும் விசேஷ நியமம் இல்லை. ததவஸ்த்தா அவதிருதே: = ஏனெனின் வீடடைவதில் எல்லா வேதாந்த நூல்களிலும் ஒரே மாதிரி யோதியிருக்கிறது. ததவஸ்த்தா அவதிருதே: என்று இருமுறை மொழிந்தது அத்தியாய முடிந்ததற்காக.

வி.உ. முக்தியில் விசேஷ நியமங்கள் நூல்களில் விளம்பவில்லை. ஆகையால் இது விஷயத்தில் சந்தேகங் கொள்ளலாகாது. எங்ஙனம் என்பாயாகில், அதைப் பற்றி யுறுதியாகி விட்டது. வீடு என்னும் பொருள் வேதாந்தத்தில் ஒரே மாதிரி நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது. முக்தி யென்பது ஆன்மாவிற்கு அந்நியமில்லை. ஆன்மாவில் அநேக விதம் பொருந்தாது. சிறியதுமல்ல பெரியதுமல்ல என்றும், இந்த ஆன்மா அவ்வாறன்று என்றும், அதில் அந்நிய மில்லை யென்றும், ஈதனைத்தும் பிரஹ்மமென்றும், அவ்வான்மா மகான், அஜன், கிழப்பருவமற்றவன் என்றும், மரணமற்றது, அமிருதமுற்றது என்றும், அபயமென்றும் ஆரணங்கள் அருளியிருக்கின்றன.

காரணம் பலவாறு இருப்பினும் பயன் ஒன்றுகத்தான் இருக்கும். ஒரு குடம் என்னும் காரியத்தை யுண்டு பண்ண சக்ரம், மண், தண்ணீர் முதலிய சாதனம் பல, ஆனல் குடம் ஒன்றுதான். ஒருவிதந்தான். அதுபோல சாதனத்திலும், வித்தையிலும் பல விதம் காணப்படினும் வீடு என்னும் பயன் ஒன்றுதான். வீடு — மோட்சம். விடுதலையாகி அடையப்படுவதால் முக்தி, வீடு எனப்படும். முக்தியில் மேன்மை தாழ்மை யென்பது இல்லை. அதில் ஏற்றமோ, தோற்றமோ, மாற்றமோ அன்று. 'ஏகரச:' ஒரே படித் தானது.

சகுண பிரஹ்மத்தில் மாற்றம் இருப்பினும் நிற்குண பிரஹ்மத்தில் மாற்றம் இருப்பதன்று. யார் அதையெப்படி வழிபடுகிறார்களோ அது அப்படி ஆகிறதென்பது மறை மொழி. பூர்வபட்சி முக்தியில் அதிசயத்தை யுண்டு பண்ணி கருமத்தால் அடையலாமென்று கருதப் பார்க்கிறான். சித்தாந்தி நிரவயவ ஆன்மாவில் அதிசயம் — ஏற்றந் தாழ்வு இல்லை யென்பதைச் சொல்லி ஞானத்தினால் அடையப்படும் என்பதையும், முக்தி ஆன்ம ரூபமாக இருப்பதால் அதில் உத்கர்ஷம் அபகர்ஷம் இன்றென்பதையும் தெளிவு படுத்துகின்றனர். உத்கர்ஷம்=சிறப்பு. அ ப க ர் ஷ ம்= இழிவு.

எங்ஙனம் வாய்வாதி தடைகள் வந்ததும் நெருப்பு உண்டாகிறதில்லை. நெருப்பு — தீபம். உண்டானாலும் தாமதமாக உண்டாகும். தீபம் உண்டானபிறகு இருளைப் போக்குவதில் நேரமாகாதோ அங்ஙனம் தத்வ ஞானம் வந்த பிறகு அக்ஞானத்தை யோட்டுவதென்னும் பயனில் நேரமோ தூரமோ இல்லை. குணபேதத்தால் கருமத்தில் அல்லது உபாசனையில் வேற்றுமை யுண்டாவதால் அதை வழிபடும் கருமிகளுக்கும் உபாசகர்களுக்கும் பலவித (கதி,) பலன் உண்டாகின்றது, அவ்வாறு நிற்குண வித்தையில் உண்டாவதில்லை. எனவே ஞானிகளுக்கு ஆன்மாவின் அடைவு என்கின்ற கதியொரே மாதிரி யென்பது உறுதி. இதனால் முக்தியில் அதிசயம் இல்லை யென்பது இனிது புலனாம். சூ52 மூன்றாவது அத்யாயத்தின் நான்காவது பாதம் முற்றிற்று. மூன்றாவது அத்யாயமும் முற்றிற்று.

ஃ பவசங்கர தேசிகமே சரணம் ஃ



# சூத்திர அடக்கம்

உ

மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலய வெளியீட்டின்
புத்தக விபரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | பிரஹ்மானந்த யுக்திரத்னுகரம் | ரூ. | 15-00 |
| 2) | ஞானவாசிட்டம் | ரூ. | 15-00 |
| 3) | பக்தி ஞானுமிர்தம் | ரூ. | 4-00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம் | ரூ. | 2-00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம் | ரூ. | 5-50 |
| 6) | பிரமசூத்திரம் இரண்டாவது அத்யாயம் | ரூ. | 5-50 |
| 7) | குருபரக்கண்ணி | ரூ. | 1-00 |
| 8) | வேதாந்த ரத்னம் | ரூ. | 1-50 |
| 9) | ஸ்ரீ முருஹ கிருஷ்ண பஜனுமிர்தம் | ரூ. | 1-00 |
| 10) | சங்கர சரிதாமிர்தம் | ரூ. | 2-50 |
| 11) | பஞ்சாக்கினி வித்தையும் பக்திப் பாடல்களும் | ரூ. | 1-50 |
| 12) | நன்மொழிக் களஞ்சியம் ஐநூறு | ரூ. | 1-50 |
| 13) | சற்குருபாத வாழ்த்தும் வேதாந்த மஞ்சரியும் கீதையின் பெருமையும் | ரூ. | 2-00 |

ஸ்ரீ மீனும்பிகை அச்சகம், மதுரை-1, போன் : 32869